# வரலாறு

## தரம் 10

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்



சகல பாடநூல்களையும் இலத்திரனியல் ஊடாகப் பெற்றுக்கொள்வதற்கு
**www.edupub.gov.lk** வலைத்தளத்தை நாடுங்கள்.

| | | |
|---|---|---|
| முதலாம் பதிப்பு | - | 2014 |
| இரண்டாம் பதிப்பு | - | 2015 |
| மூன்றாம் பதிப்பு | - | 2016 |
| நான்காம் பதிப்பு | - | 2017 |
| ஐந்தாம் பதிப்பு | - | 2018 |
| ஆறாம் பதிப்பு | - | 2019 |



ISBN 978-955-25-0193-7

இந்நூல், கல்வி வெளியீட்டுத் திணைக்களத்திற்காக
ஹாப்பி ஹொலிடேய்ஸ் பிரைவேட் லிமிடெட்
71/2/B, M.V. பெரேரா மாவத்தை, சின்ஹரமுள்ள, களனி
அச்சகத்தினால் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

# தேசிய கீதம்

சிறீ லங்கா தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மணி லங்கா
ஞாலம் புகழ் வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளமையை நாட்டே
நகு மடி தனையோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல் செறி துணிவருளே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

ஒரு தாய் மக்கள் நாமாவோம்
ஒன்றே நாம் வாழும் இல்லம்
நன்றே உடலில் ஓடும்
ஒன்றே நம் குருதி நிறம்

அதனால் சகோதரர் நாமாவோம்
ஒன்றாய் வாழும் வளரும் நாம்
நன்றாய் இவ் இல்லினிலே
நலமே வாழ்தல் வேண்டுமன்றோ

யாவரும் அன்பு கருணையுடன்
ஒற்றுமை சிறக்க வாழ்ந்திடுதல்
பொன்னும் மணியும் முத்துமல்ல - அதுவே
யான்று மழியாச் செல்வமன்றோ.

ஆனந்த சமரக்கோன்
கவிதையின் பெயர்ப்பு.



''புதிதாகி, மாற்றமடைந்து சரியான அறிவின் மூலம்
நாட்டுக்குப் போன்றே முழு உலகிற்கும் அறிவுச் சுடராகுங்கள்''

## கௌரவ கல்வி அமைச்சரின் செய்தி

கடந்து சென்ற இரு தசாப்தங்களுக்கு அண்மிய காலமானது உலக வரலாற்றில் விசேட தொழினுட்ப மாற்றங்கள் நிகழ்ந்ததொரு காலமாகும். தகவல் தொழினுட்பம் மற்றும் ஊடகங்களை முன்னணியாகக் கொண்ட பல்வேறு துறைகளில் ஏற்பட்ட துரித வளர்ச்சியுடன் இணைந்து மாணவர் மத்தியில் பல்வேறு சவால்கள் தோன்றியுள்ளன. இன்று சமூகத்தில் காணப்படும் தொழில்வாய்ப்பின் இயல்பானது மிக விரைவில் சிறப்பான மாற்றங்களுக்கு உட்படலாம். இத்தகைய சூழலில் புதிய தொழினுட்ப அறிவையும் திறனையும் அடிப்படையாகக் கொண்டதொரு சமூகத்தில் வெவ்வேறு விதமான இலட்சக் கணக்கான தொழில்வாய்ப்புகள் உருவாகின்றன. எதிர்கால சவால்களை வெற்றிகொள்ளும் பொருட்டு நீங்கள் பலம்பெற வேண்டுமென்பது கல்வி அமைச்சரென்ற வகையில் எனதும் எமது அரசினதும் பிரதான நோக்கமாகும்.

இலவசக் கல்வியின் சிறப்புமிக்கதொரு பிரதிபலனாக உங்களுக்கு இலவசமாகக் கிடைத்துள்ள இந்நூலை சீராகப் பயன்படுத்துவதும் அதன்மூலம் தேவையான அறிவைப் பெற்றுக்கொள்வதுமே உங்கள் ஒரே குறிக்கோளாக இருக்க வேண்டும். அத்துடன் உங்கள் பெற்றோர்களுட்பட மூத்தோரின் சிரமத்தினதும் தியாகத்தினதும் பிரதிபலனாகவே இலவசப் பாடநூல்களை அரசினால் உங்களுக்குப் பெற்றுத்தர முடிகிறது என்பதையும் நீங்கள் விளங்கிக்கொள்ள வேண்டும்.

ஓர் அரசாக நாம், மிக வேகமாக மாறி வரும் உலக மாற்றத்திற்குப் பொருந்தும் விதத்தில் புதிய பாடத்திட்டத்தை அமைப்பதும் கல்வித்துறையில் தீர்க்கமான மாற்றங்களை மேற்கொள்வதும் ஒரு நாட்டின் எதிர்காலம் கல்வி மூலமே சிறப்படையும் என்பதை மிக நன்றாகப் புரிந்து வைத்துள்ளதனாலேயேயாகும். இலவசக் கல்வியின் உச்சப் பயனை அனுபவித்து நாட்டிற்கு மாத்திரமன்றி உலகுக்கே செயற்றிறன்மிக்க ஓர் இலங்கைப் பிரசையாக நீங்களும் வளர்ந்து நிற்பதற்கு தீர்மானிக்க வேண்டியுள்ளது. இதற்காக இந்நூலைப் பயன்படுத்தி நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு உங்களுக்கு உதவுமென்பது எனது நம்பிக்கையாகும்.

அரசு உங்கள் கல்வியின் நிமித்தம் செலவிடுகின்ற மிகக் கூடிய நிதித்தொகைக்கு பெறுமதியொன்றைச் சேர்ப்பது உங்கள் கடமையாவதுடன் பாடசாலைக் கல்வியூடாக நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு மற்றும் திறன்கள் போன்றவையே உங்கள் எதிர்காலத்தைத் தீர்மானிக்கின்றன என்பதையும் நீங்கள் நன்கு கவனத்திற்கொள்ள வேண்டும். நீங்கள் சமூகத்தில் எந்த நிலையிலிருந்தபோதும் சகல தடைகளையும் தாண்டி சமூகத்தில் மிக உயர்ந்ததொரு இடத்திற்குப் பயணிக்கும் ஆற்றல் கல்வி மூலமாகவே உங்களுக்குக் கிடைக்கின்றது என்பதை நீங்கள் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும்.

எனவே இலவசக் கல்வியின் சிறந்த பிரதிபலனைப் பெற்று, மதிப்பு மிக்கதொரு பிரசையாக நாளைய உலகை நீங்கள் வெற்றி கொள்வதற்கும் இந்நாட்டில் மட்டுமன்றி வெளிநாடுகளிலும் இலங்கையின் நாமத்தை இலங்கச் செய்வதற்கும் உங்களால் இயலுமாகட்டும் என கல்வி அமைச்சர் என்ற வகையில் நான் பிரார்த்திக்கின்றேன்.



***அகில விராஜ் காரியவசம்***
***கல்வி அமைச்சர்***

## முன்னுரை

உலகின் சமூக, பொருளாதார, தொழினுட்ப, கலாசார விருத்தியுடன் சேர்ந்து கல்வியின் நோக்கங்கள் மிக விரிந்த தோற்றமொன்றைப் பெற்றுள்ளன. மானிட அனுபவங்கள், தொழினுட்ப மாற்றங்கள் ஆராய்ச்சி மற்றும் புதிய குறிகாட்டிகளின்படி கற்றல் கற்பித்தல் செயற்பாடும் நவீன மயமாக்கப்பட்டுள்ளது. அதன்போது மாணவர் தேவைக்குப் பொருந்தும் விதமான கற்றல் அனுபவத்தை ஒழுங்கமைத்து கற்பித்தல் செயற்பாட்டை நடைமுறைப்படுத்திச் செல்வதற்கு பாடத்திட்டத்தில் காணப்படுகின்ற நோக்கங்களிற்கிணங்க பாடம் தொடர்பான விடயங்களை உள்ளடக்கிப் பாடநூல்களை ஆக்குவது அவசியமாகும். பாடநூல் என்பது மாணவரின் கற்றல் சாதனம் மாத்திரமல்ல. அது கற்றல் அனுபவங்களைப் பெறுவதற்கும் அறிவு, பண்பு விருத்திக்கும் நடத்தை மற்றும் மனப்பாங்கு வளர்ச்சியுடன் உயர்ந்த கல்வியொன்றை பெற்றுக் கொள்வதற்கும் மிகவும் உதவக்கூடியதுமாகும்.

இலவசக் கல்விக் கருத்திட்டத்தை நடைமுறைப்படுத்தும் நோக்கிலேயே தரம் 1 முதல் தரம் 11 வரையிலான சகல பாடநூல்களும் அரசினால் உங்களுக்கு வழங்கப்படுகின்றன. அந்நூல்களிலிருந்து உயர்ந்தபட்சப் பயன்களைப் பெற்றுக்கொள்வதுடன், அவற்றைப் பாதுகாப்பதும் உங்களது கடமையாகும் என்பதையும் நினைவூட்டுகின்றேன். பூரண ஆளுமைகொண்ட நாட்டிற்குப் பயனுள்ள சிறந்ததொரு பிரசையாகுவதற்கான பயிற்சியைப் பெற்றுக் கொள்வதற்கு இப்பாடநூல் உங்களுக்குக் கைகொடுக்கும் என நான் எண்ணுகிறேன்.

இப்பாடநூலாக்கத்தில் பங்களிப்புச் செய்த எழுத்தாளர், பதிப்பாசிரியர் குழு உறுப்பினர்களுக்கும் கல்வி வெளியீட்டுத் திணைக்கள உத்தியோகத்தர்களுக்கும் எனது நன்றிகள் உரித்தாகட்டும்.

**டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்
இசுருபாய
பத்தரமுல்ல.
*2019.04.10*

**கண்காணிப்பும் மேற்பார்வையும்**

| | | |
|---|---|---|
| டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க | - | கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்<br>கல்வி வெளியீட்டுத் திணைக்களம். |

**வழிகாட்டல் :**

| | | |
|---|---|---|
| டபிள்யூ. ஏ. நிர்மலா பியசீலி | - | ஆணையாளர் (அபிவிருத்தி)<br>கல்வி வெளியீட்டுத் திணைக்களம். |

**இணைப்பாக்கம்**

| | | |
|---|---|---|
| அ. குலரத்தினம் | - | உதவி ஆணையாளர்<br>கல்வி வெளியீட்டுத் திணைக்களம். |

**பதிப்பாசிரியர் குழு**

| | | |
|---|---|---|
| பேராசிரியர் ராஜ் சோமதேவ்<br>BA ,MPhil, Phd (சுவீடன்) | - | தொல்பொருள் பட்டப்பின் படிப்பு<br>நிறுவனம்<br>களனி பல்கலைக்கழகம். |
| பேராசிரியர் அங்குரன்கெத்த<br>BA, MA . Phd (இந்தியா) | - | வரலாறு கல்விப் பிரிவு<br>பேராதனைப் பல்கலைக்கழகம். |
| பேராசிரியர் பத்மசிறி கன்னங்கர<br>BA, MA. | - | வரலாற்றுக் கல்விப் பிரிவு<br>ஸ்ரீ ஜெயவர்தனபுர பல்கலைக்கழகம். |
| கலாநிதி அனுசூயா சேனாதிராஜா<br>BA, MA, MPhil, Phd | - | சிரேஸ்ட விரிவுரையாளர்<br>தென் கிழக்குப் பல்கலைக்கழகம். |
| திருமதி சந்திமா நிசானி தர்மபால<br>BA, PGDE, MSc | - | சிரேஸ்ட விரிவுரையாளர்<br>தேசிய கல்வி நிறுவகம். |
| திருமதி டபிள்யூ.எஸ்.எஸ். குணவர்தன<br>BA. PGDE | - | விரிவுரையாளர்<br>தேசிய கல்வி நிறுவகம். |

**எழுத்தாளர் குழு**

| | | |
|---|---|---|
| அருட் சகோதரி மேரி டொனேட்டா<br>BA, MA, PGDE | - | அதிபர் சேவை - II (ஓய்வு நிலை) |
| யு. எல். எஸ். மரிக்கார்<br>BA, PGDE | - | ஆசிரிய ஆலோசகர்<br>வலயக் கல்விப் பணிமனை<br>வத்தேகம. |

| | | |
|---|---|---|
| யு. எல். எம். பஸீர்<br>BA, PGDE | - | ஆசிரிய ஆலோசகர் (ஓய்வு நிலை). |
| கே. எஸ். ரஞ்சனி<br>BA, MA, PGDE | - | ஆசிரிய ஆலோசகர்<br>வலயக் கல்விப் பணிமனை,<br>ஹொரண. |
| எம். டி. திலக்கலதா<br>BA . PGDE | - | ஆசிரிய சேவை<br>சி.டபிள்யூ. டபிள்யூ. கன்னங்கரா<br>மகாவித்தியாலயம், பொறளை. |
| டபிள்யூ. எ. பியசிலி<br>BA , PGDE, M.Ed | - | ஆசிரிய சேவை<br>தேசிய பாடசாலை அளவ்வ. |

**பதிப்பாசிரியர் (மொழி)**

| | | |
|---|---|---|
| து. இராஜேந்திரம் | - | சிரேஷ்ட விரிவுரையாளர் (ஓய்வு நிலை)<br>திறந்த பல்கலைக் கழகம் |

**சரவை நோக்கு**

| | | |
|---|---|---|
| க. கமலநாதன் | - | ஆசிரியர் சேவை<br>சாந்திபுர ஸ்கந்தவரோதயா மகா வித்தியாலயம்<br>மட்டுவில், சாவகச்சேரி. |

**கணினி வடிவமைப்பு**

| | | |
|---|---|---|
| தேவராஜா நிரோஷனி தோமஸ் | - | கணினி வடிவமைப்பாளர்<br>கல்வி வெளியீட்டுத் திணைக்களம். |

**சித்திரமும் அட்டைப்படமும்**

| | | |
|---|---|---|
| சந்திரிகா நீலமணி ஜயசிங்க. | - | கணினி வடிவமைப்பாளர்<br>கல்வி வெளியீட்டுத் திணைக்களம். |

## பதிப்பாசிரியர்களின் குறிப்பு

வரலாறு என்பது மனிதன் இறந்த காலத்தில் செயற்பட்ட விதத்தை விபரிக்கும் கதையாகும். பெரும்பாலும் அதில் முக்கியத்துவம் பெறுவது பொது சமூகமாக அவர்கள் செயற்பட்ட விதத்தைக் கவனத்திற் கொள்வதே ஆகும். மனித சமூகம் தொடர்ச்சியாக செயற்பட்ட விதம், அவற்றில் ஏற்பட்ட மாற்றங்கள் என்பன அப்போதுதான் தெளிவாகத் தெரியும். வரலாற்றாளர்களுக்கு முக்கியமான வரலாற்று மாற்றங்களைப் புரிந்து கொள்ளக் கூடியதாக இருப்பது இதன் மூலமேயாகும்.

புராதன சமுதாயத்தில் வாழ்ந்தோர் தமது நிலைப்பாட்டை பாதுகாப்பாகவும் சமநிலையாகவும் முன்னெடுத்துச் செல்வதற்குப் பின்பற்றிய உபாயங்கள், அதன் பின்னணியில் உள்ள எண்ணங்கள், அதன் மூலம் பெறப்படும் வெற்றி, தோல்விகள் அனைத்தும் வரலாற்றில் உள்ளடங்கியுள்ளன. ஆட்சியாளரின் அரசியல் நடவடிக்கைகள் மாத்திரம் முழு வரலாற்றையும் பிரதிபலிப்பதில்லை. வரண்ட பிரதேசங் களில் வெப்பமான சூழ்நிலையில் கடின நிலத்துடன் போராடும் விவசாயி முதல் அரசர்கள் உள்ளிட்ட அமைச்சர்கள், அவர்களுக்கு ஆலோசனை வழங்கிய பௌத்த பிக்குகள் உட்பட அனைத்துப் பிரிவினரும் இந்நாட்டின் வரலாற்றைக் கட்டியெழுப்புவதற்குப் பல வழிகளிலும் பங்களிப்புச் செய்துள்ளனர். எனவே பாடசாலை மாணவர் வரலாற்றின் மூலம் அவர்கள் அனைவரினதும் பங்களிப்பின் தன்மையைக் கற்பது அவசியமாகும். அதன் மூலம் மாணவர் சமுதாயத்திற்குத் தம்மால் ஆற்றக்கூடிய பணிகள் தொடர்பான முழுமையான அறிவைப் பெற்றுக்கொள்ளக்கூடியதாக இருக்கும்.

இந்தப் பாடநூல் அதனை நிலைப்படாகக் கொண்டே எழுதப்பட்டுள்ளது. தற்காலத்தில் நாம் எதிர்நோக்கும் பிரச்சினைகளுக்குச் சமமான பிரச்சினைகளுக்கு எம் முன்னோர்கள் எவ்வாறு முகங் கொடுத்தனர் என்பதனை ஆய்ந்தறிந்து இறந்த காலத்திலிருந்து தற்காலத்திற்குப் பெறக்கூடிய அனுபவங்களைப் பெற்றுக்கொள்ளக் கூடியதாய் இருக்கும். வரலாற்றில் காணப்படும் நற்பண்புகளின் மூலம் ஊட்டம் பெறும் சமூகம் எளிதில் வீழ்ச்சியடைவதில்லை. வரலாற்று உரிமை, வரலாற்று விழிப்புணர்வு என்பன மூலம் சமுதாயத்தில் ஏற்படுத்தும் பாதிப்புக்களினால், புதிய சவால்களின் முன்னால் சமூகம் வீழ்ச்சியுற்று, செயலிழந்து போகின்றது. வரலாற்றினை மகிழ்ச்சியான கதையாகக் கற்கவும், எமது மாணவர்களுக்கு அது தொடர்பான உணர்வினை ஏற்படுத்தும் எண்ணத்துடனும் இந்நூலினை ஆக்குவதற்கு எழுத்தாளர் குழுவினரும், பதிப்பாசிரியர்களும் முயன்றுள்ளனர். அந்த முயற்சி வெற்றியளிக்கும் என்பதே எமது எதிர்பார்ப்பாகும்.

முக்கிய விடயம்

2015 ஆம் ஆண்டு செயற்படுத்தும் பொருட்டுத் தாயரிக்கப்பட்ட வரலாற்றுப் பாடத்திட்டத்திற்கு அமைய இந்தப் பாடங்கள் எழுதப்பட்டுள்ளன. மாணவர்கள் மேலதிக அறிவைப் பெறும் பொருட்டு எழுதப்பட்டுள்ள இந்தப் பாடத் தொகுதியில் பாட இறுதியில் முன்வைக்கப்பட்டுள்ள விடயங்கள் மாணவர் தமது விடய அறிவை மென்மேலும் உறுதிப்படுத்திக் கொள்வதற்கேயாகும். அவைகளை மனனம் செய்யத் தேவையில்லை.

பதிப்பாசிரியர் குழு

# உள்ளடக்கம்

## 7. உலர் வலய புராதன நகரங்களின் வீழ்ச்சியும் தென்மேற்கில் புதிய இராச்சியங்களின் தோற்றமும்



## 8. கண்டி இராச்சியம்



## 9. மறுமலர்ச்சி



## 10. இலங்கையும் மேற்குலகமும்

# 1 வரலாற்றைக் கற்பதற்கான மூலாதாரங்கள்

**அறிமுகம்**

வரலாற்றைக் கற்பதற்கு மூலாதாரங்கள் இன்றி யமையாதன. இறந்த காலத்தைப் பற்றிய தகவல்களைப் பெற்றுக்கொள்ளக்கூடிய மூலாதாரங்கள் பல்வேறு வகைப்படும். இவ் வலகின் மூலம் மூலாதாரங்களை இனங் காணல், மூலாதாரங்களின் அடிப்படையில் வர லாற்றைக் கட்டியெழுப்பும் முறை, வரலாற் றைக் கற்பதனால் பெறத்தக்க பயன்கள் என்பன பற்றி நீங்கள் கற்கலாம்.

## 1.1. மூலாதாரங்களை வகைப்படுத்தல்

வரலாறு என்பது இறந்த காலத்தில் வாழ்ந்த மனித செயற்பாடுகள் பற்றிக் கற்கும் பாடமாகும். பல்லாயிரம் வருடங்களுக்கு முன்னரான வர லாற்றைக் கற்கும்போது அக்காலகட்டங்களில் அவர்கள் எழுதி வைத்த விடயங்களும் அவர்களின் பல்வேறு ஆக்கங்களும் கிடைக்கப் பெறுகின்றன. அந்த எழுத்தாவணங்கள் அல்லது ஆக்கங்கள் மூலம் முற்கால மனித செயற்பாடுகள் பற்றிய தகவல்களைப் பெற்றுக்கொள்ள முடிவதனால் அவை மூலாதாரங்கள் எனப்படுகின்றன. ஒவ்வொரு காலகட்டத்திற்கும் உரியதாகக் கிடைக்கப்பெறும் இவ்வாறான மூலாதாரங்களின் மூலம் அக்காலச் சமூகச் சூழல் பற்றி அறிந்து கொள்ள முடியும். இவ்வாறான மூலாதாரங்களின் மூலம் பெற்றுக்கொள்ளும் தகவல்களைத் தர்க்க ரீதியாகக் கற்கும்போது அவ்வக் காலப் பகுதிக்கான மனித வாழ்க்கை பற்றிய வரலாறு கட்டியெழுப்பப்படுகின்றது.

வரலாற்றை கற்கும்போது தகவல்களைப் பெற்றுக் கொள்ளக்கூடிய மூலாதாரங்கள் அதிகளவில் காணப்பட்ட போதிலும் அவற்றை இரண்டு வகை களாகப் பிரித்து நோக்கலாம்.

1. இலக்கிய மூலாதாரங்கள்
2. தொல்பொருள் மூலாதாரங்கள்

பண்டைய காலத்தில் வாழ்ந்த மனிதன் பல்வேறு கால கட்டங்களில் எழுதி வைத்த நூல்களும் அறிக்கை களும் இலக்கிய மூலாதாரங்களாகும். அகழ்வாராய்ச்சி களின்போது கண்டெடுக்கப்படும் தொல்பொருள்கள், சிலைகள், நாணயங்கள், கல்வெட்டுகள், சிதைவுகள் என்பன தொல்பொருள் மூலாதாரங்களாகும். இனி, நாம் இலங்கை வரலாற்றைக் கற்பதற்குப் பயன்படுத்தக்கூடிய மூலாதாரங்களை மேற்கூறிய இரு பிரிவுகளுடனும் ஒப்பிட்டு நோக்குவோம்.

### 1. இலக்கிய மூலாதாரங்கள்

இலங்கை வரலாற்றை அறியக்கூடிய இலக்கிய மூலாதாரங்களை உள்நாட்டு இலக்கிய மூலா தாரங்கள், வெளிநாட்டு இலக்கிய மூலாதாரங்கள் என்று இரு வகைகளாகப் பிரிக்கலாம். சுமார் இரண்டாயிரம் வருடங்களுக்கு முன்பிருந்தே இலங்கையர் காலத்துக்குக் காலம் எழுதிய கவிதைகளும் உரைநடைகளும் உள்நாட்டு இலக்கிய மூலாதாரங்களாகக் கருதப்படுகின்றன. இவ்வாறு இலங்கையரால் எழுதப்பட்ட நூல்கள் தவிர இந்த நாட்டைப் பற்றி அக்கறை செலுத்திய வெளிநாட்டவர்களாலும் சில நூல்கள் எழுதப்பட்டுள்ளன. அவர்கள் எழுதிய நூல்களில் இலங்கை பற்றிய தகவல்களைக் குறிப்பிட்டுள்ளனர். இவ்வாறான நூல்கள் வெளி நாட்டு இலக்கிய மூலாதாரங்களாகக் கருதப் படுகின்றன.

#### உள்நாட்டு இலக்கிய மூலாதாரங்கள்

இலங்கையின் உள்நாட்டு இலக்கிய மூலா தாரங்களுள் மிகப் பழைமையான நூல் தீபவம்சம் எனக் கருதப்படுகின்றது. இந்நூல் கி.பி. 4 ஆம் நூற்றாண்டளவில் எழுதப்பட்டதாகும். மகா சேன மன்னனின் ஆட்சிக் கால முடிவு வரை இந்நாட்டின் வரலாற்றுத் தகவல்கள் மற்றும் பௌத்த சமயம் தொடர்பான தகவல்கள் இந்நூலில் அடங்குகின்றன. ஆயினும், சில வரலாற்றுச் செய்திகள் தீபவம்சத்தில் மிகச் சுருக்கமாகவே குறிப்பிடப்பட்டுள்ளன. சில விடயங்கள் உள்ளடக்கப்படாமல் விடப்பட்டுள்ளன. எனவே, தீபவம்சத்தில் இருக்கின்ற குறைபாடுகளை விடக் குறைபாடுகள் குறைவானதாக மகாவம்சம் எழுதப்பட்டுள்ளது.



*உரு 1.1. ஓலைகளிலான ஏட்டுச் சுவடிகளில் புராதன காலத்திற்குரிய இலக்கிய சமயத் தகவல்கள் மற்றும் வம்சக் கதைகள் எழுதப்பட்டுள்ளன. இலங்கையின் ஏட்டுச் சுவடிப் பாரம்பரியம் நீண்டகால வரலாற்றைக் கொண்டது.*

மகாவம்சம் என்பது சில பாகங்களை உள்ளடக்கிய நூலாகும். அதன் முதல் பாகம் அநுராதபுர ''திக்சந்த செனவியா பிரிவெனா'' வில் வசித்த மகாநாமதேரர் என்பவரால் எழுதப்பட்டுள்ளது. தீபவம்சத்தைப் போலவே மகாவம்சத்திலும் புத்த பெருமானின் இலங்கை வருகை முதல் மகாசேன மன்னனின் ஆட்சி முடிவு வரை இடம்பெற்ற வரலாற்றுத் தகவல்கள் முதல் பாகத்தில் அடங்கும். அது கி. பி. 5 ஆம் அல்லது 6 ஆம் நூற்றாண்டு அளவிலே எழுதப்பட்டுள்ளது. மகாவம்சத்தின் முதலாம் பாகமும் தீபவம்சத்தின் சில அத்தியாயங்களும் ஒத்தவையாகக் காணப்படுகின்றன. ஏனெனில், இவ்விரு நூல்களும் எழுதப்படுவதற்கு முன்னர் எழுதப்பட்டிருந்த சிஹல அட்டகதா, உத்தர விஹார அட்டகதா, வினய அட்டகதா முதலிய நூல்களின் தாக்கம் இவற்றில் செல்வாக்குச் செலுத்தி இருக்கலாம்.

மகாநாமதேரர் அவர்களினால் மகாவம்சத்தின் முதலாம் பாகம் எழுதப்பட்ட பின்னர் வேறு எழுத்தாளர்களினால் அவ்வக் காலப் பகுதிக்குரிய தகவல்களை உள்ளடக்கியதாக இன்னும் பல பாகங்களைக் கொண்ட தொடரிலக்கியமாக அது அமைந்துள்ளது. எனவே, மகாவம்சத்தில் இலங்கை வரலாறு தொடர்ச்சியாக எழுதப் பட்டுள்ளமை அதன் சிறப்பம்சமாகும். ஒரு நாட்டின் வரலாறு ஒரே நூலில் அடங்கியுள்ள நாடுகள் உலகில் மிகச் சிலவாகும். அந்தவகையில் எமது நாட்டின் வரலாறு ஒரே நூலில் உள்ளடங்கி இருப்பது நாம் பெருமைப்படத்தக்க விடயமாகும்.

மகாவம்சத்தில் அடங்கியுள்ள செய்திகள் சில கல்வெட்டுகள் மூலமும் வேறு ஆவணங்கள் மூலமும் உறுதிப்படுத்தப்படுவதனால் மகாவம்சம் நம்பத் தகுந்த மூலாதாரமாகத் திகழ்கின்றது.

மகாவம்சத்தின் முதலாம் பாகம் எழுதப்பட்ட நான்கு நூற்றாண்டுகளின் பின்னர் பாளி மொழியில் எழுதப்பட்ட நூலின் சில பகுதிகளுக்கு மேலும் விளக்கமளிக்கும் வகையில் ''டீகாவ'' என்னும் உரை நூல் எழுதப்பட்டது. மகாவம்ச டீகாவ எனப்படும் இந்நூலுக்கு வம்சத்தப்பகாசினி எனப் பெயரிடப்பட்டுள்ளது. வேறு மூலாதாரங்களில் கிடைக்கப்பெறாத பல்வேறு விடயங்கள் இந்நூலில் அடங்கியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

இலங்கை வரலாற்றில் அநுராதபுரக் காலம் முதல் கண்டி இராசதானிக் காலம் வரையில் உள்நாட்டு இலக்கிய மூலாதாரமாகக் கருதத்தக்க மேலும் பல நூல்கள் எழுதப்பட்டுள்ளன. பௌத்த சமய நூல்களாகக் கருதத்தக்க போதிவம்சம், தூபவம்சம், தாதுவம்சம், பூஜாவலிய, சத்தர்மாலங்கார முதலிய நூல்கள் இராசரட்டைக் கால வரலாற்றை அறிவதற்கு உதவுகின்றன. இலங்கையின் புத்த சாசன வளர்ச்சி பற்றி எழுதப்பட்டுள்ள நிகாய சங்கிரஹய, அரசியல் தகவல்களை அடக்கியுள்ள ராஜாவலிய என்பன கம்பளை முதல் கோட்டை வரையிலான காலப்பகுதியின் வரலாற்றைக் கற்பதற்கு உகந்த முக்கிய மூலாதாரங்களாகும். கோட்டை இராசதானி முதல் கண்டி இராசதானி வரையிலான காலப்பகுதி பற்றிய வரலாற்றை அறிந்து கொள்வதற்குத் தூது காவியங்கள், புகழ் காவியங்கள், போர்க் காவியங்கள் என்பன பெரிதும் துணைபுரிகின்றன. இவ்வாறான நூல்கள் பற்றிய அட்டவணை இல 1.1. இங்கே தரப்பட்டுள்ளது.

| **இலக்கிய வகை** | **உதாரணம்** |
|---|---|
| தூது காவியம் | மயுர சந்தேசய,திசர சந்தேசய,செலலிகினி சந்தேசய |
| புகழ் காவியம் | பெரகும்பா சிரித்த |
| போர்க் காவியம் | சீதாவாக்க சட்டன, இங்கிலிசு சட்டன,கொன்ஸ்தந்தினு சட்டன |

*அட்டவணை இல 1.1. ஒன்றுக்கொன்று வேறுப்பட்ட புராதன இலக்கிய மூலாதாரங்கள்*

உள்நாட்டு இலக்கிய மூலாதாரங்கள் வெவ்வேறு காலப்பகுதிகளில் எழுதப்பட்டவையாக அமைவதுடன் அந்நூல்கள் எழுதப்படுவதில் செல்வாக்குச் செலுத்தியுள்ள காரணங்களும் பல்வேறுபட்டனவாகும். அநுராதபுரக் காலம் முதல் கோட்டை இராசதானி ஆரம்பம் வரையிலான காலப்பகுதியில் எழுதப்பட்ட அதிகமான நூல்கள் சமய நோக்கோடு எழுதப்பட்டவையாகும். சில நூல்களில் குறிப்பிடப்படும் வரலாறு அது நிகழ்ந்து பல நூற்றாண்டுகளின் பின்னரே எழுதப்பட்டுள்ளன. எனவே, வரலாற்றை அறிந்து கொள்வதற்காக இலக்கிய மூலாதாரங்களைப் பயன்படுத்தும்போது பின்வரும் விடயங்கள் கவனத்திற் கொள்ளப்பட வேண்டும்.

1. நூல் எழுதப்பட்ட காலம்
2. நூல் ஆசிரியர்
3. நூல் ஆசிரியரின் நோக்கம்
4. நூலுக்கான தகவல் திரட்டப்பட்ட விதம்

எனவே, இலக்கிய மூலாதாரங்களைப் பயன்படுத்தும்போது தர்க்க ரீதியான சிந்தனையுடன் செயற்பட வேண்டும் என்பதைப் புரிந்து கொண்டிருப்பீர்கள்.

### வெளிநாட்டு இலக்கிய மூலாதாரங்கள்

அநுராதபுரத்தின் ஆரம்ப காலம் முதல் இலங்கை வெளிநாடுகளுடன் வர்த்தகத் தொடர்புகளைப் பேணியமையால் இந்து சமுத்திரத்தில் வர்த்தக நடவடிக்கையில் ஈடுபட்ட அதிகமான வெளிநாட்டவர்கள் இலங்கை பற்றி அறிந்திருந்தனர். எனவே, கிறிஸ்துவுக்கு முற்பட்ட காலப்பகுதியில் வெளிநாட்டவர்களால் எழுதப்பட்ட நூல்களில் இலங்கை பற்றிய சில குறிப்புகள் அடங்கியுள்ளன.

தென்னிந்தியாவில் எழுதப்பட்ட சிலப்பதிகாரம், மணிமேகலை, பத்துப்பாட்டு முதலிய தமிழ் இலக்கியங்களில்கூட இலங்கை பற்றி எழுதப்பட்டுள்ளது. போர்த்துக்கேயர் இலங்கைக்கு வந்த கி.பி. 16ஆம் நூற்றாண்டின் பின்னர் இலங்கை பற்றிய நூல்களை எழுதுவதிலும் வெளிநாட்டு நூலாசிரியர்கள் ஆர்வம் காட்டியுள்ளனர்.

இலங்கை பற்றி எழுதப்பட்டுள்ள நூல்களை அவதானிக்கும்போது இலங்கைக்கு வருகை தராது, பிற நபர்களிடமிருந்து தகவல் பெற்று எழுதியுள்ள



*உரு இல் 1.2 - கி.பி. 90 - 168 காலப்பகுதியில் அலெக்சாந்திரியாவில் வாழ்ந்த உரோம இனத்தவரான குளோடியஸ் தொலமி என்னும் புவியியலாளரால் வரையப்பட்ட உலகப்படத்தில் இலங்கை தப்ரபேன் என்னும் பெயரால் குறிப்பிடப்பட்டுள்ளது.*

| | |
|---|---|
| சீன இலக்கியம் | பாகியன் தேரரின் தேச சஞ்சார அறிக்கை (பௌத்த இராச்சியம் பற்றிய விபரம்) |
| அறபு இலக்கியம் | இபின் பதுதாவின் தேச சஞ்சார அறிக்கை |
| போர்த்துக்கேய இலக்கியம் | ரிபைரோ என்பவரின் இலங்கை பற்றிய நூல் (ரிபைரோவின் இலங்கை வரலாறு) |
| ஒல்லாந்து இலக்கியம் | பிலிப்ஸ் பல்டியஸ் என்பவரின் இலங்கை பற்றிய நூல் (பல்டியசின் இலங்கை வரலாறு) |
| ஆங்கில இலக்கியம் | ரொபட் நொக்ஸ் அவர்களின் நூல் ( எதா ஹெலதீவு - அன்றைய இலங்கை) |

*அட்டவணை இல 1-2. இலங்கைக்கு வருகை தந்து நேரடி அனுபவங்களைப் பெற்று எழுதியுள்ள எழுத்தாளர்கள்*

நெடுங்காலத்திற்கு முன்பிருந்தே, இலங்கை, இந்தியாவிற்கிடையில் நல்லுறவு நிலவி வந்தது. எனவே இந்தியாவின் சில நூல்களில் இலங்கை பற்றிய தகவல்கள் அடங்கியுள்ளன.

வேறு நூலாசிரியர்களைப் போலவே, இங்கு வருகை தந்து தகவலறிந்து எழுதியுள்ள நூலாசிரியர்களும் காணப்படுகின்றனர். இலங்கைக்கு வருகை தந்தும் தேச சஞ்சாரிகளிடமிருந்து தகவலறிந்தும்

| மூலாதார வகைகள் | உதாரணம் |
|---|---|
| கிரேக்க மூலாதாரங்கள் | அரிஸ்டோட்டிலின் டிமுன்டோ, மெகஸ்தனிஸின் இண்டிகா, ஒனெசி கிரிட்டசின் அறிக்கை |
| உரோம மூலாதாரங்கள் | பிளினியின் நெச்சுரலிஸ் ஹிஸ்டோரியா, தொலமியின் பூகோள சாஸ்திரப் பிரவேசம், தொலமியின் இலங்கைப்படம் |
| சீன மூலாதாரங்கள் | ஹியுங்சாங் பிக்குவின் தேச சஞ்சார அறிக்கை |
| போர்த்துக்கேய மூலாதாரங்கள் | அருட்தந்தை பர்னாவோ டீகுவேரோஸ் அவர்களின் இலங்கை பற்றிய அறிக்கை |

*அட்டவணை இல -1 - 3. இலங்கைக்கு வருகை தராது, இலங்கைக்கு வருகை தந்தவர்களிடம் கேட்டறிந்து எழுதிய எழுத்தாளர்களும் அவர்களது நூல்களும்*

வெளிநாட்டு நூலாசிரியர்கள் தமது நூல்களில் இலங்கையைப் பற்றி எழுதியுள்ளனர். அவ்வாறான நூல்கள், அறிக்கைகள் அடங்கிய அட்டவணையை அவதானிக்கவும்.

### இலக்கிய மூலாதாரங்களின் பயன்கள்

1. வரலாற்றுக் காலங்களை ஒழுங்கு முறைப்படுத்த முடியும்.
2. வெவ்வேறு காலகட்டங்களின் அரசியல், பொருளாதார, சமூக, கலாசார நடவடிக்கைகள் பற்றிய தகவல்களை அறிந்து கொள்ள முடியும்.
3. ஒரு நூலில் கூறப்பட்டுள்ள தகவல்களை இன்னொரு நூலின் மூலம் உறுதிப்படுத்த உதவும்.
4. ஒரு நாட்டின் வெளிநாட்டு உறவுகள் பற்றி அறிந்து கொள்வதற்கு உதவும். (குறிப்பாக வெளிநாட்டு இலக்கிய நூல்கள்)

## 2. தொல்பொருள் மூலாதாரங்கள்

தொல்பொருள் மூலாதாரங்களை எழுத்தாவணங்கள், நாணயங்கள், சிதைவுகள், சித்திரங்கள், சிற்பங்கள், செதுக்கல்கள், தொல்பொருள்கள் என வகைப் படுத்தலாம்.

### சாசனங்கள் (எழுத்தாவணங்கள்)

சாசனங்கள் என்னும்போது கருங்கல், களிமண்தட்டு, சுவர், செப்புத் தகடு, பொன் தகடு, மரப்பலகை என்பவற்றில் எழுதிவைக்கப்பட்டுள்ளவற்றைக் குறிப்பிடுவதாகும். கருங்கல்லில் எழுதிவைக்கப் பட்டுள்ள ஆவணம் கல்வெட்டு எனப்படும்.

### கல்வெட்டுக்கள்

கல்வெட்டு எழுதப்பட்டுள்ள கல்லின் அமைப்பைப் பொறுத்து அது குகைக் கல்வெட்டு, குன்றுக் கல்வெட்டு, தூண் கல்வெட்டு, சுவர்க் கல்வெட்டு என வகைப்படுத்தப்பட்டுள்ளது. இலங்கையின் புராதன கல்வெட்டுக்கள் பிராமி எழுத்துக்களில் எழுதப்பட்டவையாகும்.

கற்குகைகளைப் பௌத்த பிக்குமாரின் வசிப்பிடங்களாக வசதிசெய்து கையளித்தமை பற்றி அவை கூறுகின்றன. அமைத்தவர்களைப் பற்றிய சிறு விபரங்கள் அதாவது அவர்களின் பதவி, பரம்பரை என்பன அவற்றில் அடங்கும். புரதான சமூக வரலாறு, குடியேற்றங்களின் பரம்பல் என்பவற்றை அறிவதற்கு இக்கல்வெட்டுகள் உதவும்.



*உரு 1.3 முதலாம் விஜயபாகு மன்னனால் எழுதப்பட்ட பனாகடுவ செப்பு சாசனம் இதுவாகும். தனக்கு உதவிசெய்த சித்தாறும்பி புத்தநாயக என்னும் அதிகாரிக்கு நன்றிக் கடனாக வழங்கப்பட்ட பரிசுகளும் சலுகைகளும் பற்றிய ஆவணமாக இது அமைந்துள்ளது. கி.பி. 11 - 12ஆம் நூற்றாண்டு கால வரலாற்றை அறிய இது பெரிதும் உதவும்.*



*உரு 1.4. கீர்த்தி ஸ்ரீ நிஸ்ஸங்கமல்ல மன்னனால் பொறிக்கப்பட்ட கல்பொத்த கல்வெட்டாகும். இது பொலன்னறுவையில் காணப் படுகிறது.*

| எழுத்தாவணம் எழுதப்பட்டுள்ள சாதனங்கள் | உதாரணம் |
|---|---|
| கல்வெட்டு | நிஸ்ஸங்கமல்லனின் கல்பொத்த (கற்புத்தகம்) |
| சுவர் | சீகிரி கிறுக்கல் கவிதைகள் |
| செப்புத் தகடு | முதலாம் விஜயபாகு மன்னின் பனாகடுவ செப்பு சாசனம் |
| பொன் தகடு (பொற் சாசனம்) | வல்லிபுரம் பொற்சாசனம் |
| மரப்பலகை | அம்பக்கை தேவாலய மரத்தூண்களில் எழுதப் பட்டுள்ள எழுத்துக்கள் |
| களிமண் பொருள்கள் | செங்கல், ஓடு என்பவற்றில் எழுதப்பட்ட எழுத் துக்கள் |
| பாத்திரங்கள் | மட்பாண்டம் மற்றும் பாத்திரங்களில் எழுதப்பட் டுள்ள எழுத்துக்கள் |

அட்டவணை இல. 1.4. எழுத்தாவணங்கள் எழுதப்பட்டுள்ள பல்வேறு வகை சாதனங்கள்.

| | |
|---|---|
| குகைக் கல்வெட்டு | கற்குகைகளில் பீலிகளின் அருகில் எழுதப்பட்டவை |
| பாறைக் கல்வெட்டு | கற்பாறைகளின் மேல் எழுதப்பட்டவை |
| தூண் கல்வெட்டு | செப்பனிடப்பட்ட கருங்கல் தூண்களில் எழுதப்பட்டவை |
| சுவர்க் கல்வெட்டு | செப்பனிடப்பட்ட கற்பலகையில் எழுதப்பட்டவை. |
| இருக்கைக் கல்வெட்டு | மலர் ஆசனங்கள் போன்ற கற்பலகையில் எழுதப்பட்டவை |

அட்டவணை இல. 1.5. எழுதப்பட்டுள்ள இடத்தின் இயல்பிற்கேற்ப கல்வெட்டுக்களை வகைப்படுத்தல்

கி.மு. 2 ஆம் நூற்றாண்டிலிருந்து கண்டி இராச்சியக் காலம் வரை இலங்கையில் கல்வெட்டுகள் தொடர்ந்தும் எழுதப்பட்டுள்ளன. கி.பி 2 ஆம் நூற்றாண்டின் பின்னர் அவை விகாரைகளுக்கு வழங்கப்பட்ட கிராமங்கள், காணிகள் பற்றியும் விகாரைகளின் நிர்வாகம் பற்றியும் அரச கட்டளைகளைப் பொதுமக்களுக்கு அறிவிக்கும் வகையிலும் வர்த்தக நடவடிக்கை மற்றும் வரி அறவீடு பற்றியும் தவறு செய்தோருக்கு மன்னிப்பு அளித்தல் பற்றியும் தனி நபர்களின் சேவைகளைப் பாராட்டுதல் பற்றியும் வேறு விடயங்கள் பற்றிய தகவல்களும் கல்வெட்டுகளில் பொறிக்கப்பட்டுள்ளன.

எனவே இலக்கிய மூலாதாரங்களில் கூறப்படாத எத்தனையோ விடயங்களை நாம் கல்வெட்டுகள் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது.

### நாணயங்கள்

அநுராதபுரக் காலம் முதல் இலங்கையில் நாணயங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. எமது நாட்டில் கிடைக்கப்பெற்ற மிகப் புராதன நாணயம் ''கஹபண'' என்னும் பெயரால் வழங்கப்பட்டுள்ளது. அது ''புராண'' மற்றும் ''தரண'' என்னும் பெயர்களாலும் அழைக்கப்பட்டது. யானை மற்றும் சுவஸ்திகா உருவம் பதித்த நாணயம், இலக்ஷ்மியின் உருவம் பதித்த நாணயம் மற்றும் அக என்னும் பொன் நாணயம் என்பனவும் இந்நாட்டில் பயன்படுத்தப்பட்ட புராதன நாணயங்களாகும். பொலன்னறுவைக் காலத்தில் ''தம்பமஸ்ஸ'' என்னும் செப்பு நாணயம் பயன்படுத்தப்பட்டுள்ளது. இலங்கைக்குரிய நாணயங்கள் உள்நாட்டிலே உற்பத்தி செய்யப்பட்டிருப்பதுடன் அவற்றை வார்ப்பதற்கான அச்சுகளும் அகழ்வுகளின்போது கிடைக்கப்பெற்றுள்ளன. உள்நாட்டு நாணயங்கள் போலவே உரோம, சீன, இந்திய நாணயங்களும் இங்கு கிடைக்கப்பெற்றுள்ளன.



*உரு 1.5 இலங்கையில் பயன்படுத்தப்பட்டுள்ள இந்த நாணயம் தங்கத்தால் உருவாக்கப்பட்டுள்ளது. இது மத்திய கால தங்க (கஹவனு) நாணயம் என்றழைக்கப்படுகிறது. இவ்வாறான நாணயங்கள் புராதனகாலப் பொருளாதார முறையை அறிவதற்கு மட்டுமல்ல தொழினுட்ப அறிவு பற்றி அறியவும் உதவுகின்றது.*

நாட்டின் பொருளாதாரநிலை, வர்த்தகம், உலோகப் பாவனை என்பவற்றை அறிவதற்கு நாணயங்கள் முக்கியம் வாய்ந்த மூலாதாரங்களாகும். புராதன நாணயங்கள் பற்றி கற்றல் ''நாணய விஞ்ஞானம்'' எனப்படும்.

### புராதன சிதைவுகள்

இலங்கையில் அதிகமான இடங்களில் பழைய கட்டடங்கள், விகாரைகள், கற்றூண்கள், குளங்கள், பொய்கைகள் என்பவற்றின் சிதைவுகள் காணப்படுகின்றன.

முற்காலத்தில் மக்கள் வாழ்ந்த சில இடங்கள் இன்று காடுகளாகக் காணப்படுவதால் இக்காடுகளினுள்ளும் இவ்வாறான சிதைவுகள் காணப்படுகின்றன.

வரலாற்று இடங்கள் அல்லது தொல்பொருள்கள் என்று கூறப்படும் இச்சிதைவுகள் இலங்கையின் வரலாற்றை அறிவதற்கான சிறந்த மூலாதாரங்களாகும். முற்கால மக்களின் கலையாற்றல், தொழினுட்ப அறிவு, கட்டடக் கலையாற்றல் என்னும் வாஸ்த்துக் கலைத்திறன், சுற்றாடல் பாதுகாப்பு, நீர் முகாமைத்துவம் என்னும் பல்வேறு துறைகள் பற்றிய முறையான அறிவினைப் பற்றி நாம் தெரிந்து கொள்வதற்கு இச்சிதைவுகள் எமக்குப் பெரிதும் துணைபுரிகின்றன.

### சித்திரங்கள், செதுக்கல்கள், தொல்பொருள்கள்

புராதன சித்திரங்கள், சிற்பங்கள் (சிலைகள்) செதுக்கல் கலைகள் என்பன இலங்கையின் கலாசார வளர்ச்சியின் வரலாற்றைக் காட்டும் உயிரோட்டமான சாட்சிகளாகும். எமது முன்னோர்களின் ஆடையணிகள், கலையாற்றல்கள், பயன்படுத்திய ஆபரணங்கள், நிறப்பயன்பாடுகள், சமய நம்பிக்கைகள் என்பன பற்றி அறிந்து கொள்வதற்கு சித்திர, சிற்ப, செதுக்கல் கலையம்சங்கள் பெரிதும் உதவுகின்றன. உதாரணமாக,

சீகிரி சுவர் ஓவியங்களை எடுத்துக் கொண்டால் பண்டைய இலங்கைப் பெண்களின் ஆடை, ஆபரணங்கள், கூந்தல் அலங்காரம், அவர்கள் மேற்கொண்ட அலங்காரக் கலை நுட்பம் என்பன பற்றிய பல்வேறு விடயங்களை அவற்றின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது.

பண்டைய மக்களால் உருவாக்கப்பட்ட அல்லது பயன்பாட்டிற்கு உட்படுத்தப்பட்டு தற்போது எஞ்சியிருப்பவற்றை தொல்பொருள்கள் என்று கூறலாம். இலங்கையின் நூதனசாலைகளிலும் சமய கலாசார நிலையங்களிலும் பல்வேறு நிறுவனங்களிடமும் தனிநபர்களிடமும் தொல் பொருள்கள் காணப்படுகின்றன. அகழ்வு வேலைகளின்போதும் அதிகளவான தொல் பொருள்கள் கிடைக்கப் பெறுகின்றன.

பண்டைய மக்களின் பல்வேறுபட்ட திறமைகள், ஆற்றல்கள், பண்டைய கலாசாரம், தொழினுட்பம், வெளிநாட்டுத் தொடர்புகள் மற்றும் அவர்களின் வாழ்க்கை முறை ஆகிய பல அம்சங்கள் பற்றியும் அறிந்து கொள்வதில் தொல்பொருள்கள் பெரிதும் துணைபுரிகின்றன.

இலங்கையின் வரலாற்றைக் கட்டியெழுப்புவதற் காகப் பயன்படும் பல்வேறு மூலாதாரங்கள் இருக் கின்றன என்பதை மேற்கூறிய விடயங்களிலிருந்து நீங்கள் விளங்கியிருப்பீர்கள்.

மூலாதாரங்களில் இருந்து விபரங்களைத் திரட்டி வரலாற்றை எழுதும்போது இறந்த காலத்தை சரியாகப் புரிந்து கொள்வதாயின் அம்மூலாதாரங் களைத் தர்க்க ரீதியான சிந்தனையுடன் பரிசீலனை செய்ய வேண்டும். இலக்கிய மூலாதாரங்கள் பெரும்பாலும் வரலாற்று நிகழ்வுகள் நடைபெற்ற சமகாலத்தில் எழுதப்படாது பிந்திய காலத்தில் எழுதப்பட்டுள்ளன. அதேபோன்று நூலாசிரியரின் விருப்பு, வெறுப்பு என்பவையும் அவற்றில் உள்ளடங்கியிருக்கும். ஆனால் தொல்பொருள் மூலாதாரங்கள் வரலாற்று நிகழ்வின் சமகாலத் திலேயே படைக்கப்பட்டுள்ளமை அவற்றின் சிறப்பம்சமாகும்.

எனவே இலக்கிய மூலாதாரங்களில் கூறப்படும் விடயம் தொல்பொருள் மூலாதாரங்கள் மூலம் உறுதிப்படுத்தப்படுவதால் அவற்றை நம்பிக்கைக் குரிய மூலாதாரங்களாகக் கருத முடியும்.



*உரு 1.6 அநுராதபுரத்தின் இசுருமுனிய விகாரையில் செதுக்கப்பட்டுள்ள குதிரைத் தலையும் மனிதனும். இது கி.பி.7ஆம் நூற்றாண்டில் அமைக்கப்பட்டதாகும். குதிரைத் தலை அக்கினித் தெய்வத்தையும் மனித உருவம் பர்ஜன் என்னும் தெய்வத்தையும் குறிப்பதாகக் கருதப்படுகின்றது.*

குறிப்பிட்டதொரு வரலாற்று நிகழ்வை வைத்து வரலாற்றினைக் கட்டியெழுப்பும்போது அது தொடர்பான எல்லா மூலாதாரங்களையும் பரிசீலிக்க வேண்டும். அதில் கிடைக்கப்பெறும் தகவல் களை விமர்சன ரீதியாக ஆராய்ந்து அவற்றுள் மிக நம்பிக்கைக்குரிய தகவல்களை ஒழுங்குபடுத்தியே உரிய நிகழ்வின் வரலாற்றை உருவாக்க வேண்டும். அவ்வாறான சந்தர்ப்பங்களின்போது இலக்கிய மூலாதாரங்களில் காணப்படும் குறைபாடுகளை நிவர்த்தி செய்யவும் புதிய தகவல்களைப் பெற்றுக் கொள்ளவும் இலக்கிய மூலாதாரச் செய்திகளை உறுதிப்படுத்தவும் தொல்பொருள் மூலாதாரம் பெரிதும் துணைபுரியும்.

## 1.2. வரலாற்றைக் கற்பதன் முக்கியத் துவம்

வரலாறு என்பது மூலாதாரங்களுடன் நெருங்கிய தொடர்புள்ள பாடமாக அமையும் அதே வேளை அது ஆர்வத்தைத் தூண்டும் ஒரு பாடமாகவும் அமைகின்றது. எனவே வரலாற்றைப் படிப்பவர் இயல்பாகவே நூல்களை வாசிக்கும் சிறந்த வாசகராக விளங்குவார். அவ்வாறு பல்வேறு நூல்களையும் வாசிக்கும்போது ஒரு சம்பவம் பற்றி வெவ்வேறு கருத்துக்களும் காரணங்களும் கருத்து வேற்றுமைகளும் காணப்படுவதனால் வாசகர் விமர்சன ரீதியாக சிந்திப்பதற்குத் தூண்டப் படுவர். எனவே அவர் எந்தவொரு விடயத்தையும் தர்க்க ரீதியாகச் சிந்தித்து பிரச்சினைகளைச் சரியான முறையில் புரிந்து கொள்வார். பிரச்சினை ஒன்றைச் சரியாகப் புரிந்து கொண்டால் அதற்கு ஆக்கபூர்வ மான தீர்வொன்றைக் காணும் திறனும் அவருள் உருவாகும். எனவே வரலாற்றைக் கற்பதன்மூலம் ஒருவரின் ஆளுமை வளர்ச்சியடையும். இவை தவிர பின்வரும் நன்மைகளையும் வரலாற்றைக் கற்பதன் மூலம் நாம் அடைய முடியும்.

1. தான் வாழும் சமூகம் மற்றும் உலகம் பற்றிய உரிய புரிந்துணர்வைப் பெறுதல்.
2. இறந்த கால அனுபவங்களின் மூலம் நிகழ் காலத்தைப் புரிந்து எதிர்காலத்தை சிறப்பாக் குதல்.
3. நாட்டின் தேசிய தனித்துவத்தை அறிந்து கொள்ளுதல்.
4. மனிதத்தன்மையை மதிப்பதன் மூலம் தேசிய ஒற்றுமையை ஏற்படுத்துதல்.
5. மாற்றுக் கலாசாரத்தை மதித்தல்.
6. வேறுபட்ட கருத்துக்களை சகித்துக் கொள்ளல்.

## 1.3. தொல்பொருள் மூலாதாரங்களைப் பாதுகாத்தல்

இலங்கையின் நீண்டகால வரலாற்றையும் புராதன கால குடிசனப் பரம்பலையும் பல நூற்றாண்டு களாக இங்கு வாழ்ந்த மக்கள் தொகையையும் அவதானிக்கும்போது தொல்பொருள் மூலாதாரம் என்ற வகையில் எமக்கு எஞ்சியிருப்பது கருங்கல், உலோகம், களிமண் என்பவற்றாலான நீண்ட காலம் நிலைத்திருக்கக்கூடிய தொல்பொருள்கள் மாத்திரமே ஆகும். அத்துடன் குளம், கால்வாய் என்னும் பாரிய நிர்மாணங்களும் காணப்படுகின்றன.

நாடு வேகமாக அபிவிருத்தி அடைவதனாலும் சனத்தொகையின் துரித வளர்ச்சி காரணமாகக் குடியேற்றங்கள் பரம்பலடைவதனாலும் பெருந் தெருக்கள் அமைக்கப்படுதல், கட்டடங்கள் கட்டப்படுதல், விவசாய நடவடிக்கைகள் என் பவற்றாலும் பெறுமதியான பெரும்பாலான தொல்பொருள்கள் அழிந்துபோக நேரிடுகின்றன. வரலாற்று ரீதியான இடங்களும் நினைவுச் சின்னங்களும் இன்று எமது நாட்டில் காணப் படுவதற்குக் காரணம் எமது முன்னோர் அவற்றைப் பாதுகாத்தமையாலாகும். எனவே தொல்பொருள்களைப் பாதுகாத்தல் நாட்டு மக்கள் அனைவரினதும் கடமையாகும்.

இலங்கையின் பல்வேறு பிரதேசங்களிலும் கருங் கல்லில் பொறிக்கப்பட்ட பல்வேறு அடையாளச் சின்னங்களை நாம் காணலாம். அவ்வாறான சூரிய, சந்திர உருவங்கள், விசிறி, வில், அம்பு, சங்கு, மாட்டுக்கொம்பு, பாதச்சுவடு, பல்வேறு விலங்கு உருவங்கள் என்பன புராதன பிரதேச எல்லைகளைக் குறிப்பிடும் அடையாளங்களாகும். அல்லது இன்றைய வீதி சமிக்ஞைகள் போன்று அவை புராதன தொடர்பாடல் குறியீடுகளாகவும் இருந்திருக்கலாம். இவ்வாறான அடையாளச் சின்னங்கள் மற்றும் சந்திரவட்டக்கல், காவற்கல், கற்றூண்கள் மற்றும் தொல்பொருள்கள் காணப் படும் இடங்களில் பொருளாதார ரீதியில் பெறு மதியான பொருள்கள் புதைந்திருக்கலாம் என்ற தவறான கருத்தினால் சிலர் அவ்வாறான இடங்களை அகழ்ந்து அழிவை ஏற்படுத்துகின்றனர்.

வரலாற்றுச் சிறப்புடைய இடங்களில் அல்லது தொல்பொருள் சின்னங்களின்மீது எழுதுதல், வரைதல் என்னும் செயற்பாடுகளும் தொல் பொருள்களை அழிக்கும் செயற்பாட்டுக்குக் காரணமாகலாம்.

சட்டத்தின் பார்வையில் அவ்வாறான செயற் பாடுகள் தண்டனைக்குரிய குற்றமாகும். எனவே தொல்பொருள்களின் பெறுமதியை உணர்ந்த மாணவர்கள் என்ற வகையில் அவற்றை பாது காப்பது எமது கடமையாகும்.

**முக்கிய விடயங்கள்**

1. வரலாற்றை அறிய உதவுபவை மூலாதா ரங்கள் எனப்படும்.
2. மூலாதாரங்களை இலக்கியம், தொல் பொருள் என இரண்டாகப் பிரிக்கலாம்.
3. பண்டைய காலத்தில் எழுதப்பட்ட நூல்கள் இலக்கிய மூலாதாரத்திலும் சிதைவுகளாக எஞ்சியுள்ள கட்டடங்களும் ஏனைய கலைப் படைப்புகளும் தொல்பொருள் மூலாதாரத் தில் அடங்கும்.
4. வரலாற்றைக் கற்பதன் மூலம் எமது முன்னோர் பல்வேறு அனுபவங்களுக்கு முகங்கொடுத்த விதத்தை அறியலாம். அத னூடாக அவற்றிற்குச் சமமான நிகழ்காலப் பிரச்சினைகளுக்கு முகங்கொடுப்பதற்கான அறிவினைப் பெற்றுக்கொள்வதற்கான சந்தர்ப்பம் கிடைக்கும்.
5. ஒரு நாட்டின் வரலாறு அந்நாட்டில் வாழும் பிரசைகளின் தனித்துவத்தை வெளிப்படுத் தும்.

**செயற்பாடு**

1. இப்பாடத்தில் நீங்கள் கற்ற பல்வேறு வரலாற்று மூலாதாரங்களையும் பின்வரும் அட்டவணையில் பூரணப்படுத்துக.

| மூலாதாரம் | மூலாதார வகை (இலக்கிய/தொல் பொருள்) | வரலாற்றை அறிய உதவும் விதம் |
|---|---|---|
| தீபவம்சம்<br>மகாவம்சம்<br>அன்றைய இலங்கை<br>பெரகும்பா சிரித்த<br>சீகிரியா<br>சீதாவாக்க சட்டன<br>பனாகடுவ செப்புசாசனம்<br>தொலமியின் உலகப்படம்<br>வல்லிபுரம் பொற்சாசனம் | | |

2. " வரலாற்றைக் கற்பதன்மூலம் எனது வாழ்க்கையில் பெறத்தக்க முன்மாதிரிகள் " என்னும் தலைப்பில் பத்திரிகை ஒன்றுக்குக் கட்டுரை வரைக.

**திக்சந்த செனவியா பிரிவெனா**

*அநுராதபுர மகா விகாரைக்குரிய பல பிரிவெனாக்கள் காணப்பட்டன. சுன்ஹாத்த பிரிவெனா, மருகத பிரிவெனா, எலக்க பிரிவெனா என்பன அவற்றுள் சிலவாகும். திக்சந்த செனவியா பிரிவெனா என்பதும் அவ்வாறனதொரு பௌத்த கல்வி நிலையமாகும். மகாவம்சத்தை எழுதிய மகாநாம தேரரும் இப்பிரிவெனாவில் வாழ்ந்த புத்த பிக்கு ஆவார்.*

**பாஹியன் தேரர்**

*சீனாவைச் சேர்ந்த புத்த பிக்கு ஒருவரின் பெயரே இது. இவர் பௌத்த சமய நூல்களைத் தேடி சீனாவிலிருந்து இந்தியாவிற்குக் கால்நடையாகவே வந்தார். பாஹியன் தேரர் (கி.பி. 399 – 414 ) ஐந்தாம் நூற்றாண்டில் இலங்கைக்கு வருகை தந்து இரண்டு வருடங்கள் அனுராதபுரத்தின் அபயகிரி விகாரையில் தங்கியிருந்தார். அன்னார் சீனாவில் சன் - சீ என்னும் பிரதேசத்தில் பிறந்தவராவார். இவரால் எழுதப்பட்ட பயணக் குறிப்புகளில் அக்கால இலங்கை பற்றிய விபரங்கள் அடங்கியுள்ளன.*

**ஹியுங் சாங் *(Hsuan-Tsang)*** -

*தேரர் (கி.பி. 602-664) இவரும் சீனாவைச் சேர்ந்த பௌத்த பிக்கு ஆவார். அன்னார் தல யாத்திரைக்காக இந்தியாவிற்கு வந்தார். கி.பி. 629ஆம் ஆண்டிலிருந்து தொடர்ந்து பத்து வருடங்களாக தனது யாத்திரையில் ஈடுபட்டார். அக்காலப் பகுதியில் ஆசியாவில் தான் கண்டவற்றை தனது அறிக்கைகளில் எழுதியுள்ளார். இலங்கைக்கு வருகை தராமலே இந்தியாவிலிருக்கும்போது இலங்கை பற்றிக் கேள்விப்பட்ட விடயங்களைத் தனது அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார். அத்தகவல்கள் ஏழாம் நூற்றாண்டு இலங்கை பற்றி அறிவதற்குப் பெரிதும் உதவுகின்றன.*

**ஜோவாவோ ரிபைரோ *(Joao Ribeiro)*** -

*போர்த்துக்கல் நாட்டைச் சேர்ந்த இவர் 1640 மார்ச் மாதத்தில் போர்த்துக்கேய இராணுவ வீரனாக இலங்கை வந்தார். தொடர்ந்து பதினெட்டு ஆண்டுகள் இராணுவத்தில் கடமையாற்றிய இவர் கப்பித்தானாகவும் பதவியுயர்வு பெற்றார். தனது முதுமைப் பருவத்தில் போர்த்துக்கலின் தலைநகரான லிஸ்பனில் வாழ்ந்தபோது தனது இலங்கை அனுபவங்களை வைத்துச் சில நூல்களை எழுதியுள்ளார். 17 ஆம் நூற்றாண்டு இலங்கை பற்றி அறிவதற்கு அந்நூல்கள் பெரிதும் உதவுகின்றன.*

**பிலிப்பஸ் பொல்தெவுஸ் *(Philippus Baldaeus)***

*(கி.பி. 1632-1672) - இவர் ஒல்லாந்த கல்வினிஸ்த மதகுருவாவார். இவர் ஒல்லாந்துப் படையினருடன் இலங்கை வந்தவராவார். டச்சுக் கிழக்கிந்திய வர்த்தகக் கம்பனியில் சேவையாற்றினார். தனது பணிக்கு மேலதிகமாக அவர் அன்றைய இலங்கையின் சமூக வாழ்க்கை, மொழியும் கலாசாரமும் பற்றிய குறிப்புகளையும் எழுதினார். அவ்வறிக்கைகள் டச்சு மொழியிலும் ஜேர்மன் மொழியிலும் வெளியிடப்பட்டன. இவ்வறிக்கைகளின் மூலம் பதினேழாம் நூற்றாண்டு இலங்கை பற்றி சிறப்பாக வடபகுதியில் வாழ்ந்த மக்களின் மொழி, பண்பாடு பற்றி அறிந்து கொள்ள முடிகின்றது.*

**றொபட் நொக்ஸ் *(Robert Knox)*** (கி.பி. 1641-1720) -

*ஆங்கிலேயரான இவர் கப்பல் மாலுமி ஒருவரின் மகனாவார். தனது பதினான்காம் வயதில் தனது தந்தையுடன் கப்பலேறி இந்தியாவிற்கு வந்தார். கி.பி. 1658 இல் பாரசீகம் நோக்கிப் பயணித்த வேளை அவர்களது கப்பல் விபத்துக்குள்ளாகி இலங்கைக் கரையை வந்தடைந்தது. அச்சமயம் றொபட் நொக்ஸ் உள்ளிட்ட பதினாறு பேரையும் கண்டி மன்னன் இரண்டாம் இராஜசிங்கன் சிறையிலடைத்தான். பத்தொன்பது வருடங்கள் கண்டிச் சிறையில் கைதியாக இருந்த அவர் சிறையிலிருந்து தப்பிச் சென்றார். மன்னார் அருகிலுள்ள அரிப்பு என்னும் இடத்தை அடைந்த அவர் அங்கிருந்து பத்தேவியாவைச் சென்றடைந்தார். கி.பி. 1680 இல் அவர் தனது தாயகமான இங்கிலாந்தை அடைந்தார். தனது இலங்கை அனுபவங்களை வைத்து அவர் An Historical Relation of the Island Ceylon என்னும் நூலை எழுதி அதனை 1681 ஆம் ஆண்டு வெளியிட்டார். 17 ஆம் நூற்றாண்டின் இலங்கை சமூக அமைப்பை சித்தரிக்கும் பல்வேறு ஓவியங்களும் விபரங்களும் இந்நூலில் அடங்கியுள்ளன.*

**பர்னாவோ டீ. குவாரோஸ் *(Fernão de Queiroz)***- *இயேசு சபையின் சமய போதகரான இவர் போர்த்துக்கேய இனத்தவராவார். 1688 ஆம் ஆண்டு இவர் இலங்கை பற்றி Temporal and Spiritual Conquest of Ceylon என்னும் நூலை எழுதினார். இலங்கைக்கு வருகை தராத அவர் இந்தியாவில் இருந்த காலத்திலேயே இந்நூலை எழுதினார்.*

| | | |
|---|---|---|
| *சட்டன* | - | *போர்* |
| *சந்தேசய* | - | *தூதுப்பிரபந்தம்* |
| *சிரித்த* | - | *வரலாறு* |

# 2 இலங்கையின் குடியேற்றங்கள்

அறிமுகம்

சுமார் ஓர் இலட்சத்து இருபத்தையாயிரம் (125 000) வருடங்களுக்கு முன்னரே இலங்கையில் மனிதன் வாழ்ந்திருக்கின்றான். இந்துசமுத்திரத்தைக் கடந்து இங்கு வந்த ஹோமோசேப்பியன் என்னும் நவீன மனிதன் நாட்டின் நாலா திசைகளிலும் பரவிச் சென்று அவ்வப் பகுதியின் சூழலுக்கு ஏற்ப இசைவாக்கம் அடைந்து வாழத் தலைப்பட்டான். மிக நீண்ட காலமாக இந்நாட்டில் அம்மனிதன் வாழ்ந்தமையால் பல்வேறு காலகட்டங்களுக்கு ஏற்ப, அவனது கலாசாரமும் மாற்றங்கண்டது. கலாசாரத்தில் ஏற்பட்ட மாற்றங்களை அடிப்படையாகக் கொண்டு இலங்கையின் மானிட வாழ்க்கை வரலாறு மூன்று காலகட்டங்களாக வகுக்கப்பட்டுள்ளது. அக்காலகட்டங்கள் எவ்வாறானவை என்றும் அவ்வக் காலத்தில் மனிதன் வாழ்ந்த முறை பற்றியும் இப்பாடத்தில் நீங்கள் விளக்கமாகக் கற்கப் போகின்றீர்கள்.

## 2.1. வரலாற்றுக்கு முற்பட்ட காலக் குடியேற்றங்கள்

இலக்கிய மூலாதாரங்களில் குறிப்பிடப்படும் புராதன காலத்துக்கு முன்னையகாலம் பொதுவாக வரலாற்றுக்கு முற்பட்டகாலம் எனப்படுகின்றது. வரலாற்றுக்கு முற்பட்டகாலம் கலாசார அடிப்படையிலான இரு கட்டங்களைக் கொண்டது.

1. நீண்டகாலம் நிலைத்திருந்த கற்காலம்.
2. தாவர உணவுகளை உட்கொள்வதில் ஆர்வம் காட்டி, உலோகப் பயன்பாட்டுடன் நிரந்தரக் குடியேற்றங்களை நிறுவிய காலம்.

மேற்படி காலப்பகுதிகளில் கற்காலம் என்பது வரலாற்றுக்கு முற்பட்ட காலம் என்றும் இரண்டாவது காலப்பகுதி முன்வரலாற்றுக்காலம் என்றும் பெயர் பெறுகின்றன.

## குடியேற்றங்களின் பரம்பல்

இலங்கையில் ஆதி ஹோமோசேப்பியன் இன மனிதனே முதலில் குடியேறியுள்ளான். அவன் இந்நாட்டின் பல்வேறு காலநிலை வலயங்களுக்கு ஏற்ப தன்னை இசைவாக்கிக் கொண்டு பரந்த புவியியல் பிரதேசம் ஒன்றில் வாழத் தலைப்பட்டான். வேட்டையாடுதலும் இடத்திற்கிடம் திரிந்து உணவுப் பொருள்களைச் சேகரித்தலும் அவனது பிரதான சீவனோபாய முறைகளாகக் காணப்பட்டன.

இலங்கையில் கற்காலத்திற்குரிய ஆதாரங்கள் பல இடங்களில் கிடைக்கப்பெற்றுள்ளன. அதில் முதலாவது இரத்தினபுரி மற்றும் அதன் அயற்சூழலில் அமைந்துள்ள இரத்தினக்கல் சுரங்கங்களாகும். சுமார் தொண்ணூறு அடி ஆழத்தில் அமைந்துள்ள இந்த அகழ்வுகளில் கிடைக்கப்பெறும் இரத்தினக் கனியப்படிவுகளில் காணப்படும் சரளைக் கற்களுடன்கூடிய மண் படைகளில் மிகப் புராதன காலத்தில் வாழ்ந்த மனிதன் பயன்படுத்திய கல்லாயுதங்களும் இல்லாது ஒழிந்துபோன சில விலங்குகளின் எலும்புகளும் புதைந்துள்ளன. **பிளைத்தோசீன்** என்னும் புவியியற் காலப்பகுதியில் ஏற்பட்ட அதிகளவு மழை வீழ்ச்சி காரணமாக மலைப்பாங்கான பிரதேசத்தில் நிகழ்ந்த மண்ணரிப்பினால் உருவான சரளைக்கற் படிவுகள் இவ்வாறு தாழ்நிலங்களில் புதைந்துள்ளன.

இலங்கையின் குறைவறள் வலய நிலத்தினடியில் களிமண்ணுடன்கூடிய மணல் மண்ணினால் மூடப்பட்டுள்ள சரளைப்படிவுகள் காணப்படுகின்றன. இவற்றைத் தொல்பொருளியலாளர்கள் இரணைமடுப் படிவு என்னும் பெயரில் குறிப்பிடுகின்றனர். இந்த இரணைமடுப் படிவு **பிளைத்தோசீன்** யுகத்தின் சிறு உஷ்ணக் காலத்திலேயே நிலத்தினுள் புதைந்துள்ளது. இந்தச் சரளைக் கற்படிவுகளிலும் கற்காலத்திற்குரிய கல்லாயுதங்கள் கிடைக்கப்பெற்றுள்ளன.




தேசப்படம். 2.1. இலங்கையின் வரலாற்றுக்கு முற்பட்டகால இடங்களின் பரம்பல்

A. அரை வறல் வலயம் B. தாழ்நில உலர் வலயம் C. தாழ்நில இடை உலர் வலயம்
D. ஈர வலயம் E. மலை நாட்டு இடை உலர் வலயம் F. வறள் வலயம்

வரலாற்றுக்கு முற்பட்ட கால இலங்கையில் மனிதன் வாழ்ந்த இடங்கள்

01. ஆனையிறவு
02. பூநகரி
03. பரந்தன்
04. இரணைமடு
05. முல்லைத்தீவு
06. வெள்ளன் குளம்
07. மாங்குளம்
08. முருங்கன்
09. நாச்சியார் வெள்ளச்சிமலை
10. திருகோணமலை
11. குதிரை மலை
12. மோதரகம்ஆறு
13. மறிச்சுக் கட்டி
14. வில்பத்து
15. அநுராதபுரம்
16. சன்னன்குழி
17. பொம்பரிப்பு
18. கலாஓயா
19. வண்ணாத்தி வில்லு
20. கந்தக்காடு
21. திருகோணமடு
22. அரணைக்கல்
23. பொலன்னறுவை
24. பாலாவி
25. புத்தளம்
26. ஆனைமடு
27. ஆண்டிகம
28. பள்ளம
29. பங்கதெனிய
30. சிலாபம்
31. தம்புள்ளை
32. தம்மன்னா
33. பிதுறுங்கல்
34. அலிகல
35. மாப்பாகல
36. பொத்தான
37. அலகொலவெல
38. வேவல
39. களுதிய பொகுண
40. கண்டி
41. பேராதனை
42. தானிகல
43.ஹேனெபொத்த
44. நில்கல
45. பிபிலை
46. கம்பளை
47. மடுல் சீமை
48. வெலிமடை
49. பூண்டுலோயா
50. நாவலப்பிட்டி
51. கித்துல்கல பெலிலென
52. பெலிலென அத்துல
53. அவிசாவல
54. பியகம
55. களனி
56. கொழும்பு
57. மல்வானை
58. கற்றஹத்த
59. பட்டதொட்டலென
60. திம்புலை
61. டிக்கோயா
62. சிவனொளி பாத மலை
63. மஸ்கெலியா
64. நோர்வூட்
65. நுவரெலியா
66. பண்டாரவளை
67. ராவணா எல்ல
68. ஹோர்ட்டன்
69. பொகவந்தலாவ
70. எஹலியவத்த
71. எல்லாவல
72. குறுவிட்ட
73. பட்டதொம்பலென
74. களுகங்கை
75. இரத்தினபுரி
76. பெல்மதுளை
77. பெலிகல்கே
78. பெல்லன் பதி பெலஸ்ஸ
79. பெலிகுல் ஓய
80. உக்கல்கல்தொட்ட
81. அலுகல்கே தெலுல்ல
82. புத்தல
83. ஒக்கம்பிட்டிய
84. பொத்துவில்
85. குடும்பிகல
86. லேகம
87. பம்பரகஸ்தலாவ
88. ஓகந்தை
89. இட்டிகல
90. குமண
91. உடபொத்தன
92. மினிகாகல்கந்த
93. கல்கே
94. தெலுள்ள
95. அத்தனகொட அலுலென
96. தியவின்ன
97. கஹவத்த
98. குக்குலேகம
99. பதுரலிய
100. கலவானை
101. இறக்குவானை
102. அலுகல்கே
103. அங்குனகொலபெலஸ்ஸ
104. வளவை கங்கை
105. திஸ்ஸமகாராமை
106. யால
107. பூந்தல
108. அம்பாந்தோட்டை
109. அம்பலந்தோட்டை
110. வலிபட்டன்வில
111. ஹுங்கம
112. ரண்ண
113. தங்காலை
114. மாத்தறை
115. காலி
116. உடமளல

### 2.1.1 பல்வேறு காலநிலை வலயங்களில் குடியிருப்புகளின் பரம்பல்

இலங்கையின் கற்கால மனிதன் 6 சுற்றாடல் வலயங்களில் வாழ்ந்துள்ளான். அவையாவன:

A. அரை வறல் வலயம்

B. தாழ்நில உலர் வலயம்

C. தாழ்நில இடை உலர் வலயம்

D. ஈர வலயம்

E. மலை நாட்டு இடை உலர் வலயம்

F. வறள் வலயம்

மேற்படி காலநிலை வலயங்கள் தீர்மானிக்கப் படுவது வருடாந்த மழை வீழ்ச்சியின் வேறுபாடு களின் அடிப்படையிலாகும். மழை வீழ்ச்சியின் வேறுபாடு குறிப்பிட்ட பிரதேசத்தில் வாழும் விலங்குகளிலும் தாவரங்களிலும் நேரடியாகச் செல்வாக்குச் செலுத்துமாயினும் ஒன்றுக்கொன்று வேறுபட்ட காலநிலை வலயங்களுக்கு இசை வாக்கமடைந்த கற்கால மனிதனின் உணவுப் பழக்க வழக்கங்களும் தொழினுட்பமும் வேறுபட்டுள்ளன. உதாரணமாக தாழ்நில ஈர வலயத்தில் வாழ்ந்த கற்கால மனிதர்கள் தமது உணவிற்காக நிலத்தில் வாழ்ந்த நத்தைகளைப் பெருமளவில் பயன்படுத்தியுள்ளனர். பல்வேறு விதமான நத்தைகள் தாழ்நில ஈர வலயத்தில் இலகுவாகக் கிடைக்கத்தக்கன. ஆயினும் இந்த நிலையைத் தாழ்நில உலர் வலயத்தில் காண முடியாது. எனவே அப்பகுதிகளில் வாழ்ந்த மனிதன் தனது உணவிற்காக மான், உடும்பு முதலிய பிராணிகளை வேட்டையாடி வாழ்ந்ததை அவதானிக்கலாம்.

### 2.1.2. காலகட்டங்கள்

தென்மாகாணத்தின் அம்பாந்தோட்டை மாவட் டத்தில் பதிராஜவெல என்னும் பிரதேசத்தில் நில மட்டத்திலிருந்து 45 அடி ஆழத்தில் காணப்படும் இரணைமடுப் படிவுக்குரிய சரளைக்கற்படிவில் கற்காலத்திற்குரிய ஆதாரங்கள் கிடைத்துள்ளன. விஞ்ஞானப் பகுப்பாய்வு மூலம் காலத்தைக் கணிப்பிடும்போது அது 125 000 ஆண்டுகள் பழைமையானது என்பது கண்டறியப்பட்டுள்ளது. அம்பாந்தோட்டை



*உரு 2.1. களுத்துறை மாவட்டத்தைச் சேர்ந்த புளத்சிங்கள என்னுமிடத்தில் அமைந்துள்ள பாகியன் கல என்னும் இக்கற் குகை 38 000 வருடங்களுக்கு முன்னர் வாழ்ந்த வரலாற்றுக்கு முற்பட்ட கால மனித சமூகத்தின் வாழ்விடமாகத் திகழ்ந்தது. இது தாழ்நில ஈரவலயத்தில் வாழ்ந்த வரலாற்றுக்கு முற்பட்ட கால மனிதன் பற்றிய முக்கியம் வாய்ந்த தரவுகளைத் தருகின்றது.*

மாவட்டத்தில் பூந்தல வெல்லே கங்கொட எனும் பிரதேசத்தில் நில மட்டத்திலிருந்து 24 அடி ஆழத்தில் புதைந்திருந்த கல்லாயுதங்களுடன் கூடிய சரளைக் கற்படிவு 80 000 வருடங்களுக்கு முற்பட்டதாகும். அண்ணளவாக 125000 ஆண்டு களுக்கு முன்பிலிருந்து கி.மு. 1800 வரையில் இக்கற்காலம் தொடர்ந்து நிலவியுள்ளது. இலங் கையின் சில மாகாணங்களில் அந்தக் கலாசாரம் நீண்ட காலமாக நிலவி வந்த காலப்பகுதிகள் உறுதிப்படுத்தப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| உடமலல | 5330 | வருடங்கள் |
| மாதோட்டை | 3800 | வருடங்கள் |
| பெல்லன்பதிபெலஸ்ஸ | 12000 | வருடங்கள் |
| மானியம் கம | 7900 | வருடங்கள் |
| அத்தனகொட அலுலென | 10350 | வருடங்கள் |
| கித்துள்கல பெலிலென | 15000 | வருடங்கள் |
| குருவிட்ட பட்டதொம்பலென | 28000 | வருடங்கள் |
| சீகிரியா அலிகல | 5500 | வருடங்கள் |
| சீகிரியா பொத்தான | 5800 | வருடங்கள் |
| பாகியன்கல | 38000 | வருடங்கள் |



*உரு. 2.2. இலங்கையின் மத்திய கற்காலத்திற்குரிய கேத்திர கணித உருவிலான கல்லாயுதங்கள் சில. இவை நிலக் கண்ணாடி எனப்படும் படிகக் கற்பாறையால் உருவாக் கப்பட்டுள்ளன.*

### 2.1.3 குடியிருப்புக்களின் அடிப்படை இயல்புகள்

இலங்கையின் வரலாற்றுக்கு முற்பட்டகாலக் குடியிருப்புக்கள் நாட்டில் காணப்பட்ட ஒன் றுக்கொன்று வேறுபட்ட சூழலுக்கு அமையப் பரவலடைந்தன. உணவைப் பெறக்கூடிய இயற்கை வளங்கள் ஏராளமாகக் கிடைக்கும் பிர தேசங்களில் வாழ்வதையே மக்கள் பெரும்பாலும் விரும்பினர்.

தாழ்நில மழைக் காடுகள், வில்லுப் புல்நிலம், உலர் வலயக்காடுகள், கரையோரங்களின் களப்புகள், மலைநாட்டின் புல் நிலங்கள் ஆகிய இடங்களில் அவர்கள் வாழ்ந்ததாகக் கண்டறியப்பட்டுள்ளது. நீரைப் பெறக்கூடிய இடங்களிலும் கல்லாயுதங்கள் செய்வதற்குத் தேவையான கற்கள் தாராளமாகக் கிடைக்கும் இடங்களிலும் வாழ்வதில் அவர்கள் ஆர்வம் காட்டினர். வெப்பமான காலநிலை நிலவும் காலங்களில் வெட்ட வெளியிலும் மழைக் காலங்களில் இயற்கையான கற்குகை களிலும் அவர்கள் வாழ்ந்துள்ளனர். தற்போது அடையாளங்காணப்பட்டுள்ள அவ்வாறான வரலாற்றுக்கு முற்பட்டகால வெட்ட வெளிகள், கற்குகைகள் என்பன பின்வருமாறு :

1. மினிஹாகல்கந்த , புத்தல, பத்திராஜ வெல (கரையோர வெட்ட வெளிகள்)
2. பாகியன்கல, பட்டதொம்பலென, கித்துள்கல பெலிலென (தாழ்நில ஈரவலயக் குகைகள்)
3. சீகிரிய பொத்தான,அலிகல (தாழ்நில உலர்வலயக் குகைகள்)
4. பெல்லன்பதி பெலஸ்ஸ (ஈரவலய வெட்ட வெளிப் பாசறைகள்)
5. பண்டாரவளை, ஹோட்டன் சமவெளி (மலையகப் பிரதேச வெட்டவெளி வேட்டை வாழ்விடம்)

### 2.1.4. வாழ்க்கை முறை

இந்த யுகத்தில் வாழ்ந்த மனிதன் வேட்டையாடியும் பல்வேறு இடங்களில் திரிந்து உணவு சேகரித்தும் தனது வாழ்க்கையை மேற்கொண்டுள்ளான். எனவே வருடத்தில் அதிக காலம் அந்த மக்கள் சமூகம் நாடோடி வாழ்க்கையையே மேற்கொண்டுள்ளது. மழை வீழ்ச்சி அதிகரித்த காலப்பகுதியில் அவர்கள் இயற்கையாக கற்குகைகளில் வசித்துள்ளனர். அவர்கள் சிறு குழுக்களாக ஒழுங்கமைந்திருந்தனர். பொதுவாக ஒரு குழுவில் 15 - 25 இடையிலான நபர்கள் அடங்கியிருந்தனர். அவ்வாறானதொரு குழுவில் ஆகக் கூடுதலாக 50 நபர்கள் இடம்பெற்றதாக நம்பப்படுகின்றது. சுமார் ஐந்து நபர்களைக் கொண்ட ஒரு குடும்பம் வாழ்வதற்கு ஐம்பது சதுர மீற்றர் பரப்பளவிலான இடம் போதுமானதாகத் தெரிகின்றது.

பண்டாரவளை சேர்ச் ஹில் எனும் கற்காலத்திற்குரிய இடத்தில் 150 சதுரக் கிலோமீற்றர் பரப்பளவில் சுமார் 25 நபர்கள் வாழ்ந்திருக்கலாம் என்று அனு மானிக்கப்படுகின்றது. பெல்லன்பதி பெலஸ்ஸ எனும் இடத்தில் 120 சதுர மீற்றர் பரப்பில் கற்கால மனிதன் வாழ்ந்துள்ளதுடன் அங்கு முப்பது மனித எலும்புக் கூடுகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

இந்த யுகத்தில் வாழ்ந்த மக்களின் உணவின் தன்மையைத் தீர்மானித்தது அவர்கள் வாழும் பிரதேசத்தில் பெற்றுக் கொள்ளத்தக்க வளங்களின் தன்மையைப் பொறுத்ததாகும். வரட்சியான காலநிலை நிலவும் காலப்பகுதியில் அவர்கள் திறந்த வெளியில் அமைக்கப்பட்ட கூடாரங்களில் வாழ்ந்தனர். உணவைத் தேடுவதற்காக அவர்கள் ஒரு நாளைக்கு சுமார் ஏழு கிலோமீற்றர் தூரம் நடந்துள்ளனர். கற்குகைகளில் அவர்கள் தற்காலிகமாகவே வாழ்ந்துள்ளனர். சில வேளைகளில் இறந்துபோன உறவினர்களின் சடலங்களை கற்குகைகளில் புதைத்துள்ளனர். சில சந்தர்ப்பங்களில் ஒரு கம்பினாலோ அல்லது மிருகக் கொம்பினாலோ அதற்கான குழியைத் தோண்டி சடலத்தை அதனுள் வைத்து சருகுகளினால் மூடியுள்ளனர். கித்துள் கல பெலிலென பிரதேசத்துள் அவ்வாறு அடக்கம் செய்யப்பட்ட பன்னிரண்டு நபர்களின் எலும்புக் கூடுகள் கிடைத்துள்ளன. திறந்தவெளிப் பிரதேசமான பெல்லன்பதி பெலஸ்ஸவில் கற்காலத்திற்குரிய ஒரு மயானத்திலிருந்து முப்பது எலும்புக் கூடுகள் கிடைத்துள்ளன. பாகியன்கல குகையிலிருந்து வெவ் வேறு காலப் பகுதிக்குரிய ஒன்பது நபர்களின் எலும்புக்கூடுகளின் பகுதிகள் கிடைக்கப்பெற்றுள்ளன.



*உரு .2.3. மேலே காட்டப்பட்ட சிறிய கேத்திரகணிதப் பொறிமுறையிலான ஆயுதங்கள் இவ்வாறு ஒரு தடியுடன் அல்லது மிருக எலும்புடன் இணைக்கப்பட்டே பயன்படுத்தப்பட்டது.*



*உரு .2.4. தமது குடும்ப உறுப்பினர் ஒருவர் அல்லது உறவினர் இறந்தபோது அவர் வாழ்ந்த குகையினுள்ளே அடக்கம் செய்தல் வரலாற்றுக்கு முற்பட்ட கால மனிதனின் பண்பாகும். பின்னர் எலும்புக் கூட்டை எடுத்து அதற்கு செந்நிறக் கற்களால் நிறந்தீட்டி மரணச் சடங்கு செய்தமைக்கான ஆதாரங்கள் கிடைத்துள்ளன.*

## 2.1.5. உணவுப் பழக்கம்

இலங்கையின் கற்கால மனிதன் உட்கொண்ட உணவின் தன்மை பற்றி அதிகளவிலான ஆதாரங்கள் தாழ்நில உலர் வலயத்திலும் ஈர வலயத்திலும் காணப்படும் கற்குகைகளிலிருந்தே கிடைத்துள்ளன.

தற்போது கிடைக்கப்பெற்றுள்ள ஆதாரங்களின்படி உணவுக்காக வேட்டையாடப்பட்ட விலங்குகளுள் மாடு, காட்டெருமை, கரடி, காட்டுப் பன்றி, மான், மரை, சிறுமான், முள்ளம் பன்றி, முயல், மர அணில், கீரி, குரங்கு, காட்டுக் கோழி, மலைப் பாம்பு, உடும்பு என்பன உள்ளடங்கும். நன்னீர் மீனினங்களும் உணவாகக் கொள்ளப்பட்டுள்ளன. தாழ்நில ஈரவலய நீர்ப் பரப்புகளில் காணப்பட்ட "தித்தயா" போன்ற நன்னீர் மீனினங்கள் அவர்களால் பிடிக்கப்பட்டுள்ளன.

தாவர உணவுகளுள் காட்டு வாழை, காட்டுப் பலா (ஆசனிப்பலா) என்பன பிரதான இடத்தைப் பெற்றன. கித்துள்கல பெலிலென குகையில் 12500 வருடங்களுக்கு முன்னர் காட்டுப் பலாவின் விதைகளை தீயில் சுட்டு சாப்பிட்டமைக்கான ஆதாரங்கள் கிடைத்துள்ளன. இவை தவிரக் கொடி வகைகளைச் சேர்ந்த வள்ளிக் கிழங்கு வகைகள், கித்துள் விதை, காட்டுப் பாக்கு என்பனவும் உணவாகக் கொள்ளப்பட்டுள்ளன.

உணவுப் பண்டங்கள் தீயில் சுடப்பட்ட பின்னரே சாப்பிடுவதற்குப் பயன்பட்டுள்ளமைக்கான ஆதாரங்கள் ஆய்வுக்குட்படுத்திய பல இடங்களிலும் கிடைக்கப்பெற்றுள்ளன.

நத்தைகளை உணவாகக் கொள்ள வரலாற்றுக்கு முற்பட்ட கால மக்கள் அதிகம் விரும்பினர். சிறப்பாகத் தாழ்நில ஈரவலயத்தில் வாழும் நத்தைகளையும் களப்புகளில் வாழும் சிப்பிகளையும் அவர்கள் உணவாகக் கொண்டுள்ளனர். உணவுக்குத் தேவையான உப்பைப் பெறுவதற்கு நாட்டின் உட்பகுதியில் வாழ்ந்த மக்கள் நீண்ட தூரம் பயணம் செய்ய வேண்டி இருந்தது. கித்துள்கல பெலிலெனையில் கண்டெடுக்கப்பட்ட நத்தைகளின் எச்சங்கள் கடற்கரைப் பகுதிகளிலிருந்து கொண்டுவரப்பட்ட உப்புடன் கலந்திருந்தமை பற்றி அடையாளங் காணப்பட்டுள்ளது.



*உரு 2.5 இலங்கையின் வரலாற்றுக்கு முற்பட்ட கால குடியிருப்பொன்றில் கிடைக்கப்பெற்ற மாலையின் மணியொன்று. இது மிருக எலும்புத் துண்டொன்றினால் உருவாக்கப்பட்டுள்ளது.*

## 2.1.6. தொழினுட்பம்

இக்காலகட்டத்தின் தொழினுட்ப அறிவைப் பற்றி அறிந்து கொள்வதற்கான ஒரே ஆதாரமாக அமைவது கல்லாயுதங்களாகும். ஆயினும் இரத்தினபுரி இரத்தினக்கல் சுரங்கங்களிலும் இரணைமடு படிவுகளிலும் கிடைக்கப்பெற்ற கல்லாயுதங்களைக் கொண்டு கற்காலத்தின் முழுமையான தொழில் நுட்ப அறிவைப்பற்றி அறிவது சிரமமானது. ஏனெனில் போதிய அளவிலான கல்லாயுதங்கள் கிடைக்கப்பெறாமையும் அவற்றின் காலகட்டம் பற்றி தற்போதுள்ள அறிவு போதாமையுமாகும்.

இலங்கையின் கற்காலத் தொழினுட்பம் பற்றிய விபரமான அறிவினைப் பெற்றுக்கொள்ள உதவுவது கேத்திரகணிதப் பொறிமுறை உருவத்திலான நுணுக்கமான கல்லாயுதங்கள் என்று தொல்பொருளாளர்கள் குறிப்பிடும் சிறு கல்லாயுதங்களாகும். இவ்வாறு பெயர் குறிப்பிடுவதற்கான காரணம் அவற்றை உருவாக்கிய மனிதர்கள் அவற்றை அவ்வாறான உருவத்தில் கற்பாறைகளைக் கொண்டு செப்பனிட்டு செய்திருப்பதனாலாகும். இவ்வாறான கல்லாயுதங்கள் 4.5 சென்ரிமீற்றரை விட அளவில் பெரியனவல்ல. பெரும்பாலும் படிகப் பாறைகளினாலும் சிறியளவில் மஞ்சள் நிறப் பளிங்குக் கற்களாலும் இந்த நுணுக்கமான கல்லாயுதங்கள் தயாரிக்கப்பட்டுள்ளன.

அதிகளவிலான கல்லாயுதங்கள் கேத்திரகணித உருவமைப்பில் இல்லாமல் நுணுக்கமாகத் தயாரிக்கப்பட்டுள்ளன. இவை வேட்டையாடுதல் முதற்கொண்டு வெட்டுதல், உராய்தல், தட்டையாக்குதல், தோண்டுதல் என்பவற்றிற்கு ஏற்றாற்போல செய்யப்பட்டது. இவை தவிர கருங்கல் மூலம் தட்டையான சுத்தியல், அம்மி போன்றவையும் அக்காலகட்டத்தில் உருவாக்கப்பட்டுள்ளன.

மானிடவியல் விஞ்ஞானிகளின் கருத்துப்படி வரலாற்றுக்கு முற்பட்ட கால மனிதனின் ஆகக்கூடிய ஆயுட்காலம் 35 - 40 வயதாகும்.



*உரு - 2.6. இலங்கையின் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திற்குரிய மனித எலும்புக்கூடொன்று. இது சீகிரியாவுக்கு அண்மையில் உள்ள பொத்தான கற்குகையில் கண்டுபிடிக்கப்பட்டது.*

## 2.1.7. மனிதரின் உடலமைப்பு

இதுவரை கண்டுபிடிக்கப்பட்டுள்ள எலும்புக் கூடுகளிலிருந்து இலங்கையில் கற்காலத்தைச் சேர்ந்த மக்களின் உடலமைப்பு எவ்வாறு இருந்தது என்பதனை அறியக்கூடியதாக உள்ளது. சாதாரண வளர்ச்சியடைந்த ஆண் ஒருவரின் உயரம் 174 சென்ரிமீற்றராகும். வளர்ந்த பெண்ணொருவரின் ஆகக்கூடிய உயரம் 166 சென்ரிமீற்றராகும். அவர்கள் அனைவரதும் பற்கள் பெரியனவாக இருந்தன. அகன்ற மூக்கும் அகன்ற நாடியும் இருந்தன. வளர்ந்த ஆண் ஒருவரின் மூளையின் அளவு 1600 கன சென்ரிமீற்றராகும். வளர்ந்த பெண்ணொருவரின் மூளை 920 கன சென்ரிமீற்றர் அளவுடையதாகும்.

## 2.1.8. சடங்கு, சம்பிரதாய முறை

கற்காலத்தில் நிலவிய சடங்கு சம்பிரதாயங்கள் பற்றி ஓரளவிற்கேனும் அறிந்துகொள்ளமுடிவது அக்காலகட்ட மரணச் சடங்கு முறையிலிருந்தாகும். மிகவும் முயற்சிசெய்து இவ்வாறான நடவடிக்கையில் கற்கால மனிதன் ஈடுபட்டுள்ளமைக்குத் தெளிவான சான்று பதுளைக்கு அண்மையில் அமைந்துள்ள இராவண எல்ல குகையில் கிடைத்துள்ளது. அங்கு மேற்கொண்ட அகழ்வின் போது இரண்டாகப் பிளக்கும் வகையில் துளையிடப்பட்ட மண்டையோடு ஒன்று கிடைக்கப்பெற்றுள்ளது. அம்மண்டையோட்டில் கரடு முரடான பகுதிகளையும் வெளியில் துறுத்திக்

கொண்டிருந்த பகுதியையும் கல்லில் உராய்ந்து மட்டமாக்கப்பட்டுள்ளதுடன், அதன் ஒரு பகுதி செந்நிறக் கற்களால் நிறம் பூசப்பட்டுள்ளது. செந்நிறக்கற்களை உராய்ந்து பூசப்பட்ட எலும்புக்கூட்டின் பகுதிகள் பாகியன் கல குகையிலும் கிடைத்துள்ளன.

மரணித்தவரின் சடலத்தை அது உக்கிப்போகும் வரை பாதுகாப்பாகப் புதைத்து வைத்திருந்து பின்னர் சடலத்தின் எலும்புக்கூடு தோண்டி எடுக்கப்பட்டு மீண்டும் அது பாதுகாப்பான முறையில் நல்லடக்கம் செய்யப்பட்டுள்ளது என்பது இதன் மூலம் தெளிவாகின்றது. குருவிட்டபட்டதொம்பலெனக் குகையில் கண்டெடுக்கப்பட்ட எலும்புக்கூடு வளைத்துப் புதைக்கப்பட்டுள்ளது. இலங்கையில் கற்காலத்தில் வாழ்ந்த மனிதர்களுக்கும் இன்றைய வேடர்களுக்குமிடையில் கலாசார ரீதியாகவும் உயிரியல் ரீதியாகவும் சமமான தன்மைகள் பலவும் காணப்படுவதாக ஆய்வாளர்களால் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

## 2.2. முன் வரலாற்றுக் காலக் குடியேற்றங்கள்

வரலாற்றுக்கு முற்பட்ட கால முடிவிற்கும் வரலாற்றுக் காலத்தின் ஆரம்பத்திற்கும் இடைப் பட்ட காலமே முன் வரலாற்றுக் காலம் எனப்படுகின்றது. தொழினுட்ப அடிப்படையில் இது மாறுநிலைக் காலமாகும். சில காரணங்களின் அடிப்படையில் இலங்கையின் வரலாற்றுக்கு முற்பட்ட காலமும் முன் வரலாற்றுக் காலமும் பல்வேறு விடயங்களால் வேறுபடுகின்றன. சுடப்பட்ட மட்பாண்டங்களின் பாவனையின் ஆரம்பமும் முறையாக மரணச் சடங்கு முறையைப் பின்பற்றியமையும் அவற்றுள் பிரதான இடத்தைப் பெறுகின்றன. வரலாற்றுக்கு முற்பட்ட கால கல்லாயுத தொழினுட்பத்திற்குப் பதிலாக இரும்பு உலோகப் பாவனை இக்காலப் பகுதியிலேயே ஆரம்பமானது. ஆயினும் கல்லா யுதங்கள் முழுமையாகக் கைவிடப்பட்டது முன் வரலாற்றுக் காலத்தின் இறுதியிலாகும்.

இரும்பின் பாவனை ஆரம்பிக்கப்பட்டமையால் இக்காலம் முன்வரலாற்று இரும்பு யுகம் என்றும் ஆரம்ப இரும்பு யுகம் என்றும் அழைக்கப்படுகின்றது. அவ் வாறே நிலையான குடியேற்றங்கள் அமைக்கப்பட்டமை, விவசாயம் செய்யத் தொடங்கியமை என்பன இக் காலத்தில் ஏற்பட்ட மாற்றங்களாகும்.



*உரு. 2.7. சப்ரகமுவ மாகாணத்திற்குரிய இரத்தினபுரி மாவட்டத்தின் கொலம்பகேஆர ரஞ்சாமடம அரசினர் பாடசாலை வளவில் கண்டெடுக்கப்பட்ட முன் வரலாற்றுக் கால மயானமொன்று. 2007ஆம் ஆண்டு அகழ்வராய்ச்சியின்போது கண்டுபிடிக்கப்பட்டது. இது 3350 வருடங்களுக்கு முன்னர் வாழ்ந்த மனிதனால் பயன்படுத்தப்பட்டதாகும்.*

**செயற்பாடு 01**

இலங்கையின் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தின் குடியேற்றப் பரம்பலை இலங்கையின் புறவுருவப் படமொன்றில் குறித்துப் பெயரிடுக.




தேசப்படம். 2.2. இலங்கையின் முன் வரலாற்றுக் காலத்திற்குரியதாகக் கருதப்படும் ''பெருங்கற்கால (மெகாலிதிக்)'' மரபிற்குரிய மயானங்களின் பரம்பல்.

### 2.2.1. முன் வரலாற்றுக் காலத்தின் தோற்றம்

இலங்கையின் முன் வரலாற்றுக் காலத்தின் தொடக்கத்திற்கும் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தின் முடிவிற்கும் இடையிலான மாறுநிலைக் காலம் பற்றி நாம் அறிந்துள்ள விடயங்கள் போதியனவாக இல்லை. வரலாற்றுக்கு முற்பட்ட கால கல்லாயுத தொழினுட்பம், வேட்டையாடல் உள்ளிட்ட உணவு சேகரிக்கும் முறை எனும் வாழ்வாதார முறைகளிலிருந்து அதற்குப் பதிலாக தாவர உணவுகளை அடிப்படையாகக் கொள்ளுதல், உலோகப் பயன்பாட்டிற்கு அதிகளவில் பழக்கப்படுதல் என்பன உடனடியாக ஏற்படக்கூடிய மாற்றங்கள் அல்ல. அத்தோடு அவ்வாறானதொரு மாற்றம் உருவாவதற்கு ஏதேனும் முக்கிய காரணம் ஒன்றிருக்க வேண்டும். இத்தகைய மாற்றங்கள் வேறு நாடுகளில் ஏற்பட்டமைக்கு அந்நாடுகளில் நீண்ட காலமாக நிகழ்ந்த காலநிலையின் அழிவு ரீதியான மாற்றங்களே காரணமாகும். “ஹொலோசீன்யுகம்” எனப்படும் அண்மைக்கால புவியியல் மாற்றத்தின் மத்திய பகுதியில் அதாவது கி.மு. 7000 - 4500 இடைப்பட்ட காலப்பகுதியில் தென் ஆசிய வலயம் முழுவதும் காலநிலை மாற்றத்தால் பாரிய மாற்றங் கண்டதாக தொல்பொருளியலாளர்களாலும் காலநிலை அறிஞர்களாலும் கண்டறியப்பட்டுள்ளன. பனிக் கட்டிக்காலம் முடிவடைந்து உலகம் வெப்பமடைந் ததால் விவசாயத்திற்கு ஏற்ற சூழல் நிலைமை உருவானது. அதுபோலவே சனத்தொகை குறிப் பிடத்தக்க விதத்தில் அதிகரித்ததுடன் அதனூடாக புதிய சமூகப்பாங்கும் உருவானது.

இலங்கையின் முன் வரலாற்றுக் காலம் பற்றிய தகவல்கள் கி.மு. 2400 ஆம் ஆண்டு வரை பழைமையானவை. இதுவரை மேற்கொள்ளப் பட்டுள்ள தொல்பொருள் ஆய்வுகளின்படி இக் காலம் பற்றிய சான்றுகள் சப்ரகமுவ மாகாணத்தின் வட கிழக்குப் பகுதியிலும் ஊவா மாகாணத்தின் தென்மேற்குப் பகுதியிலும் கிடைக்கப்பெற்றுள்ளன.



*உரு 2.8. களிமண்ணால் செய்யப்பட்ட படகுக் கல்லறைகளில் அஸ்தியைக் கொண்ட கலசங்கள் பாதுகாப்பாக வைக்கப் பட்டிருந்தன. அது புராதன காலத்தில் இங்கு வாழ்ந்த மனிதன் மேற்கொண்ட மரணச்சடங்கு முறையொன்றாகும்.*



*உரு .2.9. முன் வரலாற்று காலத்தில் இறந்த ஒருவருக்காக மரணச் சடங்கு நடத்துவதற்காகப் பயன்படுத்தப்பட்ட இம்மண் ஓடத்தில், தகனம் செய்யப்பட்டிருப்பது மனித எலும்புகளாகும். இறுதியில் பெறப்பட்ட அஸ்தி மட்பாண்டங்களில் இடப்பட்டு இதனுள் வைக்கப்பட்டுள்ளது. இந்த களிமண் ஓடக் கல்லறை ரஞ்சாமடம் என்னும் இடத்தில் கண்டறியப்பட்டுள்ளது.*

முற்காலத்தில் இந்நாட்டில் இறந்தவர்களுக்கென அமைக்கப்பட்ட மெகாலிதிக் மயானம் (Megalithie burials) இலங்கையின் முன்வரலாற்றுக் கால பண்பாட்டைக்கற்பதற்கானபிரதானஆதாரமாகும். இவ்வாறான மயானங்கள் இலங்கையில் பல்வேறு பிரதேசங்களில் கண்டுப்பிடிக்கப்பட்டுள்ளன. (தேசப்படம் 2.2யைப் பார்க்கவும்). இம்மயானங்களில் ஒரு வகையான கற்துண்டங்களை ஒன்று சேர்த்து செவ்வக வடிவில் அமைக்கப்பட்டுள்ள மயானமொன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அது கற்சுவரொன்றினால் பாதுகாப்பாக அமைக்கப்பட்டுள்ளது. அங்கு சடலங்களை எரித்துப் பெறப்பட்ட அஸ்தி (சாம்பல்) மட்பாண்டங்களில் பாதுகாத்து வைக்கப்பட்டிருந்தன. அவை அஸ்தி வைக்கப்பட்ட கல்லறை மயானம் (Cist Burials ஷீலா மஞ்சுசா) எனப் பெயரிடப்பட்டுள்ளன. அவ்வாறான மயானங்களாக மத்திய மாகாணத்தின் தம்புள்ளைக்கு அண்மையில் அமைந்துள்ள இப்பன்கட்டுவ மெகாலிதிக் மயானம், யாப்பகுவவிற்கு அண்மையிலமைந்துள்ள கல்சொஹன் மயானம், கலேவெலைக்கு அண்மையில் யட்டி கல்பொத்த மயானம் என்பவை இதுவரை அகழ்வுகளின் மூலம் கண்டறியப்பட்டுள்ளன. விஞ்ஞான ரீதியாக காலக் கணிப்பீடு செய்தபோது அம்மயானங்கள் கி.மு. 750 - 450 காலகட்டத்திற்குரியவை என்ற உண்மை தெரியவந்துள்ளது.

இந்த முறை தவிர, மெகாதிலிக் மரபைச் சேர்ந்த வேறு மயான முறைகள் தொடர்பான சான்றுகள் பலவும் இலங்கையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இந்த முறையில் அஸ்தியுடன்கூடிய சிறிய பாத்திரங்கள் பெரிய பாத்திரத்தினுள் வைத்துப் பாதுகாக்கப்பட்டுள்ளன. இவ்வாறான மயானங்கள் பரணி மயானங்கள் எனப்பட்டன.

ஊவா மாகாணத்தில் ஹல்துமுல்ல, பெரகல எனும் பிரதேசங்களில் முன் வரலாற்றுக் காலத்துக்குரிய இரண்டு மயானங்களில் அகழ்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. பச்சைக் களிமண்ணால் செய்யப்பட்ட ஓடம் போன்ற அமைப்பினுள் மட்பாண்டங்களில் அஸ்தி பாதுகாப்பாக வைக்கப்பட்டிருந்தமை இங்கு கையாளப்பட்ட விசேடமான முறையாகும்.

இங்கு அஸ்தி எனப்படும் மனிதச் சாம்பல் பாதுகாக்கப்படுவதற்கு முன்னர் பச்சைக் களிமண்ணால் செய்யப்பட்ட இந்த ஓடங்களில் எலும்புக் கூடு வைத்து எரிக்கப்பட்டே அஸ்தி பெறப்பட்டமையால் பச்சைக் களிமண் ஓடங்கள் அந்த நெருப்பில் பதமாக சுடப்பட்டுள்ளன. அவை இவ்வாறு நீண்ட காலம் நின்று நிலைப்பதற்கான காரணம் இதுவே ஆகும்.

### 2.2.2. குடியிருப்புகளின் தன்மை

வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் வேட்டையாடி வாழ்ந்த முறையிலிருந்து விடுபட்டு நிலையான வீடுகளை அமைத்துக் குடியிருப்புக்களை நிறுவியமை இக்காலத்தில் நிகழ்ந்த முக்கிய நிகழ்வாகும். நிலையான வாழ்வு (Sendentism) எனப்படும் இந்த இயல்பின் தெளிவான சான்றாக விளங்குவது தற்போது கண்டுபிடிக்கப்பட்டுள்ள அக்காலத்திற்குரிய வீடுகளின் எச்சங்களாகும். 2009 ஆம் ஆண்டு அவ்வாறான வீடொன்று இரத்தினபுரி மாவட்டத்திலுள்ள உடரஞ்சா மடம எனப்படும் கிராமத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அந்த வீடு 10.20 × 6.80 சதுர மீற்றர் அளவுடையதும் செவ்வக வடிவங்கொண்டதுமாகும். அதன் முன் பக்கமும் பின்பக்கமும் சுவரால் பிரிக்கப்பட்டிருந்தது. வீட்டின் சுவர் களி மண்ணால் கட்டப்பட்டிருந்ததுடன், கூரை இலுக்குப்புல் அல்லது அதைப் போன்றதொன்றினால் வேயப்பட்டிருந்திருந்தது .

### 2.2.3. வாழ்க்கை முறை

இலங்கையின் ஆரம்ப வரலாற்றுக் காலத்திற்குரிய வாழ்க்கை முறை எவ்வாறானது என்பதை அறிந்து கொள்வதற்கான போதிய சான்றுகள் இதுவரை கிடைக்கவில்லை. இதுவரையிலான அகழ்வுகளின் போது அதிகமாகக் கண்டறியப்பட்டவை மயானங்கள் என்றபடியால் அவற்றிலிருந்து அக்கால மனிதனின் வாழ்க்கைமுறைபற்றி அறிந்து கொள்ளக்கூடிய ஆதாரங்கள் மிகக் குறைவாகும்.

அது பற்றி அறிந்து கொள்வதற்கு ஓரளவிற்கேனும் உதவுவது உடரஞ்சாமடம எனும் இடத்தில் கிடைக்கப் பெற்ற குடியிருப்பொன்றின் அகழ்வுத் தகவல்களாகும். அங்கு கிடைத்த தொல்பொருள் 3000 வருடங்களுக்கு மேலான பழமை வாய்ந்ததொரு வீடாகும். அவ்வீட்டினுள்ளிருந்து உடைந்த மட்பாண்டத் துண்டுகள் பலவும் கிடைத்துள்ளன. அவற்றுள் நிறந்தீட்டப்பட்ட மடக்கு என்றழைக்கப்படும் ஒரு பாத்திரத்தின் துண்டுகளும் காணப்பட்டன.



*உரு. 2. 10. கி.மு.1129 இல் உடரஞ்சாமடம எனுமிடத்தில் அமைந்திருந்த வீட்டைச் சித்தரிக்கும் படம். அகழ்வின்போது கிடைத்த அத்திவாரத்தை அடிப்படையாகக் கொண்டு கற்பனையில் வரையப்பட்டது.*

வெள்ளை நிறப் பின்னணியில் சிவப்பு நிறக் கோடுகள் மூலம் அப்பாத்திரத்தின் வெளிப்புறமும் கீழ்ப்புறமும் அலங்கரிக்கப்பட்டுள்ளது. அக்கோடுகள் சமவளவு இடைவெளியில் அமைந்துள்ளமையால் அது மட்பாண்ட அச்சு ஒன்றின் மூலமே வடி வமைக்கப்பட்டுள்ளது என்பது உறுதியாகின்றது. இதே போன்றதொரு பாத்திரத்தின் பகுதிகள் ஹல்துமுல்ல குடியிருப்பொன்றின் அகழ்வுகளில் இருந்தும் கிடைத்துள்ளன.

அகழ்வாராய்ச்சிக்கு உட்படுத்தப்பட்ட வீட்டில் சமையலறை உபகரணங்கள் சிலவும் கிடைத் துள்ளன. அவற்றுள் அதிகமானவை கல்லாயுதங் களும் இரும்பாயுதங்களும் ஆகும். எனினும் அதிகளவில் கல்லாலான உபகரணங்களே இருந்தமையிலிருந்து அக்காலப் பகுதி மக்களுக்கு இரும்புப் பாவனை புதிய அனுபவமாயிருந்தமை தெரியவருகின்றது. சமையலறையில் இருந்த சிதைவுகளுள் அவ்வீட்டில் வசித்த மக்கள் உணவுக்காக வேட்டையாடிய விலங்குகளின் எலும்புகளும் கிடைத்துள்ளன. அவை மான், மாடு, காட்டுப்பன்றி, மர அணில் என்பவற்றின் எலும்புகள் என்று இனங்காணப்பட்டுள்ளன. விவசாய வாழ்க்கையை மேற்கொண்ட போதிலும் விலங்குகளை வேட்டையாடுவதை அவர்கள் முற்றாக நிறுத்திவிடவில்லை என்பது இந்தச் சான்றுகளில் இருந்து தெரியவருகின்றது.



*உரு 2.11 தம்புளைக்கு அருகிலுள்ள இப்பன் கட்டுவ மயானத்தில் காணப்படும் புதைகுழி இதனுள் மனிதனின் அஸ்தியுடன் கூடிய பாத்திரம் வைக்கப்பட்டுள்ளது.*

வீட்டினுள் இருந்து கிடைக்கப்பெற்ற ஏனைய பொருள்களுள் சில களிமண் மணிகளும் பெண்கள் கண்மையிடப் பயன்படுத்திய உலோகத்திலான குச்சி ஒன்றும் உடம்பில் வர்ணம் பூசுவதற்குப் பயன்படுத்தப்பட்ட மஞ்சள் மற்றும் சிவப்பு நிறத்திலான இரண்டு பூசு கற்களும் அவற்றை உராய்வதற்காகப் பயன்படுத்தப்பட்ட அரைக்கும் கற்கள் இரண்டும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அக்காலத்தில் வாழ்ந்த பெண்கள் தம்மை அலங்கரித்துக் கொள்வதில் அதிக அக்கறை காட்டியுள்ளமை இச்சான்றுகளின் மூலம் தெரிய வருகின்றது.

**செயற்பாடு 02**

இலங்கையில் முன் வரலாற்றுக் காலத்தில் குடியிருப்புகள் பரவலடைந்த விதத்தைப் புறவுருவப் படமொன்றில் குறித்து பெயரிடுக.




*உரு 2.12 கி.மு. 1129 என நாள் நிர்ணயிக்கப்பட்டுள்ள உடரஞ்சா மடம எனும் இடத்தில் புராதன வீடு ஒன்றில் கண்டெடுக்கப்பட்ட நிற வேலைப்பாடுகளுடன் கூடிய மட்பாண்டம். ஆதிகாலம் தொட்டு வனைதல் தொழினுட்பம் இலங்கையிலிருந்து வந்ததற்கு இது ஓர் உதாரணமாகும் என்பதை உறுதிப்படுத்துகின்றது. படத்தின் இடப்பக்கத்தில் இந்த மட்சாடி காணப்பட்ட விதத்தைக் காட்டும் சித்திரம் உள்ளது.*

### 2.2.4. தொழினுட்பம்

வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் இருந்த கல்லாயுத தொழினுட்பத்திலிருந்து மெதுவாக விடுபட்டு, உலோக மற்றும் மட்பாண்டங்கள் செய்யும் தொழினுட்பத்திற்கு மாற்றமடைந்தமை ஆரம்பமானது முன்வரலாற்றுக்காலம் எனப்படும் காலத்திலாகும். உலோகமாக இரும்பைப் பயன் படுத்தியமை ஆரம்பித்ததால் இக்கால மக்கள் தமது அன்றாட வேலைகளை வினைத்திறமையாகச் செய்யக்கூடிய நிலை உருவானது. இரும்பு பலம் வாய்ந்த உலோகமாதலால் காடுகளை அழித்தல், நிலத்தைப் பண்படுத்தல், உழுதல் போன்ற வேலைகளை எளிதாகச் செய்யக்கூடியதாக இருந் தது.

உடரஞ்சாமடம் என்ற இடத்தில் பழைய வீடொன்றில் கண்டெடுக்கப்பட்ட நிறந்தீட்டப் பட்ட மட்பாண்டம் அக்காலத்தில் மட்பாண்ட தொழில் அடைந்திருந்த உயர்நிலையைக் காட்டு கிறது. வீடுகள் கட்டுதல் ஆரம்பித்ததால் அத னுடன் தொடர்புடைய தொழினுட்ப அறிவும் படிப்படியாக வளர்ச்சியடைந்தது. சிறப்பாக வீடுகள் கீழிறங்காமல் இருப்பதற்கு நிலத்தை தயார் செய்தல், நிலத்திற்கு செங்குத்தாக சுவர் அமைத்தல், கதவுகளை முறையாக அமைத்தல் என்பன அவற்றில் அடங்கும். உடரஞ்சாமடம வீட்டில் செய்யப்பட்ட அகழ்வுகளின்போது மண்ணாலான மணி ஒன்று கிடைக்கப்பெற்றுள்ளது. மணிகள் செய்யும் தொழினுட்பம் அக்காலத்தில் இருந்தது என்பது இதிலிருந்து தெளிவாகிறது. மணிகள் செய்வது மிகவும் நுட்பமான தொழினுட்பமாகும்.

### 2.3. ஆரம்ப வரலாற்றுக் காலக் குடியிருப்புகள்.

இலங்கையின் ஆரம்ப வரலாற்றுக் காலத்திற்குரிய குடியிருப்புகள் பற்றிய விபரங்கள் வரலாற்று மூலாதாரங்களில் பதிவாகியுள்ளன. அவ்வாறான குடியிருப்புகள் அமைந்திருந்த இடங்களைச் சரியாக இனங்காண அத்தகவல்கள் போதிய வையாக இல்லை.

ஆயினும், அந்தக் குடியிருப்புகளின் மாதிரி எவ்வாறானது என்பதை அறிந்து கொள்வதற்கு அத்தகவல்கள் உதவுகின்றன. இலங்கையின் பண்டைய குடியிருப்புகளின் பரம்பல் மற்றும் அதனுடன் தொடர்பான வேறு தகவல்கள் பற்றிச் சரியாக அறிந்து கொள்வதற்குத் தொல்பொருள் சான்றுகளே பெரிதும் உதவுகின்றன. ஆரம்ப வரலாற்றுக்காலம் என்பது கி.மு. 450 - கி.பி. 300 வரையிலான காலப்பகுதியாகும்.

இக்காலப் பகுதியில் இலங்கையின் குடியிருப் புகள் பரம்பியிருந்த பிரதேசங்களைச் சரியாகக் காட்டும் சுட்டியாக அமைவது சிறியளவிலான கிராமக் குளங்களின் பரம்பலாகும். சிதைவு களாகிப்போன அவ்வாறான கிராமச் சிறு குளங்கள் ஆயிரக்கணக்கில் இலங்கை முழுதும் பரம்பிக் காணப்படுகின்றன. ஆரம்ப வரலாற்றுக்

கால குடியிருப்புகளில் பெரும்பாலானவை குளமொன்றை மையமாகக் கொண்டு அதன் அருகாமையிலே அமைந்திருந்தன. குளக்கட்டின் ஓர் அந்தத்திலே குளத்துக்கு அண்மையில் அக்கிராமங்கள் அமைந்திருந்தாக தொல்பொருள் களப்பயணங்கள் மூலம் கண்டறியப்பட்டுள்ளது.

### 2.3.1. குடியிருப்புகளின் பரம்பலில் செல்வாக்குச் செலுத்திய பிரதான காரணிகள்

பண்டைய குடியிருப்புகளின் பரம்பலில் பௌதிகப் பின்னணியே செல்வாக்குச் செலுத்தியுள்ள பிரதான காரணியாகத் திகழ்கின்றது. வருடாந்த மழை வீழ்ச்சியின் அளவு, மண்ணின் தன்மை, தரைத் தோற்ற வேறுபாடு, இயற்கை வளங்களின் பரம்பல், நீரோடைகள் என்பன இவற்றுள் பிரதானமானவை.

ஆரம்ப வரலாற்றுக் காலத்தில் இலங்கையின் உலர் வலயத்திலேயே குடியிருப்புகள் பரவலடைந்தன. ஆண்டு சராசரி மழைவீழ்ச்சி 1000 - 1250 மில்லி மீற்றர் அளவில் கிடைக்கப் பெறும் பிரதேசம் உலர் வலயம் என்றும் 1000 மில்லிமீற்றரை விடக் குறைவாகப் பெறும் பிரதேசம் அரை வறள் வலயம் என்றும் குறிப்பிடப்படும். விவசாயத்துக்குத் தேவையான அளவு மழை நீரை ஆண்டு முழுதும் பெற்றுக் கொள்வதற்கு முடியாத போதிலும் ஆரம்ப காலக் குடியேற்றங்கள் உலர் வலயத்திலயே பரவியமைக்கான காரணம் அங்கு வளமான மண் காணப்பட்டமை ஆகும்.

செங்கபிலநிற மண் எனப்படும் மண் வகை உலர் வலயத்தில் பெருமளவில் காணப்படும். விவசாயத்துக்கு மிகச் சிறந்ததாகும். இப்பிரதேச விவசாய நடவடிக்கைகளுக்காக நீரைப் பெற்றுக் கொள்ளும் இரண்டு வழிகள் காணப்பட்டன. அதில் பிரதானமானது பருவ மழையாகும். மற்றையது ஆற்று நீர் ஆகும். அவ்வாறு நதி நீரைப் பயன்படுத்துவதாயின் ஆற்றுக்குக் குறுக்கே அணை கட்டுதல், சேமித்த நீரை தேவையான இடத்துக்குக் கொண்டு செல்வதற்குக் கால்வாய் வெட்டுதல் முதலிய நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டியிருந்தது. அது கடுமையான உழைப்பு, காலம், தொழினுட்பம்



*உரு 2.13. புராதன அநுராதபுரத்தின் உள்நகர் அகழ்வுகளின்போது கண்டுபிடிக்கப்பட்ட செவ்வக வடிவான வரிச்சு தளத்தில் வீடொன்றின் கம்பங்கள் நடப்பட்டிருந்த குழிகள்.*

என்பவற்றைப் பிரயோகிக்க வேண்டிய செயற்பாடு என்பதால் குளங்களை அமைத்து நீரைச் சேமித்து வைப்பதிலே அன்றைய மனிதன் அதிகளவு அக்கறை செலுத்தியுள்ளான்.

ஆரம்ப வரலாற்றுக் காலத்துக்குரிய குடியிருப்புகள் வளர்ச்சியடைந்த விதம் பற்றி மேற்கொள்ளப்பட்ட விபரமான ஆய்வுகளின் பெறுபேறுகளின்படி இலங்கையின் வரலாற்றுக் காலத்தின் ஆரம்பக் குடியிருப்புகள் அமைந்தது ஆற்றங்கரைகளில் அல்ல. அதற்கு அப்பால் உள்ள பிரதேசங்களில் ஆகும் என்ற உண்மை தெரியவந்துள்ளது. இதற்கான பிரதான காரணம் ஆண்டுதோறும் ஆறுகளில் ஏற்படும் அழிவு தரும் வெள்ளப் பெருக்கைக் கட்டுப்படுத்துவதற்கான தொழினுட்ப அறிவு அக்கால மனிதனிடம் இல்லாதிருந்தமையாகும். ஆறுகளை மறித்து அணை கட்டி அந்நீரை குளத்துக்கு வழங்கி வெள்ளப் பெருக்கைக் கட்டுப்படுத்தும் முறை கி.மு. 1 ஆம் நூற்றாண்டின் இறுதி அரைப் பகுதியில் அல்லது கி.பி. 1 ஆம் நூற்றாண்டிலேதான் ஆரம்பித்திருக்க வேண்டும். திஸ்ஸமகாராம குளத்தை அமைத்த இளநாக மன்னனின் (கி.பி. 33 - 43) ஆட்சிக் காலத்தில் கிரிந்தி ஓயாவிற்குக் குறுக்காக அணை ஒன்று கட்டப்பட்டது.

குருணாகல் மாவட்டத்தில் உள்ள கணேகந்த விகாரை மற்றும் கல்லென விகாரை என்பவற்றில் காணப்படும் கற்குகைகள் இரண்டிலும் பிராமி எழுத்தில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுக்களில் காணப்படும் ''அவரண'' என்ற சொல்லின் பொருள் அணைக்கட்டு என்பதாகும்.

### 2.3.2. குடியேற்றத்தின் கட்டமைப்பும் தன்மையும்

மழைநீரால் ஊட்டம் பெறும் சிறு குளங்களை மையப்படுத்தி ஆற்றுப்பள்ளத்தாக்குகளும் வெளியே அமைந்த குடியேற்றங்கள் ஒன்றுக்கொன்று சுயாதீனமானவை. ஒரு குளத்தை அடிப்படையாகக் கொண்டு வளர்ச்சியடைந்த அக்குடியேற்றம் "வாபிகாம" என்று இலக்கிய மூலாதாரங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.மகாவம்சம் குறிப்பிடும் சுமண வாபிகாம, விஹார வாபிகாம, ஹுந்தரி வாபிகாம, கடஹ வாபிகாம முதலிய கிராமங்கள் அவ்வாறான குளக்குடியேற்றக் கிராமங்களாகும்.

ஒரு கிராமம் மற்றைய கிராமத்திலிருந்து காடுகளால் பிரிக்கப்பட்டிருந்தது. குளக் கிராமங்கள் தவிர இவ்வாறு ஒன்றிலிருந்தொன்று தனித்தன்மை கொண்ட கிராமங்கள் பற்றி வரலாற்று மூலாதாரங்களில் சுருக்கமாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. பல்வேறு தொழில்களை மேற்கொண்ட மக்கள் தமது தொழில் ரீதியாக ஒன்றுபட்டு வாழ்ந்த சில குடியிருப்புகள் வம்சக் கதைகளிலும் கல்வெட்டுக்களிலும் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளன :

1. கசீகார காம - விவசாயிகள் வாழ்ந்த கிராமம்.
2. மணிகார காம - இரத்தினம் அகழ்வோர், பட்டை தீட்டுவோர் வாழ்ந்த கிராமம்.
3. கோபால காம - இடையர் வாழ்ந்த கிராமம்.
4. கேவட்ட காம - மீனவர் வாழ்ந்த கிராமம்.
5. கும்பகார காம - குயவர் வாழ்ந்த கிராமம்.
6. வட்டகீ காம - தச்சர் வாழ்ந்த கிராமம்.

இவை தவிர செயற்பாடுகளின் அடிப்படையிலமைந்த சில கிராம வகைகளும் காணப்பட்டன.

7. பட்டான காம - துறைமுகத்தை அண்டிய கிராமம்
8. நியம் கம் - வர்த்தகக் கிராமம் (சிறு நகரம்)
9. ஒலகம் - மக்களால் கைவிடப்பட்ட குளங்களை அண்டிய கிராமம்.

பண்டைய குடியேற்றங்களின் பரப்பளவு எத்தகையது என்பது பற்றி உறுதியான முடிவொன்றுக்கு வருவது சிரமமானது. அது பல்வேறு புவியியற் பிரதேசங்களில் காணப்படும் இயற்கை வளங்களின் அடிப்படையில் தங்கியிருந்தது. ஆயினும் தற்சமயம் மேற்கொள்ளப்பட்டுள்ள தொல்பொருள் ஆய்வுகளின்படி கிடைத்துள்ள தகவல்களின் அடிப்படையில் சிறிய கிராமமொன்றின் பரப்பளவு பொதுவாக 0.15 ஹெக்டெயரைவிடக் குறைவானதாகும். மத்திய அளவிலான கிராமமொன்றின் பரப்பளவு ஏறத்



*உரு .2.14 - அநுராதபுரத்தின் புராதன உள் நகர் அகழ்வின்போது கண்டுபிடிக்கப்பட்ட வரிச்சு தளம். வட்ட வடிவ வீடொன்றின் கம்பங்களை நடுவதற்குப் பயன்படுத்தப்பட்ட குழிகள்.*

தாள 2 ஹெக்டயர் அளவுடையது. மிகப் பெரிய நகரக் குடியிருப்பு இரண்டு ஹெக்டேயரை விடப் பரப்பில் கூடியதாகக் காணப்பட்டது.

பொதுவாகக் கிராமம் ஒன்றில் 5 - 6 குடும்பங்களே வசித்தன. சில பெரிய கிராமங்களில் முப்பது குடும்பங்கள் வாழ்ந்ததாகவும் இலக்கிய மூலாதாரங்கள் குறிப்பிடுகின்றன. நகர்ப்புற குடியேற்றங்களில் இந்நிலை மாறிக் காணப் பட்டது. கி.பி. 6 ஆம் நூற்றாண்டு ஆகும்போது பண்டைய மாகம நகரிலும் அதனை அண்மித்த நகரங்களிலும் குறைந்தது 35 000 பேர் அளவில் வாழ்ந்ததாக அறியப்பட்டுள்ளது. சில கிராமங்கள் வேலியிட்டு பாதுகாக்கப்பட்டிருந்ததாக இலக்கிய மூலாதாரங்கள் குறிப்பிடுகின்றன. அவ்வாறான கிராமங்கள் ''பரிகித்தகம'' எனும் பெயரால் குறிப்பிடப்பட்டன. அவ்வாறு பாதுகாக்கப் படாத கிராமங்கள் ''அபரிகித்தகம'' என்று அழைக்கப்பட்டன.

பெரிய நகரக் குடியேற்றங்களைக் குறிப்பதற்கு ''புரம்'' எனும் சொல் பயன்படுத்தப்பட்டது. கி.மு. 250ஆம் ஆண்டளவில் எழுதப்பட்ட பிராமி கல்வெட்டொன்றில் புரகமத்த எனும் பதவிப் பெயர் ஒன்று குறிப்பிடப்பட்டுள்ளது. அது நகரத்தின் பிரதான கட்டட (வாஸ்து) கலைஞரையே குறிக்கின்றது. முதலாம் விஜயபாகு (கி.பி. 1055 - 1110) மன்னனின் பனாகடுவ செப்பு சாசனத்தில் அநுராதபுரம், ''நுருபுரம்'' எனும் சொல்லி னாலேயே குறிப்பிடப்பட் டுள்ளது.

நகர அல்லது நகரம் எனும் விசேட குடியிருப்புகள் பற்றி இலங்கையின் புராதன கல்வெட்டுகளில் குறிப்பிடப் பட்டுள்ளன. இங்கு நகரம் எனக் குறிப்பிடப்படுவது கிராமம், புரம் இரண்டுக்கும் இடைப்பட்ட குடியிருப்பு வகை ஒன்றாகும். கிராமங்க ளின் உற்பத்திப் பொருள்கள் வியாபார நோக்கிற்காக இவ் விடைப்பட்ட நகரங்களின் ஊடாக மாநகரங்களுக்குக் கொண்டு செல்லப்பட்டன. அவை அளவில் கிராமத்தை விடச் சற்றுப் பெரிய குடியிருப்புகளாகக் காணப்பட்டன.

ஆரம்ப வரலாற்றுக் காலத்துக்கு முன்னரே குடி யிருப்புகளின் ஒழுங்கமைப்பும் நிர்வாகமும் கட்டுக்கோப்புடன் திகழ்ந்தமைக்கான ஆதாரங்கள் காணப்படுகின்றன. கிராமம் என்பது சில குடும் பங்களைக் கொண்ட ஒரு அலகாகும்.

குடும்பம் என்பது கிராமத்தின் முக்கியத்துவம் வாய்ந்த ஒரு அம்சமாகும். குடும்பத்தைப் பிரதி நிதித்துவப்படுத்தியவர் குடும்பத் தலைவனாவான். பிராமிக் கல்வெட்டுகளில் அவன் “கஹபதி” என்று குறிப்பிடப்படுகின்றான். கிராமத்தின் குடும்பத் தலைவர்களைக் கொண்ட குழுவின் தலைவன் “கமிக” அல்லது “கிராமிக” எனும் பெயரால் அழைக்கப்பட்டான். அதன் பொருள் கிராமத் தலைவன் என்பதாகும். பிற்காலத்தில் இவ்வாறான கிராமத் தலைவர்கள் பத்துப் பேரைக் கொண்ட சபை ஒன்றின்மூலம் நிர்வாகம் தொடர்பான கிராமங்கள் அமைந்திருந்த பிரதே சங்களின் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதில் ஈடுபட்டது.




*தேசப்படம். 2.3. புரதான இலங்கையின் கிராமக் குளங்களின் பரம்பல் இங்கு காட்டப்பட்டுள்ளது. கிராமம், குளம், கல்வெட்டு, என்பவற்றிற்கிடையில் நெருங்கிய தொடர்பு காணப்பட்டமையால் குளங்களின் பரம்பல் குடியிருப்புகளின் பரம்பலைப் பறைசாற்றுகின்றன.*




*தேசப்படம் : 2.4 அம்பாந்தோட்டை மாவட்டத்திற்குரிய திஸ்ஸமகாராமை பிரதேசத்தினூடாகப் பாய்ந்தோடும் கிரிந்தி ஓயாப் பகுதியில் பரம்பிக் காணப்பட்ட குடியிருப்புக்களைக் காட்டும் வரைபடம். இங்கு நதியிலிருந்து தொலைவில் அமைந்துள்ள குடியிருப்புக்கள் கி.மு. 900 - 500 காலப்பகுதிக்குரியனவாகும். அவை அப்பகுதியின் ஆரம்பக் குடியேற்றங்களாகும். நதிக்கு அருகாமையில் குடியிருப்புக்கள் உருவானது நதியின் வெள்ளப்பெருக்கைக் கட்டுப்படுத்த உத்திகள் கையாளப்பட்ட பின்னராகும்.*

இந்தச் சபை கல்வெட்டுகளில் பத்து கிராமப் பிரதானிகள் (தசகம் எத்தன) எனும் பெயரால் குறிப்பிடப்படுகின்றது. மாத்தளை மாவட்டத்தின் தம்புள்ள பிரதேசத்தில் அமைந்துள்ள களுதிய பொகுண எனும் பண்டைய பௌத்த விகாரையில் உள்ள ஒரு கல்வெட்டில் அவ்விகாரைப் பிக்குகளுக்குத் தானம் வழங்குவதில் ஏதும் பிரச்சினைகள் நேர்ந்தால் பத்துக் கிராமப் பிரதானிகளும் சேர்ந்து அப்பிரச்சினைக்குத் தீர்வு காண வேண்டும் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

அநுராதபுரத்தில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வுகளில் பழைய கிராமிய வீடுகள் சிலவற்றின் அத்திவாரங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அவை மண் சுவர்களையும் இலைகுழைகளிலான கூரைகளையும் கொண்ட குடிசைகளாகும். அவற்றில் சில வீடுகள் வட்ட வடிவினைக் கொண்டவை. சில வீடுகள் சதுரமான தரை அமைப்பைக் கொண்டன. அவை அமைந்திருந்த இடங்களில் எஞ்சியிருந்த தூண்களின் குழிகள் மாத்திரமே தொல்பொருள் ஆய்வாளர்களுக்குக் கிடைத்துள்ளன. திஸ்ஸமகாராமையில் வலகம் பத்து எனப்படும் கிராமத்தில் புராதன வீடொன்றின் அடையாளங்கள் கண்டுப்பிடிக்கப் பட்டுள்ளன. நிலத்தை அகழ்ந்து, அதன் மேல் மண்ணினால் மெழுகி அந்த வீட்டின் தளம் அமைக்கப்பட்டிருந்தது. அந்த வீடு கி.பி. 3 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததென விஞ்ஞான ரீதியாக நிரூபிக்கப்பட்டுள்ளது.

புராதன காலத்தில் இந்நாட்டில் இருந்த குடியிருப்புக்கள் எவ்வாறானவை என்பது பற்றிக் கற்றுக் கொள்வதற்கு உங்களுக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. மிகப் பழங்காலந் தொடக்கம் ஒற்றுமையாகவும் முறையாகவும் வாழ்ந்த மக்களது வாழ்வு உங்களுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.



*உரு. 2.15 இங்கு சித்தரிக்கப்படுவது இலங்கையின் பண்டைய கிராமம் ஒன்றின் கற்பனைச் சித்திரமாகும். இயற்கையுடன் இணைந்து வாழ்தல், அதனால் உருவான எளிமையான வாழ்க்கை முறை என்பன கிராம வாழ்க்கையின் விசேட பண்புகளாகும்.*

### சீவனோபாயம்

ஆற்றுப்பள்ளத்தாக்குகளுக்கு அப்பாலுள்ள பிரதேசங்களில் குடியிருப்புக்கள் பரவலடையும்போது அங்கு வாழ்ந்தோரது சீவனோபாயமாக விளங்கியது சேனைப் பயிர்ச் செய்கையாகும். குரக்கன், மெனேரி, எள், தினை என்பன அங்கு பயிரிடக் கூடியன. வரட்சிக்கு முகங்கொடுக்கக்கூடிய இந்தப் பயிர்கள் நீர் குறைந்த பிரதேசங்களிலும் பயிரிடக்கூடியனவாகும். குடியிருப்புகளில் வாழ்ந்த மக்கள் தொகை அதிகரித்ததால் அதற்கேற்றவாறு உணவு உற்பத்தியை அதிகரிக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. உற்பத்தி அதிகரிப்புக்குக் கூடுதலான நீர் தேவைப்பட்டது. எனவே கிராமிய குளங்கள் அமைக்கப்பட்டன. ஆற்றுப்பள்ளத்தாக்குகளுக்கு அப்பால் ஆரம்பமான ஆரம்ப வரலாற்றுக் குடியிருப்புக்கள், ஆற்றங் கரையை நோக்கி வருதல் தொடர்பான தெளிவான விபரம் கிரிந்தி ஓயாக் கரையில் அமைந்த பழைய குடியிருப்புக்களில் மேற்கொள்ளப்பட்ட கற்கைகள் மூலம் காட்டப்பட்டுள்ளது.
(தேசப்படம் 2.4 ஐப் பார்க்கவும்.)

**செயற்பாடு 03**

இலங்கையின் வரலாற்றுக்கு முற்பட்ட காலம், முன்வரலாற்றுக் காலம், வரலாற்றுக் காலம் எனும் காலப் பகுதிக்கான குடியேற்றங்களில் காணப்பட்ட அடிப்படை பண்புகளின் வேறுபாடுகளை அட்டவணைப்படுத்துக.

முக்கியமான விடயங்கள்

1. இலங்கையின் முதல் குடியேற்றங்கள் நிறுவப்பட்டது இலட்சக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னாகும். அவ்வாறு குடியேற்றங்களை அமைத்தவர்கள் ஆதி ஹோமோசேப்பியன்களாவர்

2. ஆதி ஹோமோசேப்பியன்கள் இந்நாட்டின் பல்வேறு பிரதேசங்களிலும் குடியேறி அப்பிரதேசத்தின் கால சூழ்நிலைக்கேற்ப தம்மை மாற்றிக் கொண்டு வாழத்தலைப் பட்டான். அவ்வாறு இலங்கையின் அநேக பிரதேசங்களில் அவர்கள் வாழ்ந்துள்ளனர். அவர்கள் எந்தவொரு இனத்தின் தனித் துவத்தையும் பிரதிபலிக்கவில்லை.

3. இலங்கையின் ஆரம்பக் குடியேற்றவாசிகளின் கலாசாரப் பண்பாடு நிலவிய காலப் பகுதி வரலாற்றுக்கு முற்பட்ட காலம் எனப்படும். அக்காலத்தில் அவர்களின் சீவனோபாயமாய் அமைந்தது வேட்டையாடுதலும் அலைந்து திரிந்து உணவு சேகரித்தலுமாகும்.

4. அக்காலப் பகுதியில் கல்லாயுதத் தொழினுட்பம் நிலவியது. தனது அன்றாட தேவைகளின் நிமித்தம் அவர்கள் படிகம் மற்றும் மஞ்சள் கற்பாறைகளைப் பயன் படுத்தி கல்லாயுதங்கள் தயாரிப்பதற்குப் பழகியிருந்தனர். இலங்கையின் முன் வரலாற்றுக் காலத்தைக் குறிப்பதற்கு மத்திய கற்காலம் எனும் சொல் பயன்படுத்தப்படுகின்றது.

5. பிற்காலத்தில் இந்நாட்டில் வாழ்ந்த முன் வரலாற்றுக்கால மக்கள் விவசாயம் செய்வதற்குப் பழக்கப்பட்டமைக்கான சான்றுகள் கிடைத்துள்ளன. தற்போது கிடைக்கப் பெற்றுள்ள தரவுகளின்படி அம்மாற்றம் நிகழ்ந்தது கி.மு. 2400ஆம் ஆண்டை அண்மிய காலத்திலாகும்.

6. மட்பாண்டம் வனைதல், மயானங்களைப் பயன்படுத்துதல், இரும்பு உலோகத்தைப் பயன்படுத்துதல் என்பன பிற்காலப் பகுதி யில் ஆரம்பமாகின. இக்காலப் பகுதி முன் வரலாற்றுக் காலம் எனப் பெயரிடப்பட்டுள் ளது.

7. முன் வரலாற்றுக் காலம் முக்கியத்துவம் பெறுவதற்கான காரணம் இலங்கை நாகரிகத்தின் வளர்ச்சிக்கான அடிப் படை இக்காலப் பகுதியில் இடப் பட்டமையாகும். இந்நாட்டில் வாழ்ந்த மனிதர்கள் கிராமங்களில் வாழ ஆரம்பித் ததும் இக்காலப் பகுதியிலாகும்.

**இரணைமடுப் படிவு :**

*பெரும் பனிக் காலத்தின் குளிரான காலப்பகுதியில் இலங்கை அதிக மழைவீழ்ச்சியைத் தொடர்ந்து பெற்றது. அப்போது உயரமான பகுதிகளில் மண்ணரிப்பு நிகழ்ந்தது. அச்சமயம் மலைநாட்டில் அரிக்கப்பட்ட பாறைகள் தாழ்நிலங்களில் படிவுகளாக மாறின. கடற் கரையிலிருந்து 32 கிலோமீற்றர் தூரம் வரையிலான நாட்டின் உட்பிரதேசத்தில் அவ்வாறு படிந்துள்ள மண் படையைக் காணமுடிகின்றது. அது இரணைமடுப் படிவு என்றே பெயரிடப்பட்டுள்ளது. ஏனெனில் இம்மண் படிவு முதன் முதலாக இரணைமடுக் குளத் தின் சூழலிலே கண்டுப்பிடிக்கப்பட்டமையாலாகும். இம்மண் படிவுகளில் வரலாற்றுக்கு முந்திய கால மனிதனால் பயன்படுத்தப்பட்ட கல்லாயுதங்கள் புதைந்துள்ளன.*

**ஆதி ஹோமோசேப்பியன் :**

*நவீன மனித குலம் ஹோமோசேப்பியன் என்றே அழைக்கப்பட்டது. இந்நவீன மனித குலத்தின் முதல் மனிதன் தோன்றியது இற்றைக்கு ஐந்து இலட்சம் ஆண்டுகளுக்கு முன்பாகும். 500 000 - 200 000 ஆண்டு களுக்கு இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்த முதல் நவீன மனிதனே ஆதி ஹோமோசேப்பியன் (Archaic Homo sapiens) எனப்படுகின்றான்.*

**நுட்பமான கல்லாயுதங்கள் :**

*வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தின் இறுதிப் பகுதியில் பயன்படுத்தப்பட்ட சிறிய அளவிலான கல்லாயுதங்களே இவ்வாறு குறிப்பிடப்படுகின்றன. படிகம் மற்றும் மஞ்சள் நிறப் பளிங்குப் பாறைகளால் உருவாக்கப்பட்ட இக்கல்லாயுதம் 1 - 7 சென்ரிமீற்றர் வரையிலான நீளமுடையது. சிறிய கல்துண்டுகளின் ஒரு பகுதி நன்கு கூர்மைப்படுத்தப்பட்ட இச்சிறிய கல்லாயுதம் தடி ஒன்றில் அல்லது மிருக எலும்பு ஒன் றுடன் உறுதியாகப் பிணைக்கப்பட்டிருந்தது.*

**நதிப் பள்ளத்தாக்கு :**

*அதிகளவு மழை பெய்யும் காலப்பகுதியில் நதிகளில் வெள்ளப் பெருக்கு ஏற்படும். அச்சமயம் நதிக்கரையின் இரு மருங்கிலும் உள்ள மேட்டு நிலங்கள் நீரில் மூழ்கும். இவ்வாறு வெள்ள நீரில் மூழ்கும் பிரதேசமே நதிப் பள்ளத்தாக்கு எனப்படும். வெள்ள நீரின் மூலம் கொண்டு வரப்பட்ட வண்டல் இப்பிரதேசத்தில் படிந்திருக்கும். எனவே இது வளமான மண்ணைக் கொண்டிருக்கும். கடற்கரையை அண்மித்த இவ்வாறான பகுதி டெல்டா (Delta) கழிமுகம் எனப்படும்.*

# 3 இலங்கையின் அரசியல் அதிகார வளர்ச்சி

## அறிமுகம்

முற்காலத்தில் எமது நாட்டை அரசர்கள் பலரும் அரசிகள் சிலரும் ஆட்சி செய்ததாக வரலாற்று மூலாதாரங்கள் குறிப்பிடுகின்றன. இந்தியாவிலிருந்து இங்கு வந்த இளவரசன் விஜயன் இலங்கையை ஆண்ட முதல் மன்னன் என அம்மூலாதாரங்களில் குறிப்பிடப்பட் டுள்ளது. அவன் இந்நாட்டிற்கு வந்தது கி.மு. 6 ஆம் நூற்றாண்டிலாகும்.

இளவரசன் விஜயன் இங்கு வருவதற்கு முன்னரே இந்நாட்டில் குடியிருப்புகள் இருந்ததாக தொல்பொருள் ஆதாரங்கள் மூலம் நிரூபிக்கப் பட்டுள்ளன. கி.மு. 2400 வருடங்களுக்கு முன் பிருந்தே முன்னேற்றகரமான விவசாய சமூகம் ஒன்று காணப்பட்டதாக பெரகல, ஹல்துமுல்ல ஆகிய பிரதேசங்களில் கண்டறியப்பட்டுள்ள புராதன மயானங்களில் இருந்து உறுதிப்படுத்தப் பட்டுள்ளது. அவ்வாறான சமூகம் ஒன்று பூசல்கள் பிரச்சினைகள் இன்றி வாழ்ந்திருக்குமானால், அச்சமூகத்தை நிர்வகிக்க ஏதாவது முறைமை ஒன்று இருந்திருக்க வேண்டும். அவ்வாறாயின் இந்நாட்டு அரசியல் அதிகாரத்தின் வரலாறு, இளவரசன் விஜயனுக்கு முன்பிருந்தே ஆரம்ப மாகி இருக்க வேண்டும்.

ஒரு நாட்டை ஆளும் அதிகாரத்தை அரச னுக்கோ அரசிக்கோ வழங்குவது அந்நாட்டு மக்களாவர். எவரொருவருக்கும் நாட்டை ஆள்வதற்குப் பொதுமக்களின் விருப்பு இன்றி யமையாததாகும். மக்களின் விருப்பின்றி, அதிகாரத்தைக் கைப்பற்றிக் கொண்ட ஆட்சி யாளர்களுக்கு நீண்ட காலத்திற்கு அந்நாட்டை நிர்வகிக்க முடியாதுபோனமையை வரலாறு எமக்கு எடுத்துக்காட்டியுள்ளது. பெரும் பான்மையோரின் ஆதரவுடன் நாட்டை நிர்வ கிக்கும் அதிகாரத்தைப் பெற்றுக் கொள் வதனால், அதனைக் குறிப்பிட "பெருவிருப்பு" எனும் சொற்பிரயோகம் புராதன காலத்தில் கீழைத்தேசங்களில் பயன்படுத்தப்பட்டு வந் துள்ளன. இவ்வாறான மக்களின் விருப்பைப் பெற்றுக் கொள்ளும் அரசர்கள் அல்லது அரசிகள் ஆகியோர் மூலம் ஆளப்படுவது சம்பிரதாய பூர்வ மானதாகும். இந்நிர்வாகத்தில் பங்கு பெறும் பல்வேறுபட்ட அதிகாரிகள் பொது மக்கள் ஆகியோர் ஆட்சி செய்யும் நிலப்பகுதியுடன் அரசு எனும் சொல்லால் குறிப்பிடப்படுவர்.

## 3.1. அரசுகளுக்கு முற்பட்ட காலம்

மேலே குறிப்பிடப்பட்ட விளக்கத்திற்கு இயைபாக இலங்கையின் வரலாற்றில் அரசு எனும் அமைப்பு வளர்ச்சி பெற்றது ஓரளவு பிற்காலத்திலாகும். இது தொடர்பாக பாடத்தின் அடுத்த பகுதிகளில் கவனம் செலுத்தப்படும். அரசொன்று தோன்றுவதற்கு முன்பு இலங்கையில் நாட்டை நிர்வகிக்க நிலவிய அமைப்பு எது என்பதில் இங்கு கவனம் செலுத்தப்படுகின்றது. இதுவே அரசுக்கு முற்பட்ட காலம் எனக் குறிப்பிடப்படுகின்றது.

அரசுக்கு முற்பட்ட காலத்தில் இந்நாட்டை ஆள்வ தற்கு குறிப்பிட்ட ஆட்சியாளர் ஒருவர் இருக்க வில்லை. அதற்குப் பதிலாக சிறிய பிரதேசங்க ளில் சொத்துள்ள செல்வந்த பிரபுக்களே ஆட்சி அதிகாரத்தை மேற்கொண்டிருந்தனர். இந்நாட்டின் ஆரம்ப காலக் கல்வெட்டுகளில் இப்பிரபுக்கள் பருமக எனும் பெயரால் குறிப்பிடப்பட்டுள்ளனர். பருமக எனும் சொல் பிரமுக எனும் சமஸ்கிருத மொழிச் சொல்லிலிருந்து பிறந்ததாகும். இச்சொல் தலைமை என்பதைக் குறிக்கும். சிறிய பிரதேசம் ஒன்றிலாயினும் அவர்களுக்கு இவ்வாறு ஆட்சிபுரியும் அதிகாரம் கிடைத்தது அவர்களது செல்வத்தினாலும், அதனால் கிட்டிய பலத்தினாலுமாகும்.

பருமக என்பவர் ஏதாவது ஒரு வகையில் பிரதே சத்தின் நிர்வாக அமைப்பைக் கொண்டிருந்தார் என்பதைக் குறிப்பிடும் கல்வெட்டு ஒன்று



*உரு.3.1. கிராமங்களில் வாழ்ந்த குடும்பத் தலைவர்களில் இருந்து நபர் ஒருவர் அக்கிராமத்தின் தலைவனானார். அவர் கமிக எனும் பெயரால் குறிப்பிடப்பட்டார். கிராமங்களுக்கிடையேயான தொடர்பாடல்கள் இவர்கள் மூலம் இடம்பெற்றன.*

தம்புள்ளைக்கு அருகில் உள்ள கண்டலம எனும் பிரதேசத்தில் கொத்கல்கந்தையில் காணப்படுகின்றது. அக்கல்வெட்டு கி.மு. 250 ஆம் ஆண்டுக்குரியதாகும். அம்மலையில் காணப்படும் குகை ஒன்றை பிக்குகளுக்குத் தானமளித்த பருமக "தொட்ட போஜக" எனும் பெயரால் குறிப்பிடப்பட்டுள்ளார். அதன் பொருள், படகுத் துறையை நிர்வகிப்பவர் என்பதாகும். இவர் வரி வசூலிப்பவராகவும் சொத்துக்களை உடையவராகவும் இருந்த மையால் நிர்வாக அதிகாரத்தைக் கொண்டவராக இருந்திருக்க வேண்டும். கண்டலாம கல்வெட்டில் குறிப்பிடப்பட்ட பருமக பழங்காலத்தில் அப்பிரதேச நிர்வாகத்தையும் நடத்தியவர் என்பது இதிலிருந்து தெளிவாகின்றது. அதனாலேயே பிக்குகளுக்கு குகை ஒன்றை அமைத்துத் தானமளிக்கும் ஆற்றல் அவரிடம் இருந்திருக்க வேண்டும் எனக் கருதலாம்.

புராதன இலங்கையர் சமூகத்தில் பருமக எவ்வாறு தோன்றினார் என்பதை ஆராய்ந்து பார்க்கையில் இந்நாட்டில் அரசியல் அதிகாரம் வளர்ச்சிப் பெற்ற முறை இலகுவாக எவ்வாறு ஏற்பட்டது என்பதைத் தெளிவாக விளங்கிக் கொள்ள முடியும். அவ்வாறு தெரிந்து கொள்வதற்கு புராதன காலத்தில் நிலவிய கிராமிய சமூகத்தையும் அதன் செயற்பாட்டையும் நுணுக்கமாக ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

### இல்லத் தலைவர்கள்

குறைந்தபட்சம் கி.மு. 900 ஆண்டளவில் இந்நாட்டு கிராமியக் குடியிருப்புகள் உலர் வலயத்தின் பல பிரதேசங்களில் பரந்து காணப் பட்டன. இக்கிராமங்கள் பல குடும்பங்களைக் கொண்டிருந்தன. சிலவேளைகளில் ஒன்று தொடக் கம் முப்பது குடும்பங்கள் அதில் வாழ்ந்து வந்தன.

குடும்பம் என்ற கருத்து புராதன காலத்தில் குலம் எனும் சொல்லாலேயே குறிப்பிடப் பட்டது. இக்குடும்பங்கள் அனைத்திலும் தலைவர்கள், இல்லத் தலைவர்கள் கிருகபதி என்ற பெயரால் அழைக்கப்பட்டார்கள். கி.மு. 250 ஆம் ஆண்டை அண்மிய காலக் கல்வெட்டுக்களில் அவர்கள் கஹபதி ஏன்ற சொல்லால் குறிப்பிடப்பட்டிருந்தனர். இது தொடர்பான முக்கிய கல்வெட்டு ஒன்று அநுராதபுரத்தில் பெரிய புளியங்குளம் எனும் இடத்தில் கண்டறியப்பட்டுள்ளது. சுமணவின் குடும்பத்தைச் சேர்ந்த உலோகக் கைத்தொழில் மேற்கொண்டிருந்த இல்லத் தலைவனொருவன் பிக்குமாரின் சேமநலன் கருதி கற்குகை ஒன்றைச் சுத்தம்செய்து தானமளித்ததாக அதில் குறிப்பிடப் பட்டுள்ளது. கிராமத்தின் பொதுப் பணிகளில் ஒவ்வொரு குடும்பத்தையும் பிரதிநிதித் துவப்படுத்துவதற்காக முன்வந்தவர்கள், இக் குடும்பத் தலைவர்களேயாவர். எளிமையாகக் குறிப்பிடுவதென்றால் கிருகபதி என்பவன் குடும்பத் தலைவன் ஆவான்.

### கமிக

புராதன கல்வெட்டுகளிலும் அட்டுவாக் கதைகளிலும் கிராமிக அல்லது கமிக எனும் பெயரால் குறிப்பிடப்படும் பிரிவினர் பற்றிக் கூறப்பட்டுள்ளன. அவர்கள் புராதன கிராமத் தலைவர்களாவர். அக்கிராமங்கள் ஒன்றிலிருந்து ஒன்று வெவ்வேறாக அமைந்திருந்தன கிராமங் களை வேறுபடுத்திக்கொண்டிருந்தது ஒடுங்கிய வனப்பகுதியாகும். இவ்வாறு வேறுபட்டிருந் தமையால் ஒவ்வொரு கிராமத்திலும் வாழ்ந்த மக்கள் இவ்வேறுபாட்டை எங்களது ஊர் (தாம் வாழும் கிராமம்), அயல் ஊர்கள் (அருகில் இருந்த கிராமங்கள்), வெளி ஊர்கள் (தூரத்தில் இருந்த கிராமங்கள்) என்று குறிப்பிட்டனர். இவர்களிடையே திருமணத் தொடர்புகள், பண்டப் பரிமாற்றங்கள், பிரச்சினைகளைத் தீர்த்துக் கொள்ளல் போன்றவற்றின்போது ஒவ்வொரு கிராமத்தையும் பிரதிநிதித்துவப்படுத்திய நபர் ''கிராமிக'' எனும் பெயரால் குறிப்பிடப்பட்ட கிராமத் தலைவர் ஆவர்.

கிராமத்தைப் பிரதிநிதித்துவப்படுத்துவதற்கு தலைவன் ஒருவன் இல்லத் தலைவர்களில் இருந்தே தெரிவுசெய்யப்பட்டான். அப்படித் தெரிவுசெய்யும்போது அவர்களுடைய சொத்துகள் கவனத்தில் கொள்ளப்பட்டிருக்கலாம். புராதன கிராமம் ஒன்றில் வாழும் ஏழைக் குடியானவன் அடுத்த போகத்தில் தருவதாகக் கூறிய வாக்குறுதியின் பேரில் கமிகவிடம் நெல் மூடை ஒன்றைக் கடனாகப் பெற்றுக் கொண்ட செய்தி, ஜாதக அட்டகதாவில் குறிப்பிடப்பட்டுள்ளது. கமிக என்பவர், ஏனையவர்களை விட அடுத்தவர் களுக்கும் உதவக்கூடிய அளவுக்கு செல்வந்தராக விளங்கினார் என்பதை இதிலிருந்து விளங்கிக் கொள்ள முடிகின்றது.

ஒரு குழுவினரைச் சரியாக வழி நடத்துவதற்கு அக்குழுவினரின் நம்பிக்கையைப் பெற்ற நபர் ஒருவரே அதற்குத் தலைமைதாங்க வேண்டும். அக்கிராமத்தின் இல்லத் தலை வர்கள் எல்லோரும் ஒன்றுகூடி கிராமம் சார்ந்த முடிவுகளை மேற்கொள்வதற்குப் பதிலாக குடும்பத் தலைவர்களின் விருப்புடன் கிராமத்தில் வாழ்ந்த செல்வமும் பலமும் படைத்த ஒருவரைத் தங்கள் கிராமத் தலைவராக நியமித்துக் கொண்டுள் ளார்கள்.

கிராமத்து இல்லத் தலைவர்களில் இருந்து தெரிவு செய்யப்படுபவரே ''கமிக'' என்று, புத்த கோச தேரர் , ''சமந்த பாசதிகா'' எனும் நூலில் குறிப்பிட்டுள்ளார். கமிகவினால் நிறை வேற்றப்பட்ட விடயங்களுள் கிராமப் பொது நிகழ்வுகளுக்குத் தலைமை தாங்கல், கிராமக் குளத்தை நிர்வகித்தல், அதிலிருந்து நீரை விநியோகித்தல் என்பன முக்கியத்துவமானவை. கிராமத்தவர்கள் இடையே ஏற்படும் பிரச்சி னைகளைத் தீர்த்தல் உட்பட ஏனைய பணிகள் அனைத்திற்கும் தலைமை தாங்குவதற்கு அவரிடம் காணப்பட்ட செல்வ நிலையால் உரு வான அதிகாரப் பலம் கட்டியெழுப்பப்பட் டிருந்தமையே காரணமாகும் என்பது தெளிவா கின்றது.

அக்கிராமங்களில் வாழ்ந்த கிராமத் தலைவர்கள், ஒருவரோடொருவர் நல்லுறவுடன் செயற் பட்டமை, சமாதான சகவாழ்வு நிலவுவதற்குப் பெருந்துணையாக அமைந்தது. இதுபற்றி அம்பாந் தோட்டை மாவட்டத்தில் சித்துல்பவ்வ என்னும் இடத்தில் அமைந்துள்ள புராதன விகாரைக்குச் சொந்தமான கொரவக்கல எனுமிடத்தில் காணப் பட்ட கற்குகை ஒன்றில் இதனை உறுதிப் படுத்திக்கொள்ளக்கூடிய ஆதாரம் ஒன்று

காணப்படுகின்றது. அக்குகையை சுத்தமாக்கி பிக்குகளுக்கு தானமளிப்பதற்கு நபர்கள் மூவர் முன்வந்துள்ளனர். கமிக சிவ, கமிக சுமண, கமிக சதன எனும் மூவரும் சித்துல்பவ்வையை அண்மிய பிரதேசத் தலைவர்களாக இருந்திருக்கலாம். இவ்வாறான கிராமத் தலைவர்கள் தோன்றியமை இந்நாட்டில் அரசியல் ஆதிக்கம் வளர்ச்சியடை வதற்கான முக்கிய சந்தர்ப்பங்களில் ஒன்றாகும்.

### பருமக

*புராதன காலத்தில் இந்நாட்டில் அரசியல் அதிகாரம் வளர்ச்சி பெறுவதில் பருமக எனும் பதவியால் குறிப்பிடப்படும் பிரபுகள் முக்கியத்துவம் பெற்றமை பற்றி மேலே குறிப்பிடப்பட்டுள்ளது. அவ்வாறானதொரு பிரபு வகுப்பினரின் உரு வாக்கம் மற்றும் அவர்களுக்கு நிர்வாக அதிகாரம் எவ்வாறு கிட்டியது என்பதையும் தேடியறிதல் இவ்விடத்தில் முக்கியமான ஒன்றாகும்.*

இது தொடர்பான விடயங்களில் ஆய்வுகளை மேற்கொண்ட அறிஞர்கள் அனைவரினதும் கருத்தாக இருப்பது பருமக எனப்பட்ட பிரதானிகளின் தோற்றம், பிரதான குளங்களின் பராமரிப்புடன் சம்பந்தப்பட்டதாக இருந் திருக்கலாம் என்பதாகும். அப்படியானால் உண் மையிலேயே அது எவ்வாறு உருவானது?

கி.மு. 900 ஆண்டளவில் இந்நாட்டின் உலர் வலயத்தில் சிறு குளங்களை மையமாகக் கொண்டே குடியிருப்புக்கள் பரவிச் சென்றன. இக்குளங்கள் மழை நீரினால் போசிக்கப்பட்டன. சாதாரணமாக கிராம மொன்றில் வாழ்ந்த 10 - 15 குடும்பங்களுக்கு அவர்களது அன்றாடத் தேவைகளை நிறைவு செய்ய இக்குளத்து நீர் குறுகிய காலத்திற்கே போதுமானதாக இருந்தது. வருடாந்தம் ஏற்படும் உலர் பருவங்களில் இக்குளங்கள் வற்றிப்



*உரு இல 3.2. தம்புள்ளை இப்பன்கட்டுவ கல்லறை மயானம் கி.மு. 700 - 450 காலக்கட்டத்திற்குரியது. இவை அன்றைய சமூகத்தில் வாழ்ந்த பருமக போன்ற பிரபுக்களால் பயன்படுத்தப்பட்டதாகக் கருதப்படுகின்றது.*

போயின. இவ்வாறான சந்தர்ப்பங்களில் இதனை அண்டி வாழ்ந்த மக்கள் பெரும் இடர்களுக்கு முகங்கொடுத்தனர். புராதன குளங்களை அண்டி வாழும் உலர் வலய மக்கள் இன்றும் இதே பிரச்சி னைக்கு முகங்கொடுத்து வருகின்றனர்.

சிறு குளங்களில் மழைக் காலத்தில் சேகரிக்கப் படும் நீர் பற்றாக்குறையாகும் சந்தர்ப்பங்களில் உருவாகும் பிரச்சினைகளுக்கு முகங்கொடுக்க நேர்வது உலர் காலநிலையால் மட்டுமல்ல, காலப் போக்கில் ஏற்படும் சனத்தொகைப் பெருக்கத்தாலும் பயன்பாட்டிற்கு மேலதிக நீர் தேவைப்படும் என்பதனாலுமாகும்.பெருகிச் செல்லும் சனத்தொகைக்கு உணவை உற்பத்தி செய்து கொள்வதற்கும் போதுமான நீரைத் தேக்கி வைக்கும் தேவை ஏற்பட்டது. இவ்வாறான தேவையினால் ஏற்படும் பிரச்சினைகளுக்கு ஒரு முறை இரு முறையல்ல பலமுறை முகங் கொடுத்த எமது புராதன கிராமிய மக்கள், அச் சவாலை எதிர்கொள்வதற்காக பொருத்தப்பாடான முறை ஒன்றைக் கையாளத் தொடங்கினர். தனித் தனியாகக் காணப்படும் குளங்களுக்குப் பதிலாக, அருகருகே காணப்படும் பல குளங்களை கால்வாய்கள் மூலம் ஒன்றிணைத்து குளத் தொகுதி ஒன்றை உருவாக்குவதே அதுவாகும். அதற்கு இரு நோக்கங்கள் காணப்பட்டன :

1. மேட்டுப் பாங்கான நிலத்தில் அமைந்துள்ள குளம் மழை நீரால் நிரம்பும்போது வெளி யேறும் மேலதிக நீரைத் தாழ்நிலப் பகுதியில் அமைந்துள்ள குளம் ஒன்றிற்குத் திருப்பி நீரைப் பாதுகாத்தல்.

2. இரு குளங்களுக்கு இடையில் உள்ள கால் வாயில் எந்நேரமும் நீரைப் பாயவிடுவதன் மூலம் அதன் இரு பக்க நிலங்களினதும் ஈரத் தன்மையைப் பாதுகாத்துக் கொள்வதாகும்.

இவ்வாறு ஈரழிப்புமிக்க பிரதேசங்களில் இலகுவாக ஏனைய பயிர்களைப் பயிரிடக்கூடியதாக இருந்தது.



*உரு. 3.3. கமிக எனும் கிராமத் தலைவர்களுக்கிடையே தோன்றிய பிரதானிகள் பருமக எனப்பட்டனர். அவர்கள் வரி அறவிடும் உரிமையைப் பெற்றிருந்தனர். பிற்கால அரசியல் வளர்ச்சியின் ஆரம்ப அடையாளமாக பருமக பதவி விளங்கியுள்ளது.*

புராதன காலத்தில் இவ்வாறு அமைக்கப்பட்ட குளத் தொகுதிகளின் இடிபாடுகளை உலர் வலயத்தில் இன்றும் நாம் காணக்கூடியதாய் உள்ளது. இவ்வாறான ஒரு குளத் தொகுதியைக் குறிப்பிடுவதற்கு "வெவ்பிரபாதனய" என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளார்கள். உலர் வலய மக்கள் அவற்றை "எல்லங்காவ" எனும் பெயரால் குறிப்பிட்டுள்ளனர். குளத்தொகுதி ஒன்று உருவாக்கல் என்பது சிறு குளங்கள் பலவற்றை ஒன்றிணைப்பது மட்டுமல்ல, அதன் பின்னணியில் மிகவும் முக்கியமான விடயம் ஒன்று செயற்பட்டுக் கொண்டிருந்தது.

உலர் வலயத்தில் அருகருகே சுயாதீனமாக இருந்த சிறிய கிராமங்கள்பற்றி இதற்கு முன்னர் கூறியுள்ளோம். இக்கிராமங்கள் ஒவ்வொன்றிற்கும் சொந்தமான சிறிய குளங்கள் அமைக்கப்பட்டிருந்ததாகவும் அதில் கூறப் பட்டது. குளத் தொகுதி உருவாகும்போது, சுயாதீனமான கிராமங்களுக்குச் சொந்தமான குளங்கள் பலவும் நீர் வழிந்தோடும் பிரதேச சம உயரங்களுக்கு அமைவாக ஒன்றிணைப்பதாகும். அங்கு ஒவ்வொரு கிராமத்துத் தலைவர்களுக்கு



*வரைபட.3.1.மழைநீரினால் ஊட்டம்பெற்ற கிராமக் குளங்களின் மூலம் பெற்றுக் கொள்ளும் நன்மைகள் மேலும் அதிகரிக்கும் நோக்குடன் அக்குளங்கள் கால்வாய்கள் மூலம் தொடுக்கப்பட்டிருந்தன. அது குளத்தொகுதி எனப்பட்டது. இலங்கையின் உலர் வலயத்தில் வாழும் மக்கள் எல்லங்காவ எனும் பெயரில் அதனைக் குறிப்பிடுவர். இது அம்பாந் தோட்டை மாவட்டத்தில் அமைந்திருந்த அவ்வாறனதொரு குளத்தொகுதி ஆகும்.*

இடையேயும் கலந்துரையாடல்கள் இடம் பெறும். அப்போது தொடர்புபடுத்தப்பட வேண்டிய சிறு குளங்கள் கிராமங்கள் பலவற்றிற்கும் பொதுவான தீர்மானங்களை மேற்கொள்வதற்குமான தேவை ஏற்படுவது இயற்கையாகும்.

இலங்கையின் புராதன கல்வெட்டுக்களில் காணப்படும் விடயங்களை நுணுக்கமாகப் பரிசீலித்துப் பார்க்கையில் தென்படுவதாவது, இச்சந்தர்ப்பத்தில் அங்கிருந்த கமிகமாருள் பலம் வாய்ந்த ஒருவர் ஒரு குளத் தொகுதியைச் சேர்ந்த அனைத்துக் கிராமங்களையும் பிரதிநிதித்துவப் படுத்தும்வண்ணம் செயற்பட்டுள்ளமை ஆகும். இவர் பருமக எனும் பெயரால் குறிப்பிடப்பட்டுள்ளார். குளத்தொகுதி யொன்றும் அதனுடன் சம்பந்தப்பட்ட பல கிராமப் பிரஜைகளினதும் நலனுக்காகத் தீர் மானங்களை மேற்கொள்வதற்கான அதிகாரம் அளிக்கப்பட்டவராக பருமக இருந்தமையால் அக்கால சமூகத்தில் அவர்கள் பலம்வாய்ந்த பிரமுகர்களாகக் கருதப்பட்டனர்.

உலர் வலயத்தின் பரந்த நிலப்பிரதேசத்தில் இவ்வாறான குளத் தொகுதிகளின் நூற்றுக் கணக்கான இடிபாடுகளை இன்றும் எம்மால் காணக்கூடியதாய் உள்ளது. அவை பயன் படுத்தப்பட்ட காலத்தில் அக்குளத்தொகுதிகள் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு பருமக இருந்திருப்பார் என்பது இதிலிருந்து தெளி வாகின்றது. இவ்வாறான பருமகமார் நூற்றுக் கணக்கானவர்களைப் பற்றி புராதன கல் வெட்டுக்களில் கூறப்பட்டுள்ளன. ஆண்கள் மட்டுமல்ல சில வேளைகளில் பெண்களும் பிரதேச நிர்வாகத்தில் பங்கு பற்றியுள்ளனர். இவ்வாறான பெண்கள் பருமகலு எனும் சொல் லால் குறிப்பிடப்பட்டுள்ளனர். முழுமையாகப் பார்க்கும்போது அவர்கள் யாவரும் உலர் வலயத்தில் குடியேற்றங்கள் பரவியிருந்த பிரதே சங்களில் குறுநில அலகுகளைப் பரிபாலித் தவர்களாவர். இவ்வாறு இலங்கையில் அரசியல் அதிகாரம் பரவலாக்கப்பட்ட முறையில் உருவாக ஆரம்பித்தது. அவ்வாறான முறை ஒன்றை அறிமுகப்படுத்துவதற்கு மிகவும் பொருத்தமான வார்த்தைப் பிரயோகம் அதிகாரப் பன்முகப்படுத்தல் என்பதாகும்.

இவ்வாறாக இந்நாட்டின் பிரதேச நிர்வாகத்தைக் கொண்டு நடத்திய பருமகமாரின் அதிகாரம் விரிவடைந்து சென்றது. சில வேளைகளில்




*பரவலாக்கப்பட்ட அதிகாரத்தை அனுபவித்து வந்த பருமகமாரை, மத்தியமயமாக்கப்பட்ட அதிகாரத்துக்குள் இணைத்துக் கொள் வதன் மூலமாக, ஏக அரச நிர்வாகத்தை ஏற்படுத்துவதில் துட்டகைமுனு மன்னன் வெற்றிக் கண்டான்.*

அவர்கள் அரசர் என்ற சொல்லாலும் தம்மைக் குறிப்பிட்டுக் கொண்டுள்ளனர். மாத்தளை மாவட்டத்தில் எம்புல் அம்பே எனும் இடத்தில் உள்ள புராதன கல்வெட்டு ஒன்றில் போசனி அரசன் என்று அறியப்பட்ட பிராந்திய நிர்வாகி ஒருவர் பற்றிக் கூறப்பட்டுள்ளது. இதன் பொருள் (பிராசின அரசன்) கிழக்குப் பிரதேச அரசன் என்பதாகும். கேகாலையில் யடஹலென எனும் புராதன விஹாரையில் உள்ள கற்குகை ஒன்றில் துகத ரஜ என்று குறிப்பிடப்பட்டுள்ள அதே போன்ற பிரதேச நிர்வாகி பற்றி அறிய முடிகின்றது.

ரஜ (ராஜா) எனும் சொல் மகிழ்விப்பவர் என்று பொருள் தருகின்றது. மக்களுடைய நல்வாழ்வுக்காக அர்ப்பணிப்புடன் செயற்பட்டு, அவர்களைக் குதூகலமடையச் செய்பவர்களைக் குறிக்க இச்சொல் பிரயோகிக்கப்பட்டுள்ளது. பருமக என்போர் அவ்வாறு செயற்பட்டமையால் பிற்காலத்தில் அவர்களைக் குறிப்பதற்கு அது போன்ற சொல் ஒன்றைப் பயன்படுத்தியிருக்கலாம்.

பிற்காலத்தில் இலங்கையை ஆட்சி செய்வதற்கு சிறந்த அரச பரம்பரை ஒன்று தோன்றுவதற்குக் காரணமான பின்னணி இவ்வாறே உருவாகி இருக்க வேண்டும்.

### அரசின் வளர்ச்சி

பன்முகப்படுத்தப்பட்டு இருந்த அதிகாரம், ஒருமுகப்படுத்தப்படுவதே அரசின் வளர்ச்சி யாகும். அரச அதிகாரம் மத்தியமயப்படுத்தல் என்பது நாட்டை ஒன்றுப்படுத்துவது என்று பொருள்படும். இதன் மூலம் பொருள் கொள்ளப்படுவது அதிகாரம் ஒரு நபரின் கட்டளைக்குக் கட்டுப்படுவதாகும். அதிகாரம் மையப்படுத்துவதன் மூலம் அரசு என்ற பொறிமுறை உருவாகின்றது. அதன் ஆட்சியாளர் அரசனாவார். அவருடைய நிர்வாகத்தின் கீழ்க் குறிப்பிட்ட நிலப்பிரதேசம் ஒன்று அமைவுறும்.

வரலாற்று மூலாதாரங்களில் விவரிக்கப்பட்டுள்ளபடி அநுராதபுர இராசதானியை ஆண்ட முதல் மன்னன் பண்டுகபாயன் ஆவான். மகாவம்சத்தில் குறிப்பிட்டுள்ளபடி,

1. பிராந்திய ஆட்சியாளர்கள் பல (மாமன்மார்) ருடன் சண்டையிட்டு, அப்பிரதேசங்களைக் கைப்பற்றி அரசனானான்.
2. தனது ஆட்சியின் மத்திய நிலையமாக அநுராத புரத்தை தெரிவுசெய்து, அதனை நகரமாகக் கட்டியெழுப்பினான்.
3. தனது பத்தாவது ஆட்சி வருடத்தில் கிராமங் களுக்கு எல்லைகள் வகுத்தான்.



*உரு. 3.4. இப்படத்தில் காணப்படுவது புராதன காலத்தில் பயன்படுத்தப்பட்ட களி மண்ணாலான முத்திரைகள் சிலவாகும். கண்டெடுக்கப்பட்ட போது அவற்றில் எக்குறியீடும் காணப்படவில்லை. இவ்வாறான முத்திரைகள் அரச அதிகாரிகளால் பயன்படுத்தப்பட்டவையாகும். இம்மூன்று முத்திரைகளும் திஸ்ஸமகாராமையில் புராதன நகரக் கட்டடம் அமைந்திருந்த இடத்திலிருந்து பெறப்பட்டவையாகும்*

தேவநம்பிய திஸ்ஸ மன்னன் காலத்தில் அரசு மேலும் மத்தியமயப்படுத்துவதற்கான தேவை மேலும் அதிகரித்தது. இன்னொரு விடயமாக, இந்து சமுத்திரத்தில் அக்காலத்தில் வளர்ச்சியுற்று வந்த வர்த்தகத்தை இதற்கு உதாரணமாக குறிப் பிடலாம்.

கிழக்கு, மேற்கு நாடுகளை இணைக்கும் இந்து சமுத்திரத்தின் ஊடாக அமைந்திருந்த வர்த்தகப் பாதையின் மையத்தில் இலங்கை அமைந்திருந்தது. இப்புவி அமைவிடம் மட்டுமல்லாது, சர்வதேச வர்த்தகத்தில் இடம்பெற்ற இரத்தினக் கற்கள், யானைகள், வாசனைத் திரவியங்கள் என்பன அவர்களுடைய உள்ளங்கவர்ந்த வர்த்தகப் பொருள்களாக இருந்தன.

வளர்ச்சி அடைந்து வரும் இச்சர்வதேச வர்த்த கத்தில் தொடர்புபடும்போது சுதந்திர நாடாக செயற்படுவதற்கான தேவையும் எழுந்தது. இதனால் முழு நாடும் ஒரே நிர்வாகத்தில் வந்தாக வேண்டி இருந்தது. அப்போது பிரபல்யமாக விளங்கிய பிரதேசத் தலைவர்களில் சிலர் இதனை உணர்ந்தும் இருந்தனர். புனித வெள்ளரசு மரம் நடப்படும் வைபவத்திற்கு தேவநம்பிய திஸ்ஸ மன்னனால் கதிர்காமம், சந்தனகாமம் எனும் பிரதேசத் தலைவர்கள் அழைக்கப்பட்டதாக மகாவம்சத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. அது மட்டுமன்றி புனித வெள்ளரசு மரக்கிளைகளை நாட்டின் பல்வேறு பிரதேசங்களிலும் நடுவதற்கு அம்மன்னனால் நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பட்டதையும் நாம் அறிவோம். சகல பிரதேசத் தலைவர்களிடையேயும் நல்லுறவை வளர்க்கும் தேவையை தேவனம்பிய திஸ்ஸ மன்னன்



*உரு. 3.5. ருவான்வெலிசாயவுக்கு காணிக்கை வழங்கிய பாதிகாபாய மன்னனின் உருவச்சிலை. இதனை இன்றும் ருவன்வெலிசாயவின் முற்றத்தில் காணக்கூடியதாய் உள்ளது.*

உணர்ந்திருந்ததாகத் தெரிகின்றது. அக்காலத்தில் இந்தியாவை ஆட்சி செய்த கீர்த்தி மிகு பேரரசனான அசோகனால் அனுப்பப்பட்ட முடிசூடுவதற்கான ஐந்து வகை பட்டாபிஷேக (பஞ்ச வஸ்துக்களை) பொருள்களைப் பயன்படுத்தி, தேவனம்பிய திஸ்ஸ மன்னன் மீண்டும் முடிசூடிக் கொண்டமை. அசோக சக்கரவர்த்தியால் பயன்படுத்தப்பட்ட தேவனம்பிய எனும் பட்டத்தை சூடிக்கொண் டமை, மஹிந்த மகாதேரர் பௌத்த சமயத்தை இந்நாட்டில் அறிமுகப்படுத்தியமை போன்ற காரணிகள் இந்து சமுத்திரப் பிராந்தியத்தில் நாடுகளிடையே வளர்ச்சியுற்று வந்த தொடர் புகளின் தன்மையைக் காட்டுகின்றன. பருமக மாரிடையே பன்முகப்படுத்தப்பட்டிருந்த இலங்கையின் அரசியல் பலம் குறிப்பிட்ட ஒரு நபரிடம் குவியும் செயற்பாடு ஆரம்பமாவதை



*உரு. 3.6. திஸ்ஸமகாராமையில் புராதன மாகம நகரம் இருந்த இடத்திலிருந்து கண்டெடுக்கப்பட்ட களி மண்ணாலான முத்தி ரையாகும். உருகுணை ஆட்சியாளர்களால் உபயோகிக்கப்பட்ட குறியீடுகள் பலவும் இம்முத்திரையில் காணப்படுகின்றன.*

வேலு சுமண, புஸ்ஸ தேவ, தேரபுத்தாபய, நந்திமித்ர எனும் தளபதிகள் பருமகமார் எனக் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. இவ்வாறான கல்வெட்டுக்கள் பலவும் சித்துல் பவ்வ என்னும் இடத்தில் உள்ள கற்குகைகளில் காணப்படுகின்றன. துட்டகைமுனு மன்னன் பல்வேறு திறமைகள் உள்ள பருமகமாரின் ஒத்துழைப்பைப் பெற்றுக்கொண்டதன் மூலம் அதுவரை பரவலாக இருந்துவந்த அதிகாரத்தை மையப்படுத்தினார். அதிகாரம் பரவலாக்கப் பட்டிருந்த சந்தர்ப்பத்தில் பருமக பதவிகளில் இருந்த பிராந்திய பிரமுகர்களின் தலைவர்கள், அதிகாரம் மத்தியமயப்படுத்தப்பட்ட பின்னர் அரசின் பல்வேறு பதவிகளை வகிப்பவர்களாக மாறினர். பருமக புஸ்ஸதேவ, தளபதி பருமக வேலு சுமண, பருமக தேரபுத்தாபய என்று குறிப்பிடப்படும் விதம் சமகாலக் கல்வெட்டுக் களில் காணப்படுகின்றன. அதே போன்று பருமக பதவிகளை வகித்த பொருளாளர், அறவீட்டாளர், செயலாளர், பண்டகசாலைப் பொறுப்பாளர் தொடர்பாகவும் கல்வெட்டுக்களில் குறிப்பிடப் பட்டுள்ளன. இலக்கிய மூலாதாரங்களின்படி இலங்கைத் தீவை ஒன்றுபடுத்திய முதல் அரசனாகக் குறிப்பிடப்படுவது துட்டகைமுனு மன்னனை ஆகும்.

புராதன இலங்கையில் அரசியல் அதிகாரத்தை மத்தியமயப்படுத்துவதில் துட்டகைமுனு மன்னன் குறிப்பிடத்தக்க நடவடிக்கைகளை மேற்கொண்டான். பாதிகாபய மன்னனின் காலத்தில் இலங்கையின் தூதுவர்ஒருவர் உரோமாபுரிக்குச்சென்றுகண்ணாடி மணிகளாக என்பவற்றைக் கொண்டு வந்ததாக மூலாதாரங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

அரசியல் அதிகாரம் மையப்படுத்தப்பட்டிருந்தமை மேலும் முன்னேற்றமடைந்து பரிணமிப்பதற்கு வசப மன்னன் காரணமாக இருந்தான். அவ னுடைய ஆட்சியின்போது முழு இலங்கையும் ஒரே அலகாகச் செயற்பட்டது. வசப மன்னனால் அமைக்கப்பட்ட கல்வெட்டுக்கள் இந்நாட்டில் பரந்துபட்ட பிரதேசங்களில் விரவிக் கிடக்கின்றன. அத்தோடு நிர்வாக மாவட்டங்கள் (ஆஸ்தான) பிரிக்கப்பட்டு அந்த ஒவ்வொரு மாவட்டத்தையும் நிர்வகிப்பதற்கு அமைச்சர்களை நியமித்தமையும் இம்மன்னரது காலத்திலேயே இடம்பெற்றது. இவனுடைய காலத்தில் யாழ்ப்பாணப் பிரதே சத்தை அவனால் நியமிக்கப்பட்ட ரிஷிகிரி எனும் அமைச்சர் நிர்வகித்ததாக வல்லிபுரம் பொற்சாச



*உரு இல. 3.7. இப்பன் கட்டுவ கல்லறை ஒன்றிலிருந்து கண்டெடுக்கப்பட்ட இம்மாலை கி.மு. 700 - 450 காலப்பகுதிக்குரியதாகும். இம்மணிமாலையின் சில மணிகள் இறக்குமதி செய்யப்பட்டவையாக இருப்பது கவனிக்கத்தக்கது. வளர்ச்சியடைந்து வந்த பிரபுத்துவ குடும்பங்களின் ஆடம்பர வாழ்க்கையை இது பிரதிபலிக் கின்றது.*

துட்டகைமுனு மன்னனுடைய காலத்தில் அவதானிக்க முடிகின்றது. அவர் அக்காலத்தில் இருந்த பருமகமாரின் ஒத்துழைப்பைப் பெற்றுக் கொண்டார். இதனை விளக்குவதற்குப் போதுமான உதாரணங்கள் அம்மன்னனின் ஆட்சிக் காலத் திற்குரிய கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன.

நாட்டை ஐக்கியப்படுத்துவது தொடர்பான துட்டகைமுனு மன்னனின் செயற்பாடுகளில் பங்கு பற்றிய தளபதிகள், அப்பதவியைப் பெறுவதற்கு முன்னர் பருமகராக இருந்துள்ளனர்.

னத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. அக்காலத்தில் யாழ் குடாநாடு நாகதீப (நகதிவ) என்று அழைக்கப் பட்டது.

இலங்கை சுதந்திரமான நாடொன்றாக உலகின் முன் தோன்றுவதற்கு. அரசியல் அதிகாரம் மையப் படுத்தப்பட்டிருந்தமையே காரணம் ஆகும்.

## 3.2. அரச கோட்பாடு

அரசியல் பலம் மையப்படுத்தப்பட்டபோது உருவான மகா ராஜா மிகவும் சக்தி வாய்ந்த நபராவார். அவர் தமது குடிமக்களின் முன்னர் தோற்றம்தர விரும்பியது சக்தி வாய்ந்த உருவத்திலாகும். நாட்டை பொருளாதார ரீதியில் முன்னேற்றுதல், நாட்டு மக்களுக்குப் பாதுகாப்பை வழங்கல், பிரஜைகளிடையே ஆன்மீக வளர்ச்சி யை ஏற்படுத்தல் என்பன தமது மக்களுக்குத் தாம் ஆற்ற வேண்டிய கடமையென அரசர்கள் கருதினர்.

வெளிநாட்டு எதிரிகளின் இடையூறுகளில் இருந்து காப்பாற்றுதல், குளங்கள், கால்வாய்கள் கட்டிப் பொருளாதார அபிவிருத்தியை ஏற்படுத் துதல், தூபி, விகாரைகள் அமைத்து மக்களின் ஆன்மீகத் தன்மையை வளர்த்தல் என்பன இதற்கு உதாரணங்களாகும். எல்லாளன், நிஸ் ஸங்கமல்லன் ஆகிய அந்நிய மன்னர்களும் கூட மேற்குறிப்பிட்ட விதமாகச் செயற்பட்டு பொது மக்களின் நம்பிக்கையைப் பெற்றுக் கொண்டதற்கு வரலாறு சாட்சி பகர்கின்றது.

மன்னர்களின் செயற்பாடுகளும் அவர்கள் தோற்றம்தர விரும்பிய விதத்தையும் வைத்து அரசு பற்றிய பல்வேறு கொள்கைகள் முன்வைக்கப் பட்டுள்ளன. அதற்கமைய ஆண்டவன், போதி சத்துவர், மலையின் அரசன் (பர்வதராஜா), சக்கரவர்த்தி என்ற எண்ணக்கருக்களாக அவை வளர்ச்சியுற்றன.

ஆட்சி செய்யும்போது அவர்கள் ஆண்டவனாக வோ, போதிசத் துவராகவோ தோற்றமளிப்பதை பொதுவாகக் காண முடிந்தது. தம்புள்ளை விகாரை அமைந்துள்ள பாறைக் கல்வெட்டில் குட்டகண்ண அபய மன்னன் அதில் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டிருப்பது நரேஸ்வர (நரஇசெர) எனும் பெயராலாகும். மனிதர்களின் கடவுள் என்பது அதன் பொருளாகும்.

மகாசேன மன்னன் குளங்கள், கால்வாய்கள் கட்டி பொருளாதாரத்திற்கு ஆற்றிய பணிக்காக ''மின்னேரித் தெய்வம்'' என்று வழிபடும் அளவிற்கு உயர்ந்துள்ளான். இன்றும் இத்தெய் வத்திற்கு அமைக்கப்பட்ட கோவில்களை உலர் வலயத்தில் காணக்கூடியதாய் உள்ளது.

முதலாம் காசியப்ப மன்னன் குபேரக் கடவுளாகத் தன்னைக் கருதிக் கொண்டான். இவனது கல்வெட்டு ஒன்றில் அவனைக் குறிப்பதற்காக அலகபய மகாராஜா எனும் சொல் பயன் படுத்தப்பட்டுள்ளது. இதன் பொருள் இந்திர லோகங்களின் மகாராஜா என்பதாகும். செல்வத் தின் அதிபதியாகக் கருதப்படும் குபேரனுடைய வசிப்பிடம் இதுவாகும். இது மலை ஒன்றைக் குறிக்கின்றது என இலக்கிய மூலாதாரங்களில் கூறப்பட்டுள்ளன. மலையின் அரசன் என்ற பெயருடன் அறிமுகமாவது புராதன கால ஆசியாக் கண்டத்தைச் சேர்ந்த அரசர்கள் கையாண்டுவந்த ஒரு வழக்கமாகும்.

அரசன் போதிசத்துவராகத் தோற்றம் அளிப்பது இன்னொரு விடயமாகும். அரசன் தனது குடிமக்களின் மானசீக ஆறுதலுக்காக நீதி, நேர்மை, ஆன்மீகத் தன்மையுடன்கூடிய ஆட்சி யைக் கொண்டு நடத்துவதற்குப் பொறுப்பான கடமைப்பாட்டுடன் இருப்பதாகக் காண்பிப் பதுடன் வேறுவிதமாக, மக்கள் அரசன் மீது நம்பிக்கையும் மரியாதையும் செலுத்த வேண்டும் என்பதுவும் இதன் மூலம் வெளிப்படுத்தப் படுகின்றது.

இந்நாட்டு மன்னர்களால் பின்பற்றப்பட்ட இன் னொரு எண்ணக்கரு சக்கரவர்த்தி என்பதாகும். முழு உலகிற்கும் அரசன் என்ற பொருள்படும் ஒரு வார்த்தையே இதுவாகும். சமஸ்கிருத மொழியில் வழங்கும் இச்சொல் சிங்களத்தில் ''சக்விதி'' எனக் குறிப்பிடப்படுகின்றது. கி.பி. 9 ஆம், 10 ஆம் நூற்றாண்டுகளில் ஆட்சி புரிந்த அரசர் களில் சிலர் தனது தனித்துவத்தை வெளிக்காட்ட இப்பதத்தைக் கையாண்டுள்ளனர். குறிப்பாக நிஸ்ஸங்க மல்ல மன்னன் சில கல்வெட்டுக்களில் தன்னை இனங்காட்டிக் கொள்வதற்காக காலிங்க சக்கரவர்த்திப் பெருமான் என்ற சொற்றொடரைப் பிரயோகத்தைக் கையாண்டுள்ளார்.

அரசு பற்றி வெவ்வேறு கோட்பாடுகள் காணப் பட்டாலும் அக்கொள்கை ஒவ்வொன்றும் அரச னின் உயர்வைப் பற்றிக் கூறுவதற்காகப் பயன் படுத்தப்பட்டவையாகும். ஆட்சியாளரைச் சுற்றி அவ்வாறான உன்னதமான நிலை உருவாகும்போது ஆள்பவன் முன்மாதிரியானவனாகத் திகழ

வேண்டும் என்பது மக்களின் எதிர்பார்ப்பாகும். இதற்கமைய செயற்படுவதற்கு ஆள்பவன் நிர்ப்பந்திக்கப்படுவது இயற்கையாகும். நேர்மை யான அரச நிர்வாகத்திற்குத் தேவையான எண்ணக்கருக்களுக்கான பின்னணி உருவானது இவ்வாறேயாகும்.

### அரச பாரம்பரியம்

புராதன இலங்கையில் அரசுரிமை கிட்டிய விதத்தைப் பார்க்கையில், அது சகோதரனிடமிருந்து சகோதரனுக்கோ, தந்தையிடமிருந்து மகனுக்கோ கிட்டியதாகத் தெரிகின்றது.

தேவனம்பியதிஸ்ஸ மன்னனின் மரணத்தின் பின் அவரது சகோதரர்கள் அரசர்களாகியுள்ளனர். துட்டகைமுனு மன்னனுக்குப் பின்னர் அரசுரிமை பெற்றவர், அவரது சகோதரனான சத்தாதிஸ்ஸ ஆவார். சகோதரனிடமிருந்து சகோதரனுக்கு அரசுரிமை வருகையில் அரசனின் இளைய சகோதரர்களுள் மூத்தவருக்கு அரசுரிமை கிட்டியுள்ளது. அவ்வாறல்லாத சந்தர்ப்பத்தில் மோதல்கள் உருவாகி இருப்பதை வரலாறு எமக்குக் காட்டுகின்றது.

தந்தையிடமிருந்து மகனுக்கு அரசுரிமை வருவது சாதாரண ஒரு விடயமாகும். காவந்திஸ்ஸ மன்னனுக்குப் பிறகு துட்டகைமுனுவுக்கு அரசுரிமை கிட்டியது, வசப மன்னனின் மரணத்தின் பின் அவரது மகன் வங்க நாசிக்க திஸ்ஸவுக்கு அரசுரிமை கிட்டியது. இவ்வாறு தந்தையிடமிருந்து மகனுக்கு அரசுரிமை கிடைப்பது இலங்கை வரலாறு முழுவதும் காணப்படுவதோடு அரச னுக்கு மூத்த புதல்வன் இல்லையேல் அடுத்த மனைவியின் மூத்த புதல்வனுக்கு அரசுரிமை கிடைத்தது. அவ்வாறு அல்லாதபோது மோதல்கள் ஏற்பட்டமைக்கான ஆதாரம் வரலாற்றில் உள்ளது. காசியப்ப மன்னன் தந்தை தாதுசேன மன்னனிடமிருந்து ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டது நாமறிந்த ஒரு விடயமாகும். அவ்வாறு செயற்பட நேர்ந்தமைக்குக் காரணம் பட்டத்து இராணியின் மகனான முகலன் பட்டத்து இளவரச னாக இருந்தமையாலாகும். காசியப்ப மன்னனின் தாய் தாதுசேன மன்னனின் இரண்டாவது மனைவியாவாள்.

இவற்றிற்கு மாறாக அரசனின் மனைவியின் சகோதரனுக்கு மற்றும் அரசனின் சகோதரியின் புத்திரனுக்கு அரசுரிமை கிட்டிய சந்தர்ப்பங்களும் உள்ளன. மேற்குறிப்பிட்ட விதத்திலான அரசுரிமையாளன் இல்லாத சந்தர்ப்பத்திலேயே இவ்வாறு நேர்ந்துள்ளன.

### அரச கருவி

அரசியல் ரீதியாக அதிகாரம் பன்முகப்படுத்தப் பட்டிருந்த காலத்தில் பருமகமாராக இருந்த பலரும் ஒன்றுபடுத்தப்பட்டு அரசு உருவாக்கப் பட்டதால் அரசன் அனைத்து பருமகமாரினதும் தலைவனாகச் செயற்பட்டான். ஆகையால் அரச னைக் குறிப்பிட மகா பருமக அல்லது மபுறுமுகா என்ற பதவிப் பெயர் பயன்படுத்தப்பட்டது. அதிகாரம் பன்முகப்படுத்தப்படுவதற்கு முன்னர் அதிகாரமிக்க பருமகமார் சிலர் ராஜா என்ற சொல்லைப் பயன்படுத்தியமையை முன்னர் குறிப்பிட்டுள்ளோம். எனினும் அரசியல் பலம் மத்தியமயப்படுத்தப்பட்ட பின்னர் நாட்டின் நிர்வாகியை மகாராஜா என்றே குறிப்பிட்டனர்.

மகாராஜா (மபுறுமுகா)
↓
தலைமை அமைச்சர் - மகா அமதி (மஹமத)
↓
அமைச்சர்கள் (அமெத) + தளபதிகள் (சேனபதி)
↓
பொருளாளர் (படகரிக)
↓
உணவுச்சாலை அதிகாரி (பதகு)
↓
வழக்கங்கள் மரபு முறைகள் தொடர்பான அதிகாரி (கொதுறு கேனா)
↓
நகர பரிபாலகர் (நகரகுத்திக)
↓
நகர கட்டட நிர்மாணி (நகர வடிக)

குதிரைப் பிரிவின் தலைவர் (அச அதெக)

யானைப் பிரிவின் தலைவர் (ஹதி அதெக)

நாட்டியப் பிரிவின் தலைவர் (நட அதெக)

காசு அச்சிடும் பிரிவின் தலைவர் (ரூப அதெக)

வர்த்தக நடவடிக்கைக்கான தலைவர்(பனஅதெக)

அரச ஆவணங்களின் தலைவர் (கன பெடிக)

இவ்விதமாக அதிகாரிகளைக் கொண்ட அரச கருவி மூலம் நிர்வாகத்தைக் கொண்டு நடத்துவது இலகுவானதாக அமைந்தது. இவற்றால் அதிக பலனை அனுபவித்தவர்கள் நாட்டின் பொது மக்கள் ஆவர்.

## 3.3 இந்நாட்டை ஆண்ட முக்கியமான மன்னர்கள்.

இலங்கையின் அரசியல் அதிகார வளர்ச்சி நீண்ட காலமாக நிகழ்ந்துவந்த சமூக, பொருளாதார செயற்பாடுகளின் செல்வாக்கிற்கு உட்பட்டு வந்த விதத்தை இதுவரை கலந்துரையாடப்பட்ட கருத்துக்களில் இருந்து நீங்கள் விளங்கியிருப் பீர்கள். விசேடமாக கி.பி. 1 ஆம் நூற்றாண்டின் பிற்பாதியில் இந்து சமுத்திரத்தில் நிகழ்ந்து கொண்டிருந்த சர்வதேச வர்த்தக செயற்பாடுகளிலிருந்து நன்மைகளைப் பெற்றுக் கொள்வதென்றால், பன்முகப்படுத்தப்பட்ட நிர்வாகத்திற்குப் பதிலாக மத்தியமயப்படுத்தப்பட்ட ஒரே ஆட்சி முறைக்குள் வருவதே பயன்மிக்கதாகும் என்பதை ஆட்சியாளர்கள் புரிந்துகொண்டனர். அதற்குத் தேவையான நடவடிக்கைகளை மேற்கொண்டதனால் அரசியல் அதிகார வளர்ச்சிப் போக்கிற்கு இணையாக ஆட்சியாளர்களால் பின்பற்றப்பட்ட கொள்கைகளையும் பங்களிப்புகளையும் இந்நாட்டு ஆட்சியாளர்கள் ஒரு சிலரைக் கொண்டு இப்பகுதியில் கலந்துரையாடப் போகிறோம்.

### துட்டகைமுனு மன்னன்

வரலாற்று மூலாதாரங்களில் விரிவான முறையில் பிரஸ்தாபிக்கப்படுகின்ற துட்டகைமுனு மன்னன், இந்நாட்டின் அரசியல் அதிகாரத்தை முறையான விதத்தில் உருவாக்குவதில் மிகவும் முக்கியமான பங்களிப்பைச் செய்தவனாவான். அவனது காலத்தில் வேகமாக வளர்ச்சியுற்றுவந்த இந்து சமுத்திர வியாபார நடவடிக்கைகளிலிருந்து பேரளவு இலாபத்தை ஈட்டிவந்த மாந்தை (மாதொட) சர்வதேச துறைமுகத்தை அக்கால அனுராதபுர ஆட்சியாளனான எல்லாளனிடம் இருந்து மீட்டுக்கொள்வதற்கு அவனால் முடியுமாகவிருந்தது. தனது தந்தையான காவந்திஸ்ஸ மன்னனின் வழிகாட்டலின்படியும் செயற்றிட்டத்திற்கு அமைவாகவும் இயங்கிய விதம் இந்நாட்டு அரசியல் வரலாற்றிலே மிக முக்கியமான இடத்தைப் பெறுகின்றது. இந்நாட்டு வரலாற்றில் முதலாவது ஒழுங்கமைக்கப்பட்ட யுத்த செயற்பாட்டிற்குத் தலைமைத்துவத்தை வழங்கியவன் அவனேயாவான். எல்லாள மன்னனுக்கு எதிராகத் தாம் மேற்கொள்ளும் போர், தமது சொந்த சுகநலன்களுக்கு அல்லாமல், பௌத்த சாசனத்தின் நலனுக்காகவே மேற் கொள்ளப்படுவதாகக் கூறியதன் மூலம் ஆட்சியாளன் நாட்டிற்கான பொதுக் கொள்கைகளை முன்வைத்து, அரசியல் செயற்பாட்டை மேற்கொள்கின்ற விதத்தைக் காண்பிக்கின்றது. யுத்தம் முடிவடைந்த பின்னர் தோல்வியுற்ற தனது எதிராளியின் கல்லறைக்கு உரிய முறையில் மரியாதை செலுத்தும்படி மக்களுக்கு ஆணையிட்டான். இதன் மூலம் தனது இராஜதந்திர செயற்பாட்டை வெளிப்படுத்தினான்.

இப்பாடத்தின் இரண்டாம் பகுதியில் விளக்கப்பட்டதற்கு அமைவாக, இதுவரை பன்முகப் படுத்தப்பட்டிருந்த பிராந்திய அதிகாரத்தைக் கொண்டிருந்த பருமகமாரை ஒன்று சேர்த்துக் கொண்டமை துட்டகைமுனு மன்னனால், இந்நாட்டு அரசியல் அதிகார வளர்ச்சிக்கு ஆற்றப்பட்ட பெரும் பணியாகும்.

இறுதியாக மகாராஜாவாக மகுடம் சூட்டப்பட்ட அவனுக்குப் பெரும் அதிகாரப் பலம் கிட்டியது. தான் எந்தளவு அதிகாரம் உள்ளவனாக இருந்த போதிலும் ஆட்சியாளனின் பொறுப்பு பொது மக்களின் நலனோம்பு நடவடிக்கைகளை மேற்கொள்வதாகும் என்பதைப் புரிந்து கொண்டமையை பொதுமக்களுக்கு வெளிப் படுத்திய நல்லெண்ணத்தின் மூலம் தெரிய வருகின்றது. ருவன்வெலிசாய கட்டப்பட்ட வேளையில் அதன் நாற்றிசை வாயில்களிலும் தானமளிக்க ஏற்பாடு செய்தமையும் அதன் நிர்மாண நடவடிக்கைகளில் ஈடுபட்ட அனைவருக்கும் சம்பளம் வழங்குவதற்கு நடவடிக்கை எடுத்தமையும் இதற்கான ஆதாரங்களாகும். துட்டகைமுனு மன்னன் மதிக்கப்பட வேண்டியது அவன் பௌத்த மதத்திற்கு ஆற்றிய தொண்டுகளுக்காக மட்டுமன்றி, பன்முகப்படுத்தப்பட்டிருந்த இலங்கையின் அரசியல் அதிகாரத்தை மிகவும் சக்தி வாய்ந்த ஒன்றாக அமைத்தமையுமாகும். இது அவ்வரசனின் செயற்பாடுகளில் துலாம்பரமாகத் தெரியும் ஒன்றாகும்.

### வசப மன்னன்

இலம்பகர்ணவம்சத்தின்முதல்மன்னனானவசபன், இந்நாட்டு ஆட்சியாளர்களில் குறிப்பிடத்தக்க வரலாற்றைக் கொண்டவர் ஆவார். உள்நாட்டு நிர்வாகத்தை முறையாகக் கட்டியெழுப்புவதற்காக அவனால் மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள் முன்னுதாரணங்களாகும். அவனால் நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் தாபிக்கப்பட்ட கல்வெட்டுக்கள் ஏராளமாகக் காணப்படுகின்றன. இவற்றில் குறிப்பிடப்பட்டுள்ள விடயங்களுக்கு அமைய அவ்வரசன் நாட்டை நிர்வாக அலகுகளாகப் பிரித்து நிர்வகிப்பதற்கு முயற்சி செய்துள்ளான். அத்துடன் அரச வரி அறவீடு முறைப்படுத்தப்பட்டதும் இம்மன்னனின் காலத்திலேயாகும் என்பதும் அவனது கல்வெட்டுக்களில் இருந்து தெரிய வருகின்றது.

முதன் முதலாக இந்நாட்டில் பாரிய குளங்களை அமைப்பதற்கு முன்னோடியாக வசப மன்னன் விளங்கினான் என்று வரலாற்று மூலாதாரங்களிலிருந்து தெரியவருகின்றது. இம்மன்னன் 11 பெரிய குளங்களை நிர் மாணித்ததாக வம்சக் கதைகளில் இருந்து தெரிய வருகின்றது. இவ்வாறான நடவடிக்கைகளுக்கான தூண்டலைப் பெற்றதற்கான காரணம், தென் இந்தியாவில் கிருஸ்ணா நதிப் பிரதேசத்தில் ஏற்பட்ட உணவுப் பற்றாக்குறையினால் இந் நாட்டில் உற்பத்தியான தானியங்களுக்கு அதிக கேள்வி ஏற்பட்டமையாலாகும். அவசரமாகப் புதிய நீர்த்தேக்கங்களை உருவாக்குவதற்காக அரசாங்கத்தின் நிதியைச் செலவிடுவதற்கு மன்னன் எடுத்த தீர்மானம், சர்வதேச பிராந்திய தேவைகளுக்கு முகங்கொடுப்பதற்கு மேற்கொள் ளப்பட்ட சாதனை மிகு தூரநோக்குடனான செயற்பாடாகும்.

இந்நாட்டின் பௌத்த விகாரைகளைப் புனரமைப் பதற்காக வசப மன்னன் செயற்பட்ட விதம் எம்மன்னனது நடவடிக்கைக்கும் இரண்டாம் பட்சமானதல்ல. விகாரைகள் பழுதடைகையில் அவற்றைப் புனரமைப்பதற்கும் பிக்குமாரின் தேவைகளை நிறைவு செய்வதற்கும் அவ்வரச னால் விகாரைகளுக்காக வழங்கப்பட்ட கொடுப் பனவுகள் பற்றிய கல்வெட்டுக்கள் அதிகமாகக் காணப்படுகின்றன.

தேசிய வருமானத்தைப் பெருக்கிக் கொள்வ தற்கான அடிப்படையை உருவாக்கி, பெற்ற வருமானத்தைப் பயன்படுத்தி நாட்டின் நீர்ப் பாசன நடவடிக்கைகளை விரிவாக்குவதற்கும் அதன் மூலம் நாட்டு மக்களின் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்துவதற்கும் வசப மன்னனால் மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள் முன்னுதா ரணங்களாய் உள்ளன.

### முதலாம் விஜயபாகு மன்னன்

இந்நாட்டை ஆண்ட மன்னர்களுள் மேன்மையான ஒருவன் முதலாம் விஜயபாகு ஆவான். தென்னிந்திய சோழ மன்னர்களின் ஆதிக்கம் பரவலடைந்து, இலங்கையும் நீண்ட காலமாக இவ்வாட்சிக்கு உட்பட்டிருந்தது. இவ்வேளையில் நுண்ணறிவுடன் திட்டமிட்ட முறையில் படையெடுப்பை நடத்தி, சோழ ஆட்சிக்கு முற்றுப்புள்ளி வைத்த பெருமை இம் மன்னனையே சாரும்.

சிறு வயத்தில் கீர்த்தி என்ற பெயருடன் உரு குணைக்குச் சென்று அங்கு வளர்ந்து வந்தான். அரச வம்சத்தவர்களான கீர்த்தி குமாரனுக்கும் அவனது பெற்றோர்க்கும் அடைக்கலம் வழங்கியது அங்கு வாழ்ந்த அரச அதிகாரி ஒருவராவார். சித்தாருபிம புத்தனாயக்க என்ற பாதுகாப்பு அதிகாரியே அவராவார். புத்தனாயக்கவால் அரச குடும்பத்திற்கு வழங்கப் பட்ட அடைக்கலத்தின் தன்மைபற்றிய சரியான விவரம், விஜயபாகு மன்னனால் எழுதப்பட்ட பனாகடுவ செப்பேட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.

பராக்கிரமம்மிக்க சோழர்களுக்கு எதிராக செயற்படுவதற்கு விஜயபாகு மன்னனால் மேற்கொள்ளப்பட்ட அனைத்து நடவடிக்கை ளும் முழு நாட்டினரதும் பாதுகாப்பைக் கருதியே மேற்கொள்ளப்பட்ட சாதனைமிகு விடயங்க ளாகும். நாட்டின் சுதந்திரத்திற்கும் இறைமைக்கும் பாடுபட வேண்டியது நாட்டு மக்களுக்காக ஆட்சியாளரால் ஆற்றப்பட வேண்டிய முக்கிய பொறுப்பாகும்.

யுத்த நடவடிக்கை மூலம் சோழர்களைத் தோல்வியடையச் செய்து, நாட்டை மீண்டும் ஐக்கியப்படுத்திய மன்னன் பின்னர் நாட்டை அபிவிருத்தி அடையச் செய்வதற்கு முயன்றான். சோழர் காலத்தில் கவனியாது விடப்பட்டிருந்த விகாரைகளைப் புனரமைப்பதில் அவன்

அவசரமாக ஈடுபட்டான். நாட்டின் பொருளாதாரத்தைப் பலப்படுத்துவதற்கு மன்னன் முக்கியமான நடவடிக்கைகளை மேற்கொண்டான். அநுராதபுரத்திற்கு பதிலாக பொலன்னறுவையையே தனது தலைநகராகக் கொண்டான். அவ்வாறான நடவடிக்கை ஒன்றை மேற்கொள்வதற்காக அவன் தூண்டப்பட்ட தற்கான முக்கிய காரணம், அந்நேரத்தில் இந்து சமுத்திரத்தில் மேற்கை மையமாகக் கொண்டு செயற்பட்ட சர்வதேச வியாபாரம், கிழக்கிற்கு நகர்ந்ததாலாகும். அம்மாற்றத்தினூடாக இலங் கைக்கு முக்கியத்துவம் பெறுவது இந்து சமுத்திரத்தின் கிழக்குப் பிராந்தியத்துடன் இலகுவாகத் தொடர்புகொள்ளக்கூடியதாக நிர்வாகத்தைக் கட்டமைத்துக் கொள்வதாகும். விஜயபாகுவிற்கு முன்னர் வாழ்ந்த அரசர்கள் பலரும் இத்தொடர்பு சம்பந்தமாகக் கவனம் செலுத்தியிருந்தாலும் அதனை நடைமுறைச் சாத் தியமாக்கி செயற்படுத்தியவன் இவனேயாவான். பொலன்னறுவையை தலைநகராகத் தெரிவு செய்வதில் செல்வாக்குச் செலுத்திய தலையாய காரணியாக கோகண்ண என்ற இன்றைய திருகோணமலைத் துறைமுகம் இந்து சமுத்திரத் தின் கிழக்குப் பகுதியில் இருப்பதால், அத் துறைமுகத்தின் வர்த்தக நடவடிக்கைகளை நிர்வகிப்பதற்கு மிகவும் வசதியான இடத்தில் பொலன்னறுவை அமைந்திருந்தமையை ஆட்சி யாளர் விளங்கிக் கொண்டிருந்தமையாலாகும்.

முதலாம் விஜயபாகு மன்னன் செயற்பட்ட விதம் அதற்குப் பின்னைய காலத்தில் பெருஞ் செல்வாக்கைச் செலுத்தியது. பிற்காலத்தில் ஐரோப்பியர்கள் இந்நாட்டின் மீது செல்வாக் கைச் செலுத்தும் வரை பாதுகாப்பாக இருந்த இலங்கையின் இறைமை அம்மன்னரின் மதியூக மான சிறந்த கொள்கைகளின் பிரதிபலனாகும்.

**முக்கியமான விடயங்கள்**

1. ஆரம்ப காலத்தில் இலங்கையின் அரசியல் அதிகாரம் பன்முகப்படுத்தப்பட்டிருந்தது. பிராந்தியங்களில் பலமுற்றிருந்த தலை வர்களால் ஆட்சியதிகாரம் மேற்கொள்ளப் பட்டது.

2. கிராமிய மட்ட நிர்வாக நடவடிக்கைகளை கமிக எனும் கிராமத் தலைவர்கள் மேற் கொண்டு வந்தனர். கிராமங்களில் சில வீடுகளுக்குத் தலைமை தாங்கியவர் இல்லத் தலைவர் கிருகபதி எனப்பட்டார். இந்த இல்லத் தலைவர்களின் பிரதிநிதியே கமிக எனப்பட்டார். கிராமங்கள் பல வற்றை உள்ளடக்கிய பரந்த பிரதேசத்தை நிர்வகித்தவர் பருமக ஆவார்.

3. குடியிருப்புக்கள் அதிகரித்துச் செல்வதும் அதற்குச் சமமாகப் பல்வேறுபட்ட தேவைகள் எழுவதும் அதனூடாக வாழ்க்கை போராட்டத் தன்மை அடைவதும் தொடர்பான காரண காரியங்களால் சமூகத்தில் எழும் பிரச்சி னைகள், மோதல்கள் என்பனவற்றைக் கட்டுப்படுத்துவதற்கான அதிகாரத்தை மேற்கொள்வதற்கு அரசியல் தாபனம் தேவைப்படுகின்றது. இலங்கையின் பண் டைய சமூகத்தில் அரசியல் அதிகாரம் வளர்ச்சியுற்றது இத்தேவைகளின் பின்ன ணியிலாகும்.

4. பன்முகப்படுத்தப்பட்டிருந்த அதிகாரம் மத்தியமயப்படுத்தப்பட ஆரம்பித்தது துட்டகைமுனு மன்னனாலாகும். அரசியல் நோக்குடன் துட்டகைமுனு மன்னனால் வரலாற்றில் முதன் முறையாக மேற் கொள்ளப்பட்ட இந்நடவடிக்கை பூரணத் துவம் அடைந்தது இலம்பகர்ண வம்சத்து வசப மன்னனின் ஆட்சியுடனாகும்.

5. அரசியல் அதிகார மையப்படுத்தல் என்பது, நாட்டின் நிர்வாகம் ஒருவரின் ஆட்சிக்கு உட்படுவதாகும். அங்கு நாட்டு நிர்வாகத்தை நடத்திச் செல்வதற்கு நிரந்தரமான நிர்வாகிகள் குழு ஒன்று உருவாகும். அரசர் உட்பட அக்குழுவின ரும் அவர்களால் பிறப்பிக்கப்படும் சட்ட திட்டங்களும் அவற்றைச் செயற்படுத்தும் அமைப்புகளும் அரசு எனப்படும்.

6. நிருவாகத்தை நடத்திச் செல்வது தொடர் பாக, அரசர்கள் பல்வேறு கொள்கை கோட்பாடுகளைக் கொண்டிருந்தனர். கடவுள் தன்மையை வெளிப்படுத்திக் கொள்வதற்கு அவர்கள் முயற்சித்துள்ளனர்.

### செயற்பாடு 01

பின்வரும் பதவிப் பெயர்களால் குறிப்பிடப் பட்டுள்ள நபர்களைப் பற்றி விளக்குக.

1. இல்லத் தலைவன்
2. கமிக
3. பருமக
4. அரசன்

### செயற்பாடு 02

அநுராதபுரம், பொலன்னறுவைக் காலங்க ளில் ஆட்சி செய்த முக்கியமான மன்னர்கள் பற்றி சிறுகுறிப்பு எழுதுக.

**பஞ்ச வஸ்துக்கள் :**

*இவற்றைப் பிரயோகிப்பதால் சௌபாக்கியம் ஏற்படும் எனக் கருதப்படும் ஐந்து வகைப் பொருள்களை இது குறிக்கும். இதில் ஆல வட்டம், சாமரை, பாதணிகள், மங்கள வாள், நெற்றிப் பட்டம் என்பன உள்ளடங்கும். இப்பஞ்ச வஸ்துக்கள் பயன்படுத்தப்பட்டது மன் னனின் முடிசூடு விழாவின் போதாகும். அசோக மன்னனால் இந்தியாவிலிருந்து அனுப்பி வைக்கப்பட்ட பஞ்ச வஸ்துக்களைப் பயன்படுத்தி தேவனம்பிய திஸ்ஸ மன்னன், இரண்டாவது முறையாக முடிசூடிக் கொண்டதாக மகாவம்சத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.*

**தேவனம்பிய எனும் பட்டம் :**

*தெய்வத்திற்குப் பிரியமானவன் (தேவானம்பிரிய) என்ற பட்டத்தைப் பயன்படுத்தியவர் இந்தியப் பேரரசனான அசோக மன்னராவார். அம்மன்னரின் காலத்தவரான இந்நாட்டை ஆண்ட திஸ்ஸ மன்னனும் அப்பட்டத்தைக் கையாண்டு, தேவானம்பிய திஸ்ஸ என்று தன்னைக் குறிப்பிட்டுக் கொண்டார்.*

**இந்திரலோகம் :**
**(அளகாபுரி)**

*செல்வத்திற்கு அதிபதியான குபேரனின் வாழ்விடமே இது என இதன்படி ஆண்டவன் வாழும் இடமான வடமுனைத் தீவிலுள்ள பூரணத்துவமான நகரங்களில் இதுவும் ஒன்றாகும் எனவும் இலக்கியங்களில் குறிப் பிடப்பட்டுள்ளன.*

# 4 பண்டைய சமூகம்

## அறிமுகம்

எச்சமூகத்திலும் எக்காலத்திலும் வாழும் பெருந் தொகையானோர் சாதாரண பொது மக்களே ஆவர். ஆள்பவர்கள், உத்தியோகத்தர்கள், சமயத் தலைவர்கள் மற்றும் ஏனைய பிரமுகர்கள் என் போர் இவர்களுள் சிறு தொகையினரே ஆவர். வரலாறு என்பது இவர்கள் அனைவரையும் முன்னிருத்தும் செயற்பாடாகும். உண்மை எவ்வாறிருந்த போதிலும் அதிகமான வரலாற்று மூலாதாரங்களில் பெருமளவிற்கு முன்னிலைப் படுத்தப்பட்டிருப்பது இரண்டாவதாகக் கூறப் பட்ட சிறு தொகையினரின் விவரங்களாகும். எனினும் அவர்களைப் பற்றி நாங்கள் தெரிந்து வைத்துள்ளதுபோல் சமூகத்தில் பெரும்பான் மையாக உள்ள சாதாரண பொது மக்களைப் பற்றிய புரிந்துணர்வு எம்மிடம் குறைவாகும். எமது நாட்டின் வரலாற்றை நன்கு தெரிந்து கொள்ள வேண்டுமென்றால் பண்டைய காலத்தில் வாழ்ந்த சாதாரண பொது மக்களின் வாழ்க்கை பற்றிய விடயங்களை அறிந்து கொள்வது அவசியமாகும். இப்பாடத்தில் இவை அனைத்தையும் பற்றிய மேலும் பல கருத்துக்களையும் விடயங்களையும் தெரிந்து கொள்ளப் போகின்றீர்கள்.

## 4.1. நிர்வாக அமைப்பு

புராதன காலத்தில் எமது நாட்டை ஆட்சி செய்தவர்கள் மன்னர்களாவர் என்று வரலாற்று மூலாதாரங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. இவ் வாறு ஆட்சி செய்யும்போது பின்பற்றப்பட்ட அரசியல் கொள்கை யாது என்பதைக் கூறும் மிக முக்கியமான தகவல்கள் கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன.

எந்தவொரு நாட்டிலும் நிர்வாகத்தைக் கொண்டு நடத்தும் மூன்று தாபனங்கள் காணப்படுகின்றன. அவை சட்டம், நிர்வாகம், நீதி என்பனவாகும். அரசாங்கம் என்பதனால் கருதப்படுவது இம்மூன்று தாபனங்களுமாகும். நாட்டுக்குத் தேவையான சட்டங்கள் வகுப்பதை இன்று பாராளுமன்றம் புரிவதைப்போல, அன்று அரச சபை செய்தது. இச்சட்டத்தை நடைமுறைப்படுத்துவது நிர்வாகத் துறையாகும். இதில் சம்பந்தப்படுவது அரச அதிகாரிகளாவர். சட்டத்தை மீறுவோரைத் தடுத்து, சமூகத்திற்கு ஏற்படும் தீங்குகளைத் தவிர்த்து நாட்டு மக்களுக்கு நியாயங்களைப் பெற்றுத் தருவது நீதித்துறையாகும்.

புராதன காலத்தில் எமது நாட்டில் நிர்வாக, நீதித்துறைகள் காணப்பட்டன. சட்டத்துறையாகச் செயற்பட்டதும் நிர்வாகத்துறையாகும். சட்டத் துறை தாபனமாக தனியான சுதந்திர அமைப் பொன்று காணப்படாமைக்கு அந்நேரத்தில் எமது நாட்டில் முடியாட்சி முறை நிலவியமையே காரணமாகும். சட்ட, நிர்வாகத் துறைகளைக் குறிப் பதற்கு கி.பி. 9 ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட கல்வெட்டுக்களில் பிரயோகிக்கப்பட்டிருப்பது ''எக்தென் சமிய'' எனும் சொற்பிரயோகம் ஆகும். அநுராதபுர மாவட்டத்தைச் சேர்ந்த புத்தன்னே ஹெல எனும் இடத்தில் காணப்படும் கல்வெட்டு ஒன்றில் வத்ஹிமி வஹன்சே வதால "எக்தென் சமியென்" எனும் வாசகம் காணப்படுகின்றது. எக்தென் சமிய எனும் சொல் உருவாகி இருப்பது ''ஏக ஆஸ்தான சாம்ய'' எனும் சொற்களால் ஆகும். ஏக ஆஸ்தான எனப்படுவது அரச சபை ஆகும். சாம்ய என்பது அனுமதி என்ற பொருள் தரும். எனவே அரச சபையால் அனுமதிக்கப்பட்டது எனப் பொருள் தரும். மேற்குறிப்பிட்ட கல்வெட்டானது காணி ஒன்று அன்பளிப்புச் செய்யப்பட்டதுடன் தொடர்புபட்டதாகும். இவ்வன்பளிப்பு அரச சபையின் அனுமதியுடன் அரசனின் ஆணைக்கு ஏற்ப மேற்கொள்ளப்பட்டதாகக் கூறப்பட்டுள் ளது. ''வத்ஹிமியன் வதால'' என்பது அரசனின் ஆணையைக் குறிப்பதாகும். வத்ஹிமி என்பது அரசனைக் குறிப்பதாகும்.

கி. பி. 9 ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுக்களில் கூறப்பட்டுள்ளபடி அரசாங்கக் காணி ஒன்றை பௌத்த விகாரைக்கு அன்பளிப்புச் செய்வதற்கு வருகை தந்த அதிகாரிகளில் சிலர் சபாவ எனும் இடத்தைப் பிரதிநிதித்துவப்படுத்தினர்.



அநுராதபுர மாவட்டத்தைச் சேர்ந்த குருமஹத் தமன எனும் பிரதேசத்தில் கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளபடி கெலே கம எனும் இடத்தை மஹிந்த ராம எனும் பிக்குணி களின் ஆராமைக்கு அன்பளிப்புச் செய்ய வந்த மெனின்கமுவே உதய, நிக வெல்லே சேன என்ற அதிகாரிகள் இருவர் சபாவையைப் பிரதிநிதித் துவப்படுத்த வந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கு சபாவ எனக்குறிப்பிடப்படுவது அக்கால நீதிமன்றத்தை ஆகும். அரசுக்குச் சொந்தமான நிலத்தை இன்னொருவருக்கு உரித்தாக்குவது சட்ட ரீதியான செயற்பாடாகும். ஆகையால் இங்கு நீதிமன்றத்தைப் பிரதிநிதித்துவப்படுத்தும் உத்தி யோகத்தர்களின் வருகை கட்டாயமானதாகும். அச்சந்தர்ப்பத்தில் அவ்வதிகாரிகளின் பொறுப்பு காணியின் எல்லை, அதனை அனுபவிப்பது தொடர்பான நிபந்தனைகளைப் பதிவதாகும்.

சபாவ எனும் சொல் இடம்பெறாத இடங்களில் குறிப்பிடப்பட்டிருப்பது ''மஹலே'' எனும் சொல்லாலாகும். அது ''மஹலேகம்'' (பதிவாளர் நாயகம்) எனும் பதவியைக் குறிக்கும். அரச செயலாளர்களின் பொறுப்பு சகல அரச கடமை களையும் பதிவதும் அவற்றைப் பாதுகாத்து வைப்பதற்கான நடவடிக்கைகளை மேற்கொள் வதுமாகும். இவ்வாறான பதிவாளர் நாயகம் பற்றி மெதிரிகிரியவில் காணப்பட்ட கல்வெட்டு ஒன்றில் குறிப்பிடப்பட்டுள்ளது. மெதிகிரியவில் அமைந்திருந்த எத்வெஹர எனப்பட்ட பதனாகரவு இரண்டாம் சேன மன்னனின் ஆணைப்படி காணியை வழங்கி அது தொடர்பான சட்ட நடவடிக்கையை மேற்கொள்வதற்காக காசியப்ப எனும் பதிவாளர் நாயகம் (மஹலே கஸ்பா) அங்கு வந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

*உரு 4.1. கி.பி. 9 ஆம் நூற்றாண்டில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு ஒன்றில் காணப்படும் குறியீடுகளாகும். விசிறி அடையாளத்தின் மூலம் அரசின் குறியீடான செங்கோலும் கொடி போன்ற அடையாளத்தின் மூலம் அன்னமும் காட்டப்பட்டுள்ளன. அன்னக் குறியீடு வழங்கப்பட்ட கொடுப்பனவின் தூய்மையையும் மேலேயுள்ள சந்திரப்பிறை வழங்கப் பட்ட கொடுப்பனவுக்குரிய, சூரிய, சந்திரன் உள்ள வரையிலான நிலைத்த தன்மையைக் குறிக்கின்றது. நாயும் காகமும் குறியீடு, இக்கொடுப்பனவுக்கு இடைஞ்சல் புரிவோர் அடுத்த பிறவியில் எடுக்கும் பிறப்புகளை மறைமுகமாகக் காட்டுகின்றது.*

அநுராதபுரம் தலைநகராக விளங்கிய காலத்தில் நாட்டின் நிர்வாக மத்திய நிலையமாகவும் அது விளங்கியது. அப்போது மன்னன்தலைநகரிலிருந்து ஆட்சி செய்தான். இக்காலத்தைப் போன்று அன்று தொடர்பு சாதனங்களோ போக்குவரத்து வசதிகளோ இல்லாத காரணத்தினால் அநுராதபுரத்தில் இருந்து தூரப் பிரதேசங்களில் நிர்வாக நடவடிக்கைகளை மேற்கொள்வது சிரமமான காரியமாக இருந்து வந்தது. இதனால் உள்ளூராட்சி தொடர்பான தனியானதொரு நிர்வாக அமைப்பு இருந்ததற்கான ஆதாரங்கள் வரலாற்று மூலாதாரங்களில் இருந்து கிடைக்கப் பெற்றுள்ளன. வசப மன்னனுடைய ஆட்சிக் காலத்தில் எழுதப்பட்ட வல்லிபுரம் பொற்சாசனம் இது தொடர்பான ஆதாரமாகும். அதில் கூறப்பட்டுள்ள விடயமாவது நாகதீப (யாழ்ப்பாண)த்தை நிர்வகித்த ரிஷிகிரி எனும் அமைச்சர் அங்கு பியங்குக திஸ்ஸ எனும் விகாரையைக் கட்டியது பற்றியதாகும். தனிப்பட்ட உள்ளூராட்சிப் பிரதேசங்களை நிர்வகிப்பதற்காக மத்திய அரசு நிர்வாகிகளை நியமித்திருந்தமை இதன் மூலம் தெளிவாகின்றது.

இவற்றிற்குப் புறம்பாக அதனைவிடக் கீழ் மட்டத்து நிர்வாக நடவடிக்கைகளுக்காகச் சுயேச்சையான சபைகள் அவ்வப் பிரதேசங்களில் காணப்பட்டன. கி.பி. 9 ஆம் நூற்றாண்டில் காணப்பட்ட கல்வெட்டுக்களில் பிரதேச மட்டத்தில் செயல்பட்ட சபைகள் ''தசகம் எத்தன்'' எனக் குறிப்பிடப்பட்டுள்ளன. பத்துக் கிராமங்களைப் பிரதிநிதித்துவப்படுத்தும் வண்ணம் அதன் தலைவர்களைக் கொண்ட அச்சபை சிறிதளவு நிர்வாக விடயங்களில் சம்பந்தப்பட்டுள்ளன. மாத்தளை மாவட்டத்தில் புராதன பௌத்த விகாரையான களுதிய பொக்குனையில் காணப்பட்ட கல்வெட்டு ஒன்றில் அவ்விகாரைக்குத் தானம் வழங்குகையில் ஏதாவது பிரச்சினை ஏற்பட்டால் பத்துக் கிராமத் தலைவர்களும் ஒன்றுகூடி அதனைத் தீர்த்து வைக்க வேண்டும் எனக் கூறப்பட்டுள்ளது.

அநுராதபுரம் இந்நாட்டின் தலைநகராகத் திகழ்ந்த காலத்தில் இருந்தே அரசுரிமை தந்தை வழிமுறையாக வந்தது. பட்டத்து இராணியின் பிள்ளைகளுக்கு அரசுரிமை கோரும் தகுதியிருந்தது. தந்தையின் பின்னர் பிள்ளைக்கு அரசு உரிமையாக வேண்டும் என்பது ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தாலும் அவ்வச் சந்தர்ப்பத்தில் வாழ்ந்த மூத்தவருக்கு அரசுரிமை வழங்கப்பட்டது. தேவனம்பிய திஸ்ஸ மன்னனுக்குப் பின்னர் அரசுரிமை பெற்றது உத்திய, மஹாசிவ, சூரதிஸ்ஸ, அசேல என்ற அவரது சகோதரர்கள் நால்வராவர்.

நிர்வாகத்தில் நாட்டு மக்களுடைய நலன்களுக்காக நிர்வாகிகள் செயற்பட்டனர். சமய நிலையங்களுக்குக் கொடுப்பனவுகளை மேற்கொள்வது மட்டுமன்றி சாதாரண மக்களின் நலன்களிலும் கரிசனை செலுத்தினர். விசேடமாக, பொதுமக்களுக்குத் தேவையான பொதுச் சுகாதார வசதிகளை வழங்குவதிலும் கவனம் செலுத்தினர். வெஜ்ஜசாலா என்ற சொல் புராதன இலக்கியங்களில் கூறப்பட்டிருப்பது வைத்திய சாலையைக் குறிப்பதற்காகும். வெஜ எனும் வைத்தியர்களைப்பற்றி கிறிஸ்துக்கு முற்பட்ட இரண்டாம் நூற்றாண்டுக் கல்வெட்டுக்களில் கூறப்பட்டுள்ளன. புத்ததாஸ (கி.பி. 340 - 368) வைத்தியசாலைகளை நிர்மாணிப்பதில் மிகவும் ஆர்வம்மிக்க மன்னராவார். ஐந்தாம் மஹிந்த மன்னர் (கி.பி. 982 - 1029) நாடெங்கும் காணப்பட்ட வைத்தியசாலைகளுக்குத் தேவைப்பட்ட சகல வசதிகளையும் வழங்கினார். நான்காம் காசியப்ப மன்னரின் காலத்தில் (கி.பி. 914 - 923) அநுராதபுரத்தை அண்டிய பிரதேசங்களில் கடுமையான காய்ச்சல் பரவியது. அப்போது காணப்பட்ட சாதாரண வசதிகளுடன் கூடிய வைத்தியசாலைகளில் காய்ச்சலால் பீடிக்கப்பட்ட நோயாளர்களைப் பராமரிப்பது சிரமம் எனக் கண்ட மன்னர் அதற்கெனத் தனியான வைத்தியசாலை ஒன்றை நிறுவியதாக வரலாற்று மூலாதாரங்கள் குறிப்பிடுகின்றன. ''உபசக்க ரோகநாச'' எனும் வார்த்தையால் இது குறிப்பிடப்பட்டுள்ளது.

கர்ப்பிணித் தாய்மாரின் தேவைக்காகப் பிரசவ விடுதிகளைக் கட்டுவதற்கு முதலாம் உபதிஸ்ஸ மன்னன் (கி.பி.365-406) நடவடிக்கைகளை மேற்கொண்டான். அவ்விடுதிகள் ''பஸவந்தி நாம சால'' எனக் குறிப்பிடப்பட்டுள்ளன. பிரசவத்திற்கான வைத்தியசாலைகள் என்பது இதன் பொருளாகும். கல்வெட்டுக்களில் இக்கட்டடங்கள் ''திம்பிரிகே'' எனக் கூறப்பட்டுள்ளன. மிகவும் முற்பட்ட காலங்களில் இருந்து இந்நாட்டில் தாய்மாருக்கான பிரசவ விடுதிகள் நிர்மாணிக்கும் வழக்கம் இருந்து வந்துள்ளது. பண்டுகாபய மன்னனின் காலத்தில் அநுராதபுரத்தில் ''சொத்திசாலா'' எனப்பட்ட விசேட கட்டடங்கள் காணப்பட்டன. இச்சொல் பிராமணர்களின்

வழிபாட்டிடத்தைக் குறித்தது. அத்துடன் பிரசவ விடுதியினைக் குறிப்பதற்கும் பயன்படுத்தப் பட்டது என்றும் அட்டுவா நூல்களில் விவரிக் கப்பட்டுள்ளன.

எமது நாட்டை ஆண்ட மன்னர்கள் தமது அயல் நாடுகளுடனும் சில வேளைகளில் தூர நாடுகளுடனும் நட்புறவுத் தொடர்புகளை வைத் திருந்தனர். காலத்திற்குக் காலம் இத்தொடர்புகள் இடம்பெற்ற பிரதேசங்கள் மாற்றமடைந்தன. இந்தியா, அரேபியா உட்பட ஏனைய ஆசிய நாடுகளுடன் ஆதி காலத்தில் இருந்தும் ஐரோப்பிய நாடுகள் சிலவற்றுடன் அண்மிய நூற்றாண்டுகளில் இருந்தும் தொடர்புகள் இருந்து வந்தன. இலம்ப கர்ண அரசர்களுள் புகழ்பெற்ற முதலாம் கஜபாகு மன்னன் (கி.பி. 114 - 136) பத்தினி தெய்வக் கோயில் ஒன்றின் திறப்பு விழாவிற்கு தென்னிந்தியாவில் சேர இராச்சியத்திற்கு வந்ததாக அந்நாட்டுக் கல்வெட்டுக்களில் கூறப்பட்டுள்ளது. சில வேளைகளில் இவ்வரசியல் சுற்றுலாவின் நோக்கம் இரு நாடுகளுக்குமிடையே அரசியல் உறவுகளை மேம்படுத்திக்கொள்வதாக இருந் திருக்கலாம்.

பாதிகாபய அரசனால் (கி.மு. 22 - கி.பி. 07) உரோம நாட்டிற்கு தூதரக அதிகாரிகளை அனுப்பியதற்கான குறிப்பு மகாவம்சத்தில் உள்ளது. ருவன்வெலி தாது கோபத்திற்கு பூஜை செய்வதற்குத் தேவையான கண்ணாடி மணிகளைப் பெற்று வருவதற்காகவே இவர்கள் அனுப்பி வைக்கப்பட்டனர்.

கி.பி. 8 ஆம், 9 ஆம் நூற்றாண்டுகளில் இந்நாட்டு ஆட்சியாளர்கள் சீனாவுடன் நெருக்கமான உறவு களை ஏற்படுத்திக் கொண்டனர். இக்காலத்தில் எமது நாட்டுத் தூதுவர்கள் சீனாவுக்குச் சென்று வந்தனர். ஆறாம் அக்கிரபோதி மன்னன் ஆட்சிக் காலத்தில் இத்தொடர்புகள் மிகவும் பலப்பட்டிருந்தன. அக்காலகட்டத்தில் இலங்கை இராஜதந்திரிகள் இருபது முறை சீனாவுக்கு விஜயத்தை மேற்கொண்டிருந்தனர். வியாபாரத் தொடர்புகளை வளர்த்துக் கொள்வது இவர்களின் மூல நோக்கமாக இருந்தாலும் கலாசாரத் தொடர்பு களிலும் செல்வாக்குச் செலுத்தினர்.

இலங்கை தமது அயல்நாடுகளுடன் மேற் கொண்ட உறவுகளில் திருமணத் தொடர்புகள் முக்கியமானவையாகும். இந்தியாவின் பலம் வாய்ந்த நாடுகளான கலிங்கம், பாண்டிய நாடு என்பவற்றுடன் மேற்கொள்ளப்பட்ட திருமணங் கள் தொடர்பாக வம்சக் கதைகள் கூறுகின்றன. முதலாம் விஜயபாகு மன்னன் (கி.பி. 1070 – 1110) கலிங்க இளவரசி திரிலோக சுந்தரியைத் திருமணம் செய்து கொண்டதோடு தனது சகோதரியான மித்தா இளவரசியை பாண்டிய இளவரசனுக்கு மணமுடித்துக் கொடுத்ததன் மூலம் தனது அரசியல் பலத்தை உறுதிப்படுத்தி இருக்கலாம்.

சமயம், மொழி ரீதியில் வேறுபட்டிருந்தாலும் தமது அண்டை நாட்டுப் பிரஜைகளுடன் நம்பிக்கையுடன் செயற்படுவது எமது புராதன ஆட்சியாளர்களின் வெளிநாட்டுக் கொள்கையில் தெளிவாகத் தெரியும் இயல்பாகும். முதலாம் விஜயபாகு மன்னரால், பொலன்னறுவையில் கட்டப்பட்ட தலதா மாளிகையின் பாதுகாப்புக் காக வேளைக்காரப் படையை நியமித்தது இதற்குச் சிறந்ததொரு உதாரணமாகும். இவர்கள் தென் னிந்தியாவில் இருந்து வந்து சம்பளத்திற்காக பணி யாற்றிய படையினராவர்.

கி.பி. 10 ஆம் நூற்றாண்டின் பிற்காலத்தில் எங்களது மன்னர்கள் அரபு நாடுகளுடன் மிக நெருக்கமான உறவுகளை ஏற்படுத்திக் கொள்கையில் அராபிய வணிகர்களின் தலைமையில் அக்கால இந்து சமுத்திரத்தில் இடம்பெற்ற வர்த்தக நடவடிக் கைகளுக்கு இலங்கையின் ஒத்துழைப்பை உறுதி யாகப் பேணிக்கொள்வதே அதன் நோக்கமாக இருந்தது. கி.பி. 9 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அராபிய வரலாற்று ஆசிரியரான அல் - பல சூரியின் குறிப்புகளின்படி அக்கால சிவப்புத் தீவின் (இலங்கையின்) மன்னர், இஸ்லாமிய அர சர்களுடன் பரிசுகளைப் பரிமாறிக் கொண்டதாகத் தெரிகின்றது.

சுருங்கக்கூறின் புராதன காலத்தில் இந்நாட்டில் நிலவிய நிர்வாகத்தின் தலையாய நோக்கங்களாக இருந்தவை, நாட்டு மக்களிடையே சமாதான சகவாழ்வை உருவாக்குதலும் அவர்களுடைய நலன்களைக் கவனித்தலும் தாய்நாட்டின் பாது காப்பும் மக்களுடைய எதிர்கால நல்வாழ்வுக்காக நாட்டின் ஒருமைப்பாட்டைப் பாதுகாத்தலுமாகும். தங்களது அயல் நாடுகளுடன் நல்லுறவுடன் செயற்படுவதற்கும் அவர்கள் தூர நோக்குடன் செயற்பட்டுள்ளமை தெரிய வருகின்றது.




*தேசப்படம் 4.1. பண்டைய வர்த்தக நகரங்களும் துறைமுகங்களும்*

## 4.2. பொருளாதாரம்

நாட்டு மக்களில் பெரும்பான்மையானோர் கிராமங்களிலேயே வாழ்ந்தனர். அக்கிராம வாசிகளின் வாழ்க்கை இன்றைய சமூகத்துடன் ஒப்பிடுகையில் மிகவும் எளிமையானதாக இருந்தது. அனேகமானோரின் வாழ்வாதாரத் தொழிலாக விவசாயமே காணப்பட்டது.

சிலர் சேனைப் பயிர்ச் செய்கைகளிலும் ஈடுபட்ட தோடு பலரும் நெற்செய்கையிலேயே ஈடுபட்டு வந்தனர். மந்தை வளர்ப்பும் வாழ்வாதாரங்களுள் ஒன்றாக இருந்தது. இவற்றுடன் பல்வேறு தொழில்களில் ஈடுபட்டோரும் அவரவருக்கு ஒதுக்கப்பட்ட கிராமங்களில் வாழ்ந்து வந்தனர்.

### 4.2.1. விவசாயம்

இலங்கையின் புராதன சமூகத்தில் வாழ்ந்த பெரும்பாலான கிராமத்தவர்களின் பிரதான வாழ்வாதாரமாக விவசாயமே இருந்துவந்தது. பயிர்ச்செய்கையுடன் மந்தை வளர்ப்பும் மேற்கொள்ளப்பட்டு வந்தது. விவசாயம் இரு வகைகளில் இடம்பெற்றது. இதில் முதலாவது சேனைப்பயிர்ச்செய்கையாகும். இரண்டாவது நெற் பயிர்ச்செய்கையாகும். இதில் பழைமையானது சேனைப் பயிர்ச்செய்கை என்று வரலாற்று மற்றும் தொல்லியல் மூலாதாரங்களிலும் உறுதிப்படுத்தப் பட்டுள்ளது. வரலாற்று மூலாதாரமான ''புத் சரண'' எனும் இலக்கியப் படைப்பில் ''செஹென்'' என்றும் சிங்கள உம்மக்க ஜாதகத்தில் ''சேன'' என்றும் கல்வெட்டுக்களில் ''பிடபிம்'' என்றும் குறிப்பிடப்பட்டிருப்பதும் புராதன கால சேனைகளையேயாகும்.

#### சேனைப் பயிர்ச் செய்கை

சேனைப் பயிர்ச் செய்கை என்பது மேட்டுநிலப் பயிர்ச்செய்கையாகும். தமக்குத் தேவையான அளவு தானியங்களையும் மரக்கறி வகைகளையும் பயிரிட்டுக்கொள்ளக்கூடியஅளவுக்குப்போதுமான நிலப் பரப்பை, பெருங் காடுகளிலிருந்து பெற்று, அவற்றைச் சுத்திகரித்து தீயிட்டுக் கொளுத்தி சேனை ஒன்றை உருவாக்கிக் கொள்வர். முதலில் சுத்திகரிக்கப்பட்ட நிலப்பகுதிக்கு தீயிட முன்னர் சப்தமிட்டு ஒலி எழுப்பி சகல உயிரினங்களையும் இதிலிருந்து அகற்றிவிடுவர்.

புதிதாக தீயிடப்பட்ட காணி ''நவதெளி'' சேனை எனப்படும். சேனைகள் மிகவும் வளமானவை ''நவதெளி சேன'' எனும் பிரயோகம் சத்தர்ம ரத்னாவலியில் காணப்படுகின்றது. இலங்கையில் சில பிரதேசங்களில் ''நவதெளிசேன'' என்பதற்கு வேறு பொருள் கொள்ளப்படுகின்றது. குரக்கன், கொள்ளு, உளுந்து, பயறு, சோளம், கம்பு, வரகு, தினை, ஓமம் எனும் தானிய வகைகள் ஒன்பதும் செழிப்பாக வளரும் சேனைகள் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளன. சில காலம் கைவிடப்பட்டுப் பின்னர் மீளவும் பயிரிடப்படும் சேனைகளை ''கனத்த'' எனும் சொல்லால் அநுராதபுர பிரதேசத்து விவசாயிகள் குறிப்பிடுவர். சேனைச் செய்கையின்போது பின்பற்றப்பட்ட நடைமுறை, ஓரிரு முறை பயிரிடப்பட்ட நிலத்தைக் கைவிட்டு விடுவதாகும். சிறிது காலம் அவ்வாறு கைவிடப்பட்ட நிலத்தில் மீண்டும் காடுகள் வளரும். இதனால் புராதன காலச் சேனைச் செய்கையால் சூழலுக்கு மேலதிக பாதிப்புகள் ஏற்படவில்லை.

சேனைகளில் பயிரிடப்பட்டவைகளுள் உழுந்து, வரகு, பயறு, குரக்கன், சோளம், எள்ளு, கடுகு, சீரகம், தினை, அரிசி போன்ற தானிய வகைகளும் பூசணிக்காய், கத்தரிக்காய், சாம்பல் பூசணி போன்ற மரக்கறி வகைகளும் நெல், கரும்பு, பருத்தி என்பனவும் பயிரிடப்பட்டன. அவையவற்றுக்கென ஒதுக்கப்பட்டிருந்த சேனை களிலே அவை பயிரிடப்பட்டன. அக்காலத்தில் நாட்டிற்குத் தேவையான துணிகளும் கருப் பட்டியும் உற்பத்தி செய்வதற்குப் போதியளவு பருத்தியும் கரும்பும் விளையும் அளவுக்கு அப்பயிர்ச் செய்கைகள் முன்னேற்றம் அடைந்தி ருந்தன. சம்பளம் பெற்று கரும்புத் தொழிலில் ஈடுப்பட்டோர் பற்றி வம்சக் கதைகளில் கூறப்பட்டுள்ளது. நீண்டகாலமாக நாட்டுக்குத் தேவையான கருப்பட்டி இந்நாட்டில் தயாரிக்கப் பட்டது. 16 ஆம் நூற்றாண்டு வரை இந்நாட்டிற்கு சீனி இறக்குமதி செய்யப்படவில்லை என அறிஞர்களால் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

சேனை ஒன்று உருவாக்கப்படுவது தமது இருப் பிடத்தில் இருந்து ஓரளவு தூரமான பிரதே சங்களிலாகும். சேனையில் இருந்து விளைச்சல் பெற்றுக்கொள்ளும்வரை அவர்கள் சேனையில் கட்டப்பட்டுள்ள குடிசை ஒன்றில் தற்காலிகமாகத் தங்கியிருப்பர். சேனையை வன விலங்குகளில் இருந்து பாதுகாத்துக் கொள்வதற்கு அதனைச் சூழக் கட்டப்படும் கம்புகளால் ஆன வேலி ''தண்டு வெட்ட'' என்று குறிப்பிடப்படும். சேனையில் உயர் மரம் ஒன்றில் கட்டப்பட்ட சிறு குடிசை ''பெல'' எனப்படும்.



உரு 4.2. பயிர்ச் செய்கைக்கு முன்னைய நவதெளி சேனை ஒன்றின் தோற்றம்

இரவு நேரத்தில் வரும் மிருகங்களிடம் இருந்து தமது சேனையைப் பாதுகாத்துக் கொள்வதற்காக பொழுது புலரும் வரையில் இதில் தங்கியிருப்பர். சேனைப் பயிர்ச்செய்கைக்காக அரசர்களில் சிலர் வரி அறவீடு செய்துள்ளனர். கெதிஅட, கெடுகனக என்று கல்வெட்டுக்களில் குறிப்பிடப்பட்டிருப்பது இவ்வாறான இருவகை வரிகளையாகும். பொலன் னறுவையை ஆண்ட நிஸ்ஸங்கமல்ல மன்னன் (கி.பி. 1187 - 1196) இவ்விரு வகை வரிகளையும் நீக்கியதாக அவனது கல்வெட்டுக்களில் குறிப்பிடப் பட்டுள்ளன.

புராதன காலத்தில் சனத்தொகை குறைவான படியால் சேனைச் செய்கை மூலம் தமது தேவைகளை அவர்கள் பூர்த்திசெய்யக்கூடியதாக இருந்தது. பெருகிச் செல்லும் சனத் தொகையின் உணவுத் தேவையை நிறைவுசெய்வதற்காகவே வயல்களில் நெல் பயிரிடும் முறை ஆரம்பமானது.

### நெற் செய்கை

கல்வெட்டுக்களில் நெற் செய்கை இடம்பெறும் இடங்கள் வயல் என்றும் ''கெத'' என்றும் இரு சொற்களாலும் குறிப்பிடப்பட்டுள்ளன. சில வேளை சிற்றளவில் நெற் செய்கை பண்ணப்படும் இடங்களை வயல் என்று குறிப்பிட்டிருக்கலாம். ''கெத'' எனும் சொல் சமஸ்கிருத மொழியில் இருந்து பெறப்பட்டது. பல வயல்களைக் கொண்ட பரந்த இடத்தை இது குறித்து நிற்கின்றது.

பெரும்பாலும் நீர்ப்பாசனத்தின் மூலமே நெற்செய்கை மேற்கொள்ளப்பட்டது. பருவ மழையின்போது குளங்களில் சேகரிக்கப்பட்ட நீர் கால்வாய்கள் மூலம் வயல்களுக்கு விநியோ கிக்கப்பட்டது. வருடாந்தம் இரு போகங்கள் பயிர்ச்செய்கை மேற்கொள்ளப்பட்டன. ஒரு முறை நெல் பயிரிடப்படும் காலம் ''போகம்'' எனப்பட்டது. இவ்விரு காலத்தையும் பெரும் போகம், சிறுபோகம் எனக் குறிப்பிடுவர். இவற்றுடன் இடைப் போகம் பற்றியும் கல் வெட்டுக்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. பெரும், சிறு போகங்களுடன் இடைப்போகம் மேற் கொள்ளப்படுவது நீர் கிடைக்கும் தன்மையைப் பொருத்ததாகும்.



*உரு 4.3. சேனை என்பது மிகவும் அழகாகக் காட்சித் தரக்கூடியதாகும். சேனைக்கு வரும் வன விலங்குகளிடமிருந்து அதனைப் பாதுகாப்பதற்காக இரவில் தங்குவதற்கு அமைக்கப்பட்ட குடில், சேனையைச் சுற்றி அமைக்கப்பட்ட கம்புகளிலான வேலி அங்கு பொதுவாகக் காணப்படும் ஒன்றாகும்.*

நெற்செய்கையை வெற்றிகரமாக நடத்துவதற்கு உலர் வலயத்தில் பிரதான தேவையாக இருந்தது போதியளவு நீரைப் பெற்றுக் கொள்வதாகும். மழைநீரைத் தேக்கி வைத்துக் கொள்வதும், ஆறுகளை மறித்து கால்வாய்கள் மூலம் நீரை வயல்களுக்கு அனுப்புவதும் அத்தேவைகளை நிறைவுசெய்து கொள்வதற்கு கையாளப்பட்ட இரு முறைகளாகும். குளங்களைக் கட்டும் வழக்கம் இந்நாட்டில் வளர்ச்சியுற்றதற்கு காரணம் நீரைத் தேக்கி வைத்துக் கொள்ளும் தேவைக்கு பயன்படுத்துவதற்காகும். மகாபராக்கிரமபாகு மன்னனால் (கி.பி. 1153 - 1186) கூறப்பட்ட, ''விண்ணிலிருந்து மண்ணில் பொழியும் ஒரு துளி நீரையேனும் மனிதனுக்கு பயன்படாது கடலில் கலக்கவிட மாட்டேன்.'' என்ற கூற்று நீரைப் பாதுகாத்துக் கொள்வதன் முக்கியத்துவம் அரசனின் பார்வையில் எவ்வாறிருந்தது என்பதை எமக்கு காண்பிக்கின்றது. இயற்கையுடன் ஒன்றிணைந்து செயற்பட்டதன் மூலம் அவர்களுடைய வாழ்க்கைக்குப் பேருபகாரத்தைப் பெற்றுக் கொண்டனர்.

### மந்தை வளர்ப்பு

விவசாய நடவடிக்கைகளுக்கு மேலதிகமாக அக் காலத்தில் மந்தை வளர்ப்பும் இடம்பெற்றது. அவற்றுள் முதலிடம் பெற்றது மாடு வளர்ப்பாகும். மாடு வளர்ப்போருக்கென ஒதுக்கப்பட்ட ''கோபாலகம்'' பற்றிக் கல்வெட்டுக்களிலும் இலக்கியங்களிலும் கூறப்பட்டுள்ளன. மிருகச் செல்வம் அல்லது உணவுத் தேவையில் இவற்றிலிருந்து பெற்றுக் கொள்ளப்படும் பொருள்கள் பேருபகாரமாய் அமைந்தன. தயிர், நெய், வெண்ணெய் என்பன அவற்றுள் முக்கியமானவையாகும். கொழும்பு நூதன சாலையில் உள்ள நான்காம் காசியப்ப மன்னனால் பொறிக்கப்பட்ட கல்வெட்டில் ''கிரிகெரி'' எனும் சொல் காணப்படுகின்றது. இது பால் பெற்றுக் கொள்ள வளர்க்கும் பசுக்களை குறிப்பிடுகின்றது. பெண்ணொருத்தி பசுவிலிருந்து பால் கறப்பதனைக் காண்பிக்கும் சிற்பம் ஒன்று சீகிரியில் அமைந்துள்ள நாகபப்பா எனக் குறிப்பிடப்படும். விகாரையுள் தாதுகாப்பத்தில் வைக்கப்பட்டுள்ள மகாமேருக் கல்லில் செதுக்கப்பட்டுள்ளது.

மாடுகளைத் தவிர கோழிகளும் ஆடுகளும் வீடுகளில் வளர்க்கப்பட்டன. பொலன்னறுவை மெதிகிரியில் உள்ள எத்வெஹர மண்டபத்தில், வைத்தியசாலையில் நோயாளர்களின் தேவைக்காக இயற்கையாக மரணித்த ஆடுகளினதும் கோழிகளினதும் மாமிசம் மட்டும் பயன்படுத்தப்பட வேண்டுமெனக் குறிப்பிடும் விடயம் கி.பி. 9 ஆம் நூற்றாண்டில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு ஒன்றில் காணப் படுகின்றது.

### 4.2.2. கைத்தொழில்

பண்டைய காலத்தில் இருந்தே இலங்கையில் உலோகக் கைத்தொழில் மிகவும் முன்னேற்ற கரமாக விளங்கி வந்ததை முன்னைய பாடங்களில் கற்றுக் கொண்டிருப்பீர்கள். உலோகங்களைப் பயன்படுத்தி கைத்தொழில்களில் ஈடுபடுவோர் பற்றிய தகவல்கள் கல்வெட்டுகளில் காணப் படுகின்றன. இவற்றுள் முக்கியத்துவம் பெறுவது இரும்புத் தொழிலை மேற்கொண்ட கம்மாளர்களாவர். இவர்களைக் குறிக்க கல்வெட்டுகளில் ''கபர'' எனும் பெயர் பிரயோகிக்கப்பட்டுள்ளது. இரும்பைக் கையாளும் கம்மாளர் கிராம மக்களுக்கு மிகவும் வேண்டப்பட்ட நபராவார். அன்றாட விவசாய நடவடிக்கைகளுக்கான மண்வெட்டி, ஏர், அரிவாள் என்பவற்றை அவர்களுக்குச் செய்து கொடுத்தது பட்டறைக் கொல்லர்களேயாவர். பொலன்னறுவை மாவட்டத்தைச் சேர்ந்த முதுகல்ல எனும் இடத்தில் காணப்படும் கல்வெட்டு ஒன்றில் மஜ்ஜிம எனும் கம்மாளரைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

இதற்கு மேலும் செம்பு (தம்பகர), வெள்ளீயம் (டின்) உலோகங்களால் கைத்தொழில்களை மேற்கொண்ட கலைஞர்கள் அக்காலத்தில் இருந்துள்ளனர். அக்காலத்தில் தங்கக் கைத்தொழிலில் ஈடுபட்ட பொற்கொல்லர்கள் புராதன பதிவேடுகளில் துலாதார என்ற சொல்லால் குறிப்பிடப்பட்டுள்ளனர். அம்பாந்தோட்டை மாவட்டத்தைச் சேர்ந்த மண்டகல எனும் இடத்தில் உள்ள ஒரு கல்வெட்டில் துலதர சுமண என்ற பெயர் கொண்ட பொற்கொல்லரைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. அநுராதபுரம், மகாகாமம் எனும் பண்டைய நகரங்களில் மேற்கொள்ளப்பட்ட தொல்பொருள் அகழ்வுகளில் கண்டறியப் பட்டுள்ள இரத்தினக் கற்களினாலும் ஏனைய வகைக் கற்களாலும் செய்யப்பட்ட மாலைகள், மோதிரங்கள் மூலம் இலங்கையில் காணப்பட்ட இரத்தினக் கைத்தொழிலின் தன்மையை அறிய முடிகின்றது. அவ்வாறான கைத்தொழில்களில் ஈடுபட்ட கலைஞர்கள் ''மணிகர'' எனும் சொல்லாலும் குறிப்பிடப்பட்டனர்.

புராதன காலத்தில் எமது சமூகத்தில் காணப்பட்ட இன்னொரு கைத்தொழில் யானை தந்தச் செதுக்கல் ஆகும். கண்டிக் காலத்திற்குரிய வேகிரிய தேவாலயத்திற்கு அருகில் காணப்பட்ட கல்வெட்டு ஒன்றில் தடிக சுமண எனும் யானைத் தந்தச் செதுக்கல் கலைஞர் ஒருவரைப் பற்றிப் கூறப்பட்டுள்ளது. ''தடிக'' என்பது யானைத் தந்தத்தைக் குறிப்பதாகும்.

அக்காலத்தில் வாழ்ந்த சாதாரண மக்களுக்கு தமது அன்றாடத் தேவைகளுக்கு மிகவும் உபயோகமாக இருந்தது மட்பாண்டங்களாகும். தொல்பொருள் அகழ்வுகளின்போது பெருந்தொகையான மட்பாண்ட சிதைவுகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. மட்பாண்டம் வனைதல் அக்காலத்தில் முறையாக ஒழுங்கமைக்கப்பட்ட கைத்தொழிலாக இருந்தது.

வனைதல் கைத்தொழிலில் ஈடுபட்டவர்களைப் பற்றி இற்றைக்கு 2250 ஆண்டுகளுக்கு முன்பு எழுதப்பட்ட கல்வெட்டுக்களில்கூட குறிப்பிடப் பட்டுள்ளன. அக்காலத்தில் அவர்கள் ''கும்பகார'' (குபகர) என்று குறிப்பிடப்பட்டுள்ளனர்.

அம்பாந்தோட்ட மாவட்டத்தில் வெஹெரகெம எனும் இடத்தில் காணப்பட்ட கல்வெட்டில் ''ததவய'' என்னும் சொல்லால் நூல் நூற்பவர்கள் குறிப்பிடப்பட்டுள்ளனர். நூல் நூற்றல் துணி நெசவுக்கான ஒரு செயற்பாடாகும். மிகப் புராதன காலத்தில் இருந்து துணி நெசவு என்பது நாட்டில் இடம்பெற்று வந்தமை பற்றி வரலாற்று மூலாதாரங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

வெஹரகெம கல்வெட்டில் நூல் நூற்போர் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளமை அக்காலத்தில் நிலவிய நெசவுக் கைத்தொழில் பற்றிய திட்டமான ஆதாரமாகும்.

இவ்வாறு தொழில் ரீதியாகப் பல்வேறுபட்ட கைத்தொழில்களில் ஈடுபட்ட நபர்களைப் பற்றிய விடயங்கள் எங்கள் வரலாற்றில் கூறப்படுவதன் மூலம் எமது நாட்டில் நிலவிய புராதன சமூகம்

மிகவும் முறையான விதமாக தாபன ரீதியில் செயல்பட்டு வந்துள்ளது என்பது தெரிகின்றது. எல்லா வகையான தொழிலாளர்களும் அக்கால சமூகத்தில் சிறப்பாக செயற்பட்டதிலிருந்து தமது அறிவாலும் உழைப்பாலும் மிகவும் பெறுமதியான பங்களிப்பை அவர்கள் செய்துள்ளனர்.

### 4.2.3. வர்த்தகம்

புராதன காலத்தில் நகரங்கள் சிலவே காணப் பட்டன. வரலாற்று மூலாதாரங்களில் குறிப் பிடப்படும் அளவுக்கு அநுராதபுரம், மகாகாமம் என்பன அவற்றுள் முக்கியமானவையாகும். அவற்றைக் குறிப்பதற்கு நகர் என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. அவ்வாறான நகர்களில் வசதி படைத்தவர்களே வாழ்ந்து வந்துள்ளனர். அந்நகர்களில் உள்நாட்டவர்கள் போன்றே வெளிநாட்டவரும் வாழ்ந்துள்ளனர். அநுராதபுர நகரத்தின் தெற்கு வாயிலின் அருகில் காலசுமண என்ற பெயரில் வர்த்தக சந்தை ஒன்றிருந்தது.

வர்த்தகம் இந்நாட்டில் புராதன காலத்தில் இருந்தே பிரதான சீவனோபாயமாக இருந்து வந்துள்ளது. வர்த்தக நடவடிக்கைகள் உள்நாட்டுக்குள்ளும் வெளிநாடுகளுடனும் இடம்பெற்றன. சீகிரியா வின் மேற்கில் உள்ள நீர்ப்பூங்காவில் காணப்படும் கல்வெட்டில் ''அபலவபர'' என்ற பெயருடைய நபர் பற்றிப் பிரஸ்தாபிக்கப்படுகின்றது. அது ''ஆம்ல'' வியாபாரம் என்பது பழைய சிங்களத் தில் எழுதப்பட்டுள்ள விதமாகும். அவ்வாறு குறிப்பிடப்பட்டிருப்பது புளி வியாபாரியை ஆகும். அக்கல்வெட்டு 2250 வருடங்களுக்கு முன் செதுக்குவிக்கப்பட்டதாகும். சிறு குழுவினரைத் தவிர ஏனைய வர்த்தகர்கள் கூட்டாக ஒன்றுபட்டு செயல்பட்டனர். அப்படியான சங்கமொன்றைக் குறிப்பிடுவது ''புகய'' எனும் பெயராலாகும். சில இடங்களில் அது ''நியமஸ்தான'' என்ற சொல்லாலும் குறிப்பிடப்பட்டுள்ளது. வர்த்தகத் தில் ஈடுபடும் கூட்டத்தினர் அக்காலத்தில் ''வணிஜ'' எனும் பெயராலோ ''வாபர'' எனும் பெயராலோ குறிப்பிடப்பட்டுள்ளனர். வாபர என்ற சொல் பழைய சிங்கள மொழியில் வியாபாரம் என்பதைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டதாகும்.

இவ்வர்த்தகர்கள் புராதன சமூகத்தில் வாழ்ந்த செல்வந்தர்கள் ஆவர். அவர்கள் பிக்குகளுக்கு வாழ்வதற்குக் கற்குகைகளைத் தானமளித்துள் ளனர். அம்பாந்தோட்டை மாவட்டத்தில் மண்டகல என்னும் இடத்தில் காணப்பட்ட கல்வெட்டு ஒன்றில் சுமண எனும் வணிகரால் அவ்வாறு தானமளிக்கப்பட்ட கற்குகை ஒன்று பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதே மாவட் டத்தில் வெஹெரகெம எனும் இடத்தில் கண்டறியப்பட்டுள்ள கல்வெட்டு ஒன்றில் சுமண எனும் வணிகரால் தானமளிக்கப்பட்ட கற்குகை ஒன்று பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதே மாவட்டத்தில் வெஹெரக்கம எனும் இடத்தில் கண்டறியப்பட்டுள்ள கல்வெட்டு ஒன்றில் ''ததவய புகஹ'' எனும் வார்த்தை காணப்படுகின்றது. இது நூல் நூற்பவரை அல்லது நெசவாளியைக் குறிப்பதாகும். துணி நெய்து வியாபாரம் செய்பவர்களின் சங்கம் ஒன்றின் மூலம் பிக்குகளுக்கு குகை ஒன்று தானம் செய்யப்பட்டது தொடர்பான விடயங்கள் இக்கல்வெட்டில் இடம்பெற்றுள்ளன.

வியாபார நகர்களுக்கும் கிராமங்களுக்கும் அண் மையில் வியாபாரம் செய்வதற்காக சந்தைகள் காணப்பட்டன. மகாகிராமையில் இருந்து அநுராதபுரத்திற்கு வந்த சுர நிமல என்பவர் நறுமணப் பொருள்களை வாங்கியதாக இலக்கிய மூலாதாரங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. நான்காம் உதய (கி.பி. 946 - 954) மன்னனின் ஹோபிடிகம தூண் கல்வெட்டில் கூறப்பட்டுள்ள விடயங்கள் மூலம் புராதன சந்தைகள் முறையாக நிர்வகிக்கப்பட்டமை பற்றி அறிய முடிகின்றது.

இது தொடர்பாகக் கூறக்கூடிய சிறந்த உதா ரணம் சொரபொர வாவி தூண் கல்வெட்டில் விவரிக்கப்பட்டுள்ள ஹோபிடிகம சந்தை யைப் பற்றியாகும். அதன் நிர்வாகம் பற்றி அரசனால் பிறப்பிக்கப்பட்ட சட்டங்கள் இதில் இடம் பெற்றுள்ளன.

சந்தைக்கு வரும் வண்டிகளிலிருந்து அல்லாது, சந்தையைக் கடந்து செல்லும் வண்டி களிலிருந்து வரிவசூலிக்கப்படக்கூடாது என்று சட்ட மூலத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. சூரிய ஒளியிலிருந்து பாதுகாக்கப்பட்ட மண்டபம் ஒன்றின் கீழ் மட்டுமே வெற்றிலை வியாபாரம் மேற்கொள்ளப்பட வேண்டும் என்று சட்ட மூலம் குறிப்பிடப்பட்டிருப்பது, காய்ந்துப் போன வெற்றிலையை மக்களுக்கு விற்கக் கூடாது என்பதற்காகவாகும். அக்காலத்தில் நோன்மதி (போயா) தினங்களில் வர்த்தகம் இடம்பெறவில்லை. நோன்மதி தினங்களில்

வர்த்தகம் புரிந்தோரிடம் இருந்து தண்டப் பணம் வசூலிக்கப்பட்டது. ஹோபிடிகம சந்தையில் நோன்மதி தினத்தில் வர்த்தகத்தில் ஈடுபடுவோர் தண்டமாக மஹியங்கனை விகாரைக்கு விளக் கேற்றுவதற்கு எண்ணெய் வழங்க வேண்டும் எனப் பணிக்கப்பட்டிருந்தது.

கி.பி. 11 ஆம் நூற்றாண்டில் இருந்து 13 ஆம் நூற்றாண்டு வரை இந்நாட்டில் செயற்பட்ட தென்னிந்திய வம்சாவளிகளின் வர்த்தக நிறுவனங் கள் பல பற்றி இலங்கையில் கண்டெடுக்கப்பட்ட அக்காலத்திற்குரிய தமிழ் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. நானாதேசி, வலஞ்சியார், ஐந்நூற்றுவர் என்பன அவற்றுள் சிலவாகும். நானாதேசி வர்த்தக நிறுவனத்திற்குரிய உலோக முத்திரைகள் அம்பாந்தோட்டையில் கண் டெடுக்கப்பட்டுள்ளன.

அநுராதபுர ஆரம்பக் காலத்தில் இந்நாட்டில் குறிப்பிடத்தக்க அளவு வெளிநாட்டு வியாபாரிகள் வாழ்ந்ததற்கான ஆதாரங்கள் காணப்படுகின்றன. தென் மாகாணத்தில் அமைந்துள்ள போவத்தேகல எனும் இடத்தில் காணப்படும் கல்வெட்டில் ''கபோஜ மஹ புகிய'' எனும் வாசகம் காணப்படுகின்றது. அதில் குறிப்பிடப்படுவது காம் போஜர்களின் பெரு வர்த்தக அமைப்பு ஒன்று பற்றியதாகும். கம்போடியர்கள் என்று அக்காலத் தில் ஆப்கானிஸ்தானில் இருந்து இங்கு வந்த வர்த்தகர்கள் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

புராதன காலத்திலிருந்தே சர்வதேச வர்த்தக நடவடிக்கைகளில் எமது நாடு குறிப்பிடத்தகு பங்காற்றியுள்ளது. அதில் செல்வாக்கு செலுத்திய முக்கிய காரணி இலங்கை இந்து சமுத்திரத்தின் மத்தியில் அமைந்திருந்தமையாகும். கிழக்கு - மேற்கு வர்த்தக நடவடிக்கைகளின் பரிமாற்று நிலையமாக இலங்கை இருந்து புராதன வர்த்தகத்திற்கு ஆற்றிய பணி அளப்பரியதாகும்.

அநுராதபுரம் ஒரு நகரமாக வளர்ச்சிபெற்றதற்கு முக்கியமான காரணி சர்வதேச வியாபாரமாகும். நகருக்கு மேற்காக மாந்தை (மாதோட்ட) துறைமுகமும் கிழக்காக கோகண்ண என்று அழைக்கப்பட்ட திருக்கோணமலை துறை முகமும் அமைந்திருந்தன. இவற்றோடு மேற்கு, கிழக்கு கரையோரங்களில் காணப்பட்ட சிறிய துறைமுகங்களின் செயற்பாடும் இதற்கு கணிசமாகப் பங்களித்தன. வட கடற்கரையில் அமைந்திருந்த ஜம்புகோளப்பட்டினம் எனும் சிறிய துறைமுகத்திற்கு புனித வெள்ளரசு மரக் கிளை கொண்டுவரப்பட்டமையும் கிழக்கு கடற்கரையில் உள்ள லங்காப்பட்டினம் எனக் குறிப்பிடப்படும் சிறிய கப்பல் தரிப்பிடத்தில் புனித தந்ததாது, ஹேமமாலா இளவரசியாலும் தந்த இளவரசனாலும் கொண்டுவரப்பட்டமையும் இதற்கு உதாரணங்களாகும்.

**ஆசிரியர்கள்** - ஆசிரியத் தொழிலும் புராதன காலத்திலிருந்தே இங்கு நிலவி வந்துள்ளது. ஆசிரியர்களைக் குறிப்பதற்கு பழைய பதி வேடுகளில் ''ஆசார்ய'' எனும் சொல் பயன் படுத்தப்பட்டுள்ளது. கலைகளைக் கற்பிக்கும் நபர்கள் மட்டும் அல்ல, கலைகளில் நிபுணத்துவம் பெற்றிருந்த நபர்களும் ''ஆசார்ய'' எனும் பெயரால் குறிப்பிடப்பட்டனர். இவர்கள் பல்வேறு கலைகளிலும் பாண்டித்தியம் பெற்றிருந்தனர். யானையைப் பழக்கும் ஆசிரியர்கள் (ஹஸ்தி ஆசார்ய), குதிரை மீதேறிச் செல்வதைக் கற்பித் தோர் (அஸ்வ ஆசார்ய), அம்பு எய்தும் கலையைக் கற்பித்தோர் (துனு ஆசார்ய) பற்றிய விடயங்கள் கல்வெட்டுக்களில் கூறப்பட்டுள்ளன.

**வைத்தியர்கள்** - சமூகத்தை நல்ல முறையில் கொண்டு நடத்துவதற்கு அம்மக்கள் சுக தேகிகளாக இருப்பது அத்தியாவசியமாகும். இதற்கு வைத்தியர்களின் சேவை இன்றியமை யாததாகும். அநுராதபுரத்தின் ஆரம்ப காலத்தில் இந்நாட்டவர்கள் வைத்திய சேவையை மிக உயர்வாக மதித்து வந்துள்ளனர். வைத்தியர்களைக் குறிப்பதற்குக் கல்வெட்டுக்களில் பிரயோகிக்கப் படும் சொல் ''வெஜ'' என்பதாகும். கி.பி. 9 ஆம் நூற்றாண்டில் வைத்தியர்கள் சிலர் ''மஹவெதனா'' எனக் குறிப்பிடப்பட்டுள்ளனர். அவ்வாறான சொற்பிரயோகம் முதன்மை வைத்தியரையோ அறுவை சிகிச்சை செய்யும் வைத்தியரையோ குறித்திருக்கலாம்.

**சட்ட நிபுணர்கள்** - ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் அக்காலத்தில் நிலவிய சட்டங்கள் சம்பந்தமான துறைபோன அறிவுள்ளவர்கள் வாழ்ந்துள்ளனர். பெரும்பாலும் இவர்கள் நியாயத்தை வழங்குவதற்கு அரசர்களுக்குத்

தேவைப்படும் ஆலோசனைகளை வழங்குபவர்களாக இருந்தனர். இவர்கள் ''வொஹார'' எனும் பெயரால் குறிப்பிடப்பட்டுள்ளனர். இது சமஸ்கிருத மொழிச் சொல்லான வியவகார என்பதிலிருந்து வந்ததாகும். அக்கால சமூகத்தில் நீதிதுறைசார் விடயங்களில் நிபுணத்துவம் பெற்றவர்களுக்கே இப்பெயர் வழங்கப்பட்டது.

**பல்வேறு கலைஞர்கள் -** பல்வகைப்பட்ட கைத்தொழில்களில் ஈடுப்பட்டவர்களும் கலைத்துவமான தொழில்களில் ஈடுப்பட்டபவர்களும் புராதன சமூகத்திலும் வாழ்ந்து வந்தனர். கலைஞர்களில் நடனமாடுவோர், சித்திரம் வரைபவர்கள், கவிஞர்கள் பற்றிய விடயங்கள் புராதன மூலாதாரங்களில் காணப்படுகின்றன. குருணாகல் மாவட்டத்தில் மெதகமவில் அமைந்துள்ள புராதன விகாரையில் இற்றைக்கு 2200 வருடங்களுக்கு முன்னர் செதுக்கப்பட்ட கல்வெட்டு ஒன்றில் திஸ்ஸ என்ற நடனக் கலைஞர் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவரது மனைவி பருமக பதவி வகிப்பவராக அறிமுகப்படுத்தப்பட்டுள்ளமை முக்கியமான ஒரு விடயமாகும். நடனத் தொழில் சமூகத்தில் முக்கியமான இடத்தை வகித்து வந்தது என்பதை இதிலிருந்து நாம் அறியலாம்.

சித்திரக் கலைஞர்களாகக் குறிப்பிட ''சிதகர'' என்ற சொல்லும் ''லபன'' எனும் சொல்லும் பயன்படுத்தப்பட்டுள்ளன. முதலாவது சொல் ''சித்திரக்கார'' எனும் சொல்லாலும் இரண்டாவது சொல் ''லேபன'' எனும் சொல்லாலும் ஆக்கப்பட்டுள்ளன. சமஸ்கிருதத்தில் லேபத எனும் சொல் பயன்படுத்தப்படுவது அலங்காரப்படுத்தல் என்பதற்காகும். நிறங்களைப் பூசுவதன் மூலம் சித்திரக் கலை உருவாவதனால் சித்திரக் கலைஞர்களைக் குறிக்க ''லேபத'' எனும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. அம்பாந்தோட்டை மாவட்டத்தைச் சேர்ந்த நெட்டுக்கந்த எனும் இடத்தில் உள்ள கல்வெட்டில் லபன திஸ்ஸ என்பவரைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

எமது நாட்டின் உன்னத படைப்பாளர்களாகக் கவிஞர்கள் காணப்பட்டனர். அவர்களைக் குறிப்பதற்கு கவி என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. மேலே குறிப்பிடப்பட்டுள்ள லபத திஸ்ஸ என்பவருடைய மகன் சஞ்சயன் இக்கல்வெட்டில் கவிஞர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளார்.

## 4.3. கலாசாரம்

### 4.3.1 சமயம்

கி.மு. 3 ஆம் நூற்றாண்டில் மகிந்த தேரர் இங்கு வருகை தந்து புத்த சமயத்தைப் போதிக்கத் தொடங்கியதில் இருந்து அது இலங்கையின் பிரதான சமயமாக விளங்கி வந்துள்ளது. அதற்குப் பிற்பட்ட காலத்தில் இந்து சமயக் கருத்துக்கள் நாட்டில் பரவியமைக்கு சிறப்பாக இந்தியாவில் இருந்து வந்த வர்த்தகர்களும் ஏனையோரும் காரணமாய் இருந்தனர். இஸ்லாமும் கிறிஸ்தவமும் இலங்கையில் அறிமுகமானது பிற்காலத்திலாகும். அவை 6ஆம் நூற்றாண்டில் மத்திய தரைப்பிரதேசங்களிலும் பின்னர் மேற்கு ஆசியாவில் இருந்தும் 16 ஆம் நூற்றாண்டிலும் மேற்கு நாடுகளை மையமாகக் கொண்ட வர்த்தகம் கிழக்கு நாடுகளில் பரவிச் சென்றமையாலும் ஏற்பட்ட விளைவுகளாலாகும்.

மகிந்ததேரரும் அவரது குழுவினரும் இந்நாட்டிற்கு வருகை தந்த பின்னர் சிறிது காலத்தில் புத்த சமயமும் அதனுடன் இணைந்த வணக்க வழிபாடுகளும் இந்நாட்டவரிடையே வேகமாகப் பரவின. நாளுக்கு நாள் எண்ணிக்கையால் அதிகரித்துச் சென்ற பிக்குகள் வாழ்வதற்கான ஆராமைகளின் பற்றாக்குறையால் இயற்கையாக அமைந்த கற்குகைகளைச் சுத்தம்செய்து அவற்றை அவர்களுக்குத் தானமளிக்கும் நடவடிக்கைகளை மேற்கொள்ளத் தொடங்கினர். இதுவரை கண்டறியப்பட்டுள்ள பிக்குகளுக்கு தானமளிக்கப்பட்ட அவ்வாறான கற்குகைகள் 1600 இற்கும் மேற்பட்டவை நாட்டின் பல்வேறு பிரதேசங்களிலும் காணப்படுகின்றன.

பொருத்தமான கற்குகை ஒன்றைத் தெரிவு செய்து முதலில் அதனை சுத்தம்செய்து, மழை காலத்தில் குகையினுள் நீர் வழிவதனைத் தடுப்பதற்கான பீலிகளை அமைத்து அவற்றைப் பிக்குகளுக்குத் தானம் செய்தனர். சில கற்குகைகளில் பீலிகளுக்குக் கீழே அவற்றைத் தானமளித்தோர் பற்றிய விபரங்கள் செதுக்கப்பட்டிருப்பதைக் காணக்கூடியதாய் உள்ளது. அக்காலத்தில் அதற்கு ''பிராமி'' எழுத்துக்களே பயன்படுத்தப்பட்டுள்ளன. அக்கல்வெட்டுக்கள் ''பிராகிருத'' எனும் புராதன சிங்கள மொழியிலே எழுதப்பட்டுள்ளன. பாடசாலை சுற்றுலாவில் பங்குபெறும்போது நீங்கள் மிகிந்தல, ரிடிகல, வெஸ்ஸகிரி, சீகிரிய ஆகிய இடங்களில் காணப்படும் கல்வெட்டுக்களைக் காண்பதற்கான சந்தர்ப்பம் கிடைக்கலாம்.



*உரு 4.4. புத்த சமயம் இலங்கையில் அறிமுகமான காலத்தில் பௌத்த பிக்குகள் பக்தர்களால் தமக்குத் தானமாக வழங்கப்பட்ட கற்குகைகளிலேயே வாழ்ந்தனர். சற்று பிற்காலத்திலேயே பன்சலைகள், விகாரைகள் என்பன தோற்றம் பெற்றன.*

மிகிந்தலையில் ஒரு கற்குகையில் அவ்வாறு செதுக்கப்பட்டுள்ள ஒரு கல்வெட்டு அடுத்த பக்கத்தில் உரு 4.5. உள்ளது.

கல்வெட்டில்
பருமக ருத புத பருமக சுமணஹ
லென அகத அநகத சதுதிஸ சகச
எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

பொருள் - பிரதானியான குப்தவின் மகனான சுமண எனும் பிரதானியால் (இக்குகை) இங்கு வந்துள்ள, வருகை தராத நாற்றிசையிலுமுள்ள பௌத்த குருமார்களுக்கும் தானமாக வழங்கப்பட்டுள்ளது.

குகை விகாரைகள் தவிர பன்னசாலை எனப் பட்ட கட்டட வகை ஒன்றைப் பற்றியும் மூலா தாரங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. இதன் மூலம் கருதப்படுவது பிக்குமார் வாழ்வதற்கு ஓலை, இலுக்குப் புல் ஆகியவற்றால் வேயப்பட்டு மண் ணால் சுவர் எழுப்பப்பட்டுள்ள கட்டடமாகும். கருங்கற்கள், செங்கற்கள் பயன்படுத்தப்பட்டு விகாரைகள் கட்டப்படுவதற்கு முன்னர் பிக்கு கள் வாழ்ந்தனர். இவ்வாறான இடங்களில் தற் காலத்தில் பௌத்த விகாரைகளைக் குறிப்பதற்கு எங்களால் பயன்படுத்தப்படும் பன்சல எனும் சொல் உருவாகி இருப்பது பன்ன சாலா என்பதன் திரிபு ஆகும்.

புராதன பௌத்த ஆராமைகளில் குருமார் பலர் வாழ்ந்து வந்தனர். தலைமைப் பிக்கு ஒருவரின் கீழ் இங்கு வாழ்ந்த ஏனைய குருமார்கள் அந்தேவாசிக பிக்குகள் எனக் குறிப்பிடப்பட்டனர். அநுராதபுர மாவட்டத்தைச் சேர்ந்த மஹாஎலகமுவேயில் காணப்படும் கற்குகை ஒன்றில் செதுக்கப்பட்டுள்ள விடயத்தில் திஸ்ஸரக்கித எனும் தேரரின் அதே வசிக புஸ்ஸ என்பவர் பற்றிக் கூறப்பட்டுள்ளது. அக்காலத்தில் தலைமைப் பிக்கு தேரர் எனும் பெயரால் குறிப்பிடப்பட்டுள்ளார். அவ்வாறு குறிப்பிடப்படும் தலைமைப் பிக்குகளை அண்டி வாழும் மாணவப் பிக்குகள் "சதிவிஹரிய'' அல்லது சத்தி விஹாரிகா என்று கல்வெட்டுகளில் குறிப்பிடப்பட்டுள்ளனர். இதன் பொருள் அண் மித்து வாழ்வோர் என்பதாகும்.



*உரு 4.5. மகிந்த தேரர் இலங்கைக்கு வந்ததிலிருந்து பௌத்தகுருமாருக்காகபக்தர்கள், இவ்வாறான கற்குகைகளைத் தானமளித்துள்ளனர். செப்ப னிடப்பட்டு உருவாக்கப்பட்ட சில குகைகளில் இதனை தானமளிக்கப்பட்டோரின் பெயர், ஊர் குறிப்பிடும் கல்வெட்டொன்றும் செதுக்கப் பட்டுள்ளது.*

வலகம்பாகு மன்னருடைய காலத்தில் திரிபிடகம் எழுதப்படும் வரை மனனம் செய்வதன் மூலமே பௌத்த போதனைகள் பாதுகாக்கப்பட்டு வந்தன. இவை மிகவும் விரிவானவையானதால் அவற் றைப் பகுதி பகுதிகளாக மனனம் செய்திருந்த பிக்குகள் இருந்தனர். அவர்கள் பாணக எனக் குறிப்பிடப்பட்டனர். புத்த சமயத்துடன் சம்பந்தப்பட்ட அவ்வப் பகுதிகளை (பிடக) மனனம் செய்திருந்த பிக்குகள் அவற்றால் குறிப் பிடப்பட்டனர். உதாரணமாக தீகநிகாயவை மனனம் செய்திருந்த பிக்குகள் தீக பாணக என்றும் சங்யுக்த நிகாயாவை மனனம் செய்திருந்த பிக்குகள் சங்யுக்த பாணக எனும் பெயராலும் அறியப்பட்டனர்.

பிக்குகளுக்கு மழை காலத்தில் ஆராமைகளில் அவர்களுக்கு தங்கியிருக்க அழைப்பு விடுப்ப தும், அவர்களுக்கு காவி உடை வழங்கும் சடங்குகள் நடத்துதல் என்பன அக்கால பௌத்தர்களிடையே மரபாகக் காணப்பட்டது. குருநாகல் மாவட்டத்தில் ஹெலம்பகல என்னும் இடத்தில் காணப்படும் கல்வெட்டில் ''வசவசிக'' எனும் சொல் காணப்படுகின்றது. அதன் பொருள் மழை காலத்தில் பாதுகாப்பாக தங்கியிருத்தல் என்பதாகும். இது அம்மாவட்டத்திலுள்ள கொத்தலகிம் பியாவ என்னும் கல்வெட்டில் ''வச வசிக சகதக'' என்ற பதம் காணப்படுகின்றது. இது சிங்கள பிராகிருத மொழியில் எழுதப்பட்டுள்ளது. உத்திய என்னும் பிக்கு ஒருவரின் உறவினர் ஒருவரால் கத்தினசீவருய தானமளிக்கப்பட்டதாக கூறப்பட்டுள்ளது. இதன் கருத்து நெய்யப்பட்ட காவியுடை என்பதாகும். இக்கல்வெட்டுக்கள் இரண்டும் 2200 வருடங்களுக்கு முற்பட்டவையாகும்.

### 4.3.2 ஏனைய சமயங்கள்

பௌத்த சமயம் இந்நாட்டவரிடையே வேரூன்றிய காலத்தில் அநுராதபுர நகரிலும் அதனை அண்டிய பிரதேசங்களிலும் பிராமணக் குழுக்கள் வாழ்ந்ததற்கான சான்றுகள் உள்ளன. அவர்கள் இந்து சமயத்தவர்களாவர். சொத்தி சாலா என்று அக்காலத்தில் குறிப்பிடப்பட்ட விசேட கட்டடம் ஒன்றைப் பற்றி மகாவம சத்தில் கூறப்பட்டுள்ளது.

பிராமணர்கள் சமய நடவடிக்கைகளை மேற் கொண்ட இடங்கள் அப்படிக் குறிப்பிடப்பட் டுள்ளதாக மகாவம்ச டீகாவில் கூறப்பட்டுள்ளது. அதே போன்று சீவக சாலா எனும் சொல்லை விவரிக்கும் அந்நூல் சிவலிங்கம் பிரதிஸ்டை செய்யப்பட்டுள்ள இடம் எனக் குறிப்பிட்டுள்ளது. சிவபெருமானுக்கு பூசைகள் நடத்துவது இந்து மக்களிடையே பரவலாகக் காணப்படும் வழக்கம் ஒன்றாகும்.

தென்னிந்தியா இலங்கைக்கு அருகே அமைந் திருந்தமையும் இரு நாடுகளுக்கிடையேயும் விரிவான முறையில் தொடர்புகள் இடம்பெற்ற மையாலும் இந்து சமயக் கருத்துக்கள் இந்நாட்டில் பரவின. வர்த்தகத்திற்காக இந்நாட்டிற்கு வந்த தமிழ் வியாபாரிகள் பற்றிக் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. அவற்றில் அவர்கள் ''தமெட'' எனக் குறிப்பிடப்பட்டுள்ளனர். அது திராவிடர்களைக் குறிக்க சிங்கள பிராகிருத மொழியில் எழுதப்பட்ட முறையாகும். கி.பி. 7ஆம் நூற்றாண்டளவில் இந்நாட்டின் பிரதான



*உரு 4.6. பொலன்னறுவையில் காணப்படும் புராதன சிவன் கோயில்*

சமயப் பிரிவினர் வியாபாரத்தின் பொருட்டு இலங்கைக்கு வந்துள்ளனர். கி.பி. 5 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தேச சஞ்சாரி கொஸ்மொஸ் இண்டிகொப்லேடஸ், அநுராத புரத்தில் வாழ்ந்த பாரசீக வியாபாரிகள் பற்றிக் கூறியுள்ளார். அநுராதபுரத்தில் கண்டுப்பிடிக்கப் பட்டுள்ள நெஸ்டோரியர்களின் சிலுவை அவ்வர்த்தகர்களின் வழிபாட்டிற்குரிய கத்தோலிக்க சமயத்தை வெளிக்காட்டும் ஒரு குறியீடாகும். இச்சிலுவை உள்ள கற்றூண் கி.பி. 8 ஆம் அல்லது 9 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக இருக்கலாம் என்பது ஆய்வாளர்களின் கருத்தாகும்.

துறைமுகங்களை அண்டி குறிப்பிடத்தக்க அளவுக்கு தமிழ் மக்கள் வாழ்ந்துள்ளார்கள். மா தோட்டை துறைமுகத்திற்கு அருகில் அமைந்துள்ள திருக்கேதீஸ்வரம் இந்துக் கோவில், திருகோணமலையில் அமைந்துள்ள புராதன கோகண்ண தித்தவுக்கு (துறைமுகம்) அருகில் கட்டப்பட்டுள்ள திருக்கோணேஸ்வரம் கோவில் என்பன அக்காலத்தில் அங்கு வாழ்ந்த தமிழ் மக்களின் வழிபாட்டிடங்களாகும்.

சிலுவை அடையாளத்துடன் கூடிய புராதன கற்றூண் ஒன்று அநுராதபுரத்தில் கண்டுபிடிக் கப்பட்டுள்ளது. அச்சிலுவை கத்தோலிக்க சமயப் பிரிவுகளில் ஒன்றான நெஸ்டோரியர்களுக்கு உரியதாகும். பிற்காலத்தில் பாரசீகத்தை மையமாகக் கொண்டு பரவிய நெஸ்டோரிய



*உரு 4.7 அநுராதபுரத்திலிருந்து கண்டெடுக் கப்பட்ட கற்றூண் ஒன்றில் பொறிக்கப்பட்டுள்ள சிலுவை.*

கி.பி. 9 ஆம் நூற்றாண்டின் பின்னர் இஸ்லாமிய சமயக் கருத்துக்களும் இலங்கையில் நிலவியது என்பதற்கான சாட்சியங்கள் கிடைக்கப்பெற்றுள்ளன. இன்று கண்டறியப்பட்டுள்ள புராதன அரபு பூகோள வியல் நூலான ''கிதாப் அல் மஸ்லிக் வல் மமாலிக்'' கில் இலங்கை ''செரண்டிப்'' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அராபியர் இலங்கையை செரண்டிப் எனக் குறிப்பிட்டனர். இந்நூல் எழுதப்பட்டது கி.பி.845 இல் அல்லது அதற்கு அண்மைய காலத்திலாகும். அராபியர்கள் இலங்கையுடன் புராதன காலத்தில் இருந்தே நல்லுறவைக் கொண்டிருந்தனர். அது வர்த்தகத் தொடர்புகளைவிட மேலான ஒன்றாகும். முகம்மது நபி அவர்கள் வாழ்ந்த காலத்திலேயே அவருடைய சமயத்தைப் பற்றி ஐயந்திரிபற அறிந்து கொண்டு வருவதற்காக செரண்டிப்பில் இருந்து ஒரு குழுவினர் அரேபியாவுக்கு வந்ததாக இபன் சஹ்ரியர் என்பவரால் கி.பி. 953 இல் எழுதப்பட்ட ''அஜாயிப் அல் ஹிந்த்'' என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது. பக்தாத் நகரத்தை மையமாகக் கொண்ட அப்பாஸியர்களின் ஆட்சிக் காலத்தில் இஸ்லாமியரின் வர்த்தக ஆதிக்கம் கி.பி. 751 - 1258 ஆண்டுகளுக்கிடைப்பட்ட காலத்தில் ஆசியா எங்கும் பரந்து நிலைத்து நின்றது. சர்வதேச வியாபாரத்தை சிறப்பாக மேற்கொள்வதற்காக இலங்கையின் ஆட்சியாளர்கள் உறுதியான நடவடிக்



*உரு 4.8. அராபியர்களுக்கு உரித்தான புதைக்குழி கல் ஒன்றில் செதுக்கப்பட்டுள்ள கல்வெட்டு. இதில் காணப்படுவது கியுபிக் அரபு எழுத்துக்களாகும்.*

கைகளை மேற்கொண்டதாக கி.பி. 9 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அல் - பலசூரி எனும் அராபிய வரலாற்று ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

### 4.3.3. கல்வி

அறிவைப் பெற்றுக் கொள்வதற்கும் அதைப் பரப்புவதற்குமான அமைப்புகள் புராதன காலத்தில் இருந்தே எமது நாட்டில் இருந்து வந்துள்ளன. ஆரம்ப காலத்தில் ஒரு பரம்பரையிலிருந்து அடுத்த பரம்பரைக்கு அறிவு பரிமாற்றப்பட்டது பயிற்சிகளின் மூலமும் கேள்வி ஞானத்தின் மூலமுமாகும். இற்றைக்கு 4400 வருடங்களுக்கு முற்பட்ட காலத்தில் களி மண் ஓடங்களாலான மயானங்களும் அவற்றினுள் அஸ்தி வைக்கப்பட்ட மட்பாண்டங்களும் அவை வைக்கப்பட்டிருந்த விதமும் அவை ஒரே மாதிரி உருவாக்கப்பட்டிருந்த தன்மையும் பற்றி அவதானிக்கையில் அவற்றை உருவாக்குவதற்கு வேண்டிய தொழினுட்பம் பற்றிய அறிவை முறையாகப் பெற்றிருந்தமையை எம்மால் அவதானிக்க முடிகின்றது.

இப்பாடத்தில் இன்னொரு இடத்தில் குறிப்பிடப்பட்டவாறு எமது நாட்டுப் புராதன கல்வெட்டுக்களில் ஆசார்ய எனும் சொல்லால் குறிப்பிடப்பட்டிருப்போர் ஆசிரியர்களாவர். அவ்வாசிரியர்களால் கற்பிக்கப்பட்ட விடயங்களைக் கொண்டே அவர்கள் குறிப்பிடப்பட்டனர். சிலர் துணு ஆசார்ய என்றும் சிலர் ஹதி ஆசார்ய என்றும் சிலர் அச அசார்ய என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன. அவர்கள் அம்பு எய்தும் கலை, யானைகள் அடக்கியாளும் கலை என்பவற்றை கற்பித்த ஆசிரியர்களாவர்.

புத்த சமயம் இந்நாட்டில் வேரூன்றிய காலத்தில் இந்நாட்டின் கல்வியின் மத்திய நிலையங்களாக விகாரைகளே செயற்படத் தொடங்கின. பௌத்த குருமார்கள் சிங்களம், பாளி, சமஸ்கிருதம், பிராகிருதம் ஆகிய மொழிகளில் மட்டுமன்றி புத்த தர்மம் தொடர்பான ஆழ்ந்த அறிவையும் கொண்டிருந்தனர். புராதன காலத்தில் இருந்து இந்நாட்டின் முதற்றர ஆசிரியர்களாகச் செயற்பட்டவர்கள் அவர்களேயாவர்.

புராதன காலத்தில் அநுராதபுரத்தில் காணப்பட்ட மஹா விகாரை, அபயகிரி விகாரை என்பன பௌத்த சமய மத்திய நிலையங்களாக மட்டுமன்றி கல்வி நிலையமாகவும் செயற்பட்டன. வெளி நாட்டு பௌத்த குருமார்களும் கல்வி கற்பதற்காக இங்கு வருகை தந்தனர். திரிபிடக நூலுக்கு மேலதிக விளக்கமாக அட்டுவாக் களை எழுதிய புத்தகோச தேரர் அவ்வாறு மகா விகாரையில் கல்விபெற வந்தவராவார்.

கல்வியை வழங்குதல் மூலமும் கல்வியைப் பெற்றுக் கொள்வதன் மூலமும் எங்கள் புராதன சமூகத்தினரிடம் மரியாதை உணர்வு காணப்பட்டது. லோகோபகார நூலில் காணப்படும் கவிதை இதற்கு உதாரணமாகும். அக்கவிதையில், ஒருவர் இளமையாக புத்திசாலியாக, குணத்தில், ஞானத்தில் மேம்பட்டவராயிருந்தாலும் அவன் அல்லது அவளிடம் கலை பற்றி அறிவு இல்லாவிட்டால் வாசமற்ற காட்டுப் பூவிற்கே ஒப்பாவார் என்று கூறப்பட்டுள்ளது.

### 4.3.4 இலக்கியமும் இரசனையும்

இராசரட்டை நாகரிகத்தைச் சேர்ந்த இலக்கிய நூல்களை நோக்குகையில் அவை பாளி, சமஸ்கிருதம், சிங்களம் ஆகிய மொழிகளில் எழுதப்பட்டிருப்பதை அவதானிக்கலாம்.



*உரு. 4.9. சிகிரி பளிங்குச் சுவரில் எழுதப்பட்டுள்ள கிறுக்கல் கவிதையொன்று. இவ்வெழுத்துகள் கி.பி. 8 அல்லது 9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவையாகும். அது கொணனதல்மி லிமி எனும் இரு சொற்களால் ஆனது. இதன் பொருள் ''இது என்னால் எழுதப்பட்டது'' என்பதாகும்.*

தீப வம்சம், அபிதானா பிரதீப்பிக்கா, சாராபிரதீப்பதி ஆகிய நூல்கள் பாளி நூல்களுக்கான உதாரணங்களாகும்.

ஜானகிஹரணய, பாலவதபோதன, அனுருத்த, சத்தகய என்பன சமஸ்கிருத நூல்களுக்கான உதாரணங்களாகும்.

சியபஸ்லகர, சசாந்தாவத்த, முவதே உதாவத்த என்பன சிங்கள நூல்களுக்கான உதாரணங்களாகும்.

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட கவிதை ஒன்று கிரிந்த பன்சலையில் உள்ள கற்பாறையில் பொறிக்கப்பட்டுள்ளது. அது தாளத்துடன் பாடக்கூடிய ஒரு கவிதையாகும். அது புத்த பெருமானின் குணவியல்புகளைப் பறைசாற்றுவதுடன், அவ்வாறான சமயத்தை நாக இளவரசன் ஒருவன் இங்கு வைத்து ஏற்றுக் கொண்டதாகக் கூறுகின்றது.

அநுராதபுரத்தில் எழுதப்பட்ட அறுநூறுக்கு மேற்பட்ட கவிதைகளை இன்றும் சீகிரிய பளிங்குச் சுவரில் காணக்கூடியதாக உள்ளது. அக்கவிதைகளின் இரசனை மிகவும் உயர்வானதாகும். அடுத்த கல்விச் சுற்றுலாவில் நீங்கள் சீகிரிக்குச் சென்று அவற்றைப் பார்ப்பது உங்களுக்குப் பயன் மிக்கதாக இருக்கும்.

புராதன காலத்தில் எங்கள் நாட்டில் வாழ்ந்த கவிஞர்கள் புத்த சமய போதனைகளால் பெற்ற உணர்வினாலும் இயற்கையோடு இணைந்து தொடராகச் செயற்படும் பண்பினாலும் ஏற்பட்ட அனுபவத்தையும் அடிப்படையாகக் கொண்டு கவிதைகளைப் படைப்பதில் ஈடுபட்டனர். ஆகையால் உலகின் நிலையாமை இக்கவிதைகளுக்கு பெருமளவிற்கு கருப்பொருளாகக் கையாளப்பட்டுள்ளது. அநுராதபுரத்தில் அபயகிரி விகாரையின் சுற்றாடலில் கண்டறியப்பட்டுள்ள கி.பி. 9 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டு ஒன்றில் அவ்வாறான உள்ளத்தைக் கவரும் கவிதை ஒன்று எழுதப்பட்டுள்ளது. அக்கவிதையில் கையாளப்பட்டுள்ள உவமானங்கள் மிகவும் எளிமையான உணர்வு பூர்வமான அழகியல் உணர்வை கேட்போருக்கு ஏற்படுத்தும் தன்மை வாய்ந்தவை ஆகும்.

நீண்டகால விவசாய நடவடிக்கைகள், மந்தை வளர்ப்பு என்பவற்றில் ஈடுபட்டிருந்ததன் மூலம் எமது முன்னோர்களுக்கு இயற்கையுடன் இணைத்து வாழ்வதற்கு சந்தர்ப்பம் கிட்டியது. ஆகையால் இயற்கையின் அழகு, நிலையாமை ஆகிய இரண்டையும் பற்றிச் சரளமான ஆழ்ந்த அறிவு அவர்களிடம் காணப்பட்டது. பௌத்த போதனைகளால் அவ்வறிவு மேலும் வளர்ச்சியடைந்ததன் மூலம் உதார குணத்துடனான இரசனை புராதன சமூகத்தில் வளர்ச்சியுற்றிருந்தது.

### 4.3.5 இனங்களுக்கு இடையேயான இணக்கப்பாடு

முற்காலத்தில் இருந்தே எமது நகரங்களில் பல்வேறு கலாசாரங்களைக் கொண்ட மக்கள் வாழ்ந்ததற்கான ஆதாரங்கள் உள்ளன. இந்நாட்டில்



*உரு 4.10 சீகிரிக் குன்றில் தீட்டப்பட்டுள்ள அப்ஸரஸ்களின் உருவங்கள். இவை ஐந்தாம் நூற்றாண்டின் இலங்கையின் அரசவைக் கலையம்சத்தைக் காட்டுகின்றன. இக்காரிகைகள் மின்னலையும் முகிலையும் காண்பிக்கும் குறியீடுகள் என்பது ஆய்வாளர்களின் கணிப்பாகும்*

வாழ்ந்து வந்தவர்களைத் தவிர வியாபாரத்தின் பொருட்டு வந்த ஏனைய சமய, கலாசாரங்களைக் கொண்ட மக்களும் நகரங்களில் வாழ்ந்ததாகக் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. அவர்களுள் தென்னிந்தியாவில் இருந்து வந்த தமிழர்களும் கிரேக்கம், மெஸிடோனியா ஆகிய பிரதேசங்களிலிருந்து வந்த அயோனியன்களும் ஆப்கானிஸ்தான் பகுதியில் இருந்து வந்த காம்போஜர்களும் மலாக்கா குடா நாட்டிலிருந்து வந்த ஜாவகர்களும் காணப்பட்டனர்.

அங்கு இனங்களிடையே எவ்வாறான பன் முகத்தன்மை காணப்பட்ட போதிலும் எச் சந்தர்ப்பத்திலும் அவர்கள் தமக்கிடையே குழப்பங் களை ஏற்படுத்திக்கொள்ள முயன்றதில்லை. பௌத்த சமய குருவாக இருந்த தமிழர் ஒருவரைப் பற்றி அநுராபுர, அபயகிரி விகாரையிலிருந்து கண்டுப்பிடிக்கப்பட்ட கல்வெட்டு ஒன்றில் கூறப்பட்டுள்ளது. அக்கல்வெட்டு கி.மு. 250ஆம் ஆண்டளவில் எழுதப்பட்டதாகும்.

அந்நிய இனத்தவரை சந்தேகக்கண்கொண்டு பார்ப்பதற்கு புராதன கால மக்கள் பழக்கப்பட்டி ருக்கவில்லை. அதற்குப் பதிலாக அவர்களுடன் நல்லுறவுடன் செயற்பட்டனர். தமிழர் ஒருவ ருடன் திருமணமாகி இருந்த சிங்களப் பெண் ஒருவர் பற்றி அம்பாறையிலிருந்து கண்டுப் பிடிக்கப்பட்ட புராதன கல்வெட்டில் குறிப்பிடப் பட்டுள்ளது. புராதன காலத்தில் தமிழ்க் குடும்பங்கள் சில வாழ்ந்து வந்த வீதி ஒன்று அநுராதபுரத்தில் தொல்பொருளியலாளர்களால் கண்டுப்பிடிக்கப்பட்டுள்ளது.

இந்து சமுத்திரத்தை அண்டிய பிரதேசங்களில் இருந்துவந்த பல்றேு நாட்டு வணிகர்களும் இலங்கையின் புராதன நகரங்களில் வாழ்ந் துள்ளனர். அவர்களுள் பெரும்பாலானோர் தென்னிந்தியாவில் இருந்து வந்தவர்களாவர். கி.பி. 9 ஆம் நூற்றாண்டாகும்போது இந்நாட்டு அரச சபையில் தமிழ் அதிகாரி என்று குறிப்பிடப்பட்ட விசேட பதவி ஒன்று இருந்துள்ளது. அவருடைய பொறுப்பாக இருந்தது அநுராதபுரத்திலும் அதன் சுற்றுப் புறங்களிலும் வாழ்ந்த தமிழர்களின்

சுக நலன்களைப் பேணுவதாகும். கொழும்பு அருங்காட்சியகத்தில் உள்ள 4 ஆம் காசியப்ப மன்னனின் கல்வெட்டில் தமிழ் அதிகாரி ஒருவர் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. வணிகர்கள் அல்லாமல் இத்தமிழ் மக்களில் அதிகமானோர் படையினராகப் பணி புரிந்துள்ளனர். இவ்வாறான தென்னிந்தியப் படையின் உதவியைப் பெற்ற அரசர்கள் இளநாக (கி.பி. 33 - 43), அபயநாக (கி.பி. 231 - 240) என்போராவர். கேரளாவில் இருந்து வந்த அவர்களால் ஆனபடை அஹம்படிச் சேனைஎனப்பட்டது. முதலாம் விஜயபாகு மன்னன் தலதா மாளிகையின் பாதுகாப்பை வேளைக்காரப் படையிடம் ஒப்படைத்ததாக வம்சக் கதைகளில் கூறப்பட்டுள்ளன. இவர்கள் கேரளாவில் இருந்து வந்த அஹம்படிச் சேனையினராவர்.

கி.பி. 11,12 ஆம் நூற்றாண்டுகளில் இந்நாட்டின் வர்த்தக நடவடிக்கைகளுக்காக வந்திருந்த பல் வேறு நாட்டு வியாபாரிகளுள் பெரும்பாலானோர் தென்னிந்தியராவர். அவர்களிடமிருந்த உலோக முத்திரை ஒன்று அம்பாந்தோட்டையில் கண்டறியப்பட்டுள்ளது. நானாதேசி என்று குறிப்பிடப்பட்ட அவ்வர்த்தகர்களுக்குச் சொந்தமான தீர்வை நிலையம் ஒன்று பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ள லீலாவதி அரசியின் காலத்தில் எழுதப்பட்டுள்ள கல்வெட்டு ஒன்று அநுராதபுரத்தில் கண்டறியப்பட்டுள்ளது. இவர்கள் சமாதானமான முறையில் தங்களது பணிகளைச் செய்து கொண்டு சென்றதாகவும் அவர்களுடைய பாதுகாப்புக்கும் நலன்புரி விடயங்களுக்கும் அக்கால ஆட்சியாளர்களின் பூரண ஒத்துழைப்பும் உதவியும் கிடைக்கப் பெற்றதாகவும் வரலாற்று அறிக்கைகள் மூலம் தெரிய வருகின்றது.

தமிழர்களுடன் மட்டுமல்லாது இஸ்லாமிய மதத்தைப் பின்பற்றும் அராபியர்களுடனும் அந்நியோன்னியமாக செயற்படுவதற்கு மக்கள் பழகியிருந்தனர். அனைத்து மக்களும் ஒற்றுமையாக வழிபடும் இடமாக சிவனொளிபாதமலை விளங்குகின்றது. புத்த பெருமானின் காலடி பட்டதனால் பௌத்தர்கள் இதனை ''ஸ்ரீபாத'' என்றும், சிவபெருமானின் பாதம் பட்டதனால் இந்துக்கள் இதனை ''சிவனொளிபாத மலை'' என்றும் அழைப்பர். கிறிஸ்தவர்களாலும், இஸ்லாமியர்களாலும் இது ''ஆதாமின் மலை'' (Adams peak) என அழைக்கப்படுகின்றது. கி.பி. 9 ஆம் நூற்றாண்டில் இருந்தே சிவனொளிபாத மலை முஸ்லிம் பக்தர்களினது புனித பயணத்திற்குரிய இடமானது ஆதாமின் மலை என்ற விசுவாசத் தினாலாகும். கி.பி. 850 ஆம் ஆண்டில் நாடுகாண் பயணியும் வர்த்தகருமான சுலைமான் என்பவர் சிவனொளிபாத மலையைத் தரிசிக்க வந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. அவ்வாறு வந்த எவருக்காவது இந்நாட்டு மக்களால் அல்லது அரசர்களால் எந்தவொரு இடையூறும் ஏற்படவில்லை.

புராதன காலத்தில் வாழ்ந்த இந்நாட்டு ஆட்சியாளர்களும் பொதுமக்களும் எந்நேரமும் சிந்தித்தது நாட்டின் முன்னேற்றத்திற்காக சகலருடனும் சகவாழ்வை மேற்கொள்வது எவ்வாறு என்பதைப் பற்றியேயாகும். நாட்டின் ஐக்கியத்திற்கும் பௌத்த சமயத்தின் நிலைப்புக்கும் பாதுகாப்புக்கும் சவால் ஏற்படாத எச்சந்தர்ப்பத்திலும் அவ்வாறான சகவாழ்வு நன்கு பாதுகாக்கப்பட்டு வந்தது. அந்நிய இனத்தவர், மதத்தவர்களைப் பொறுத்துக் கொள்வதற்கு இந்நாட்டில் வாழ்ந்த சிங்கள பௌத்த மக்கள் எந்நேரமும் செயற்பட்ட விதம் எக்காலத்திற்கும் எடுத்துக்காட்டாக இருப்பதை நாம் எந்நேரமும் ஞாபகத்தில் கொள்ள வேண்டும்.

**முக்கிய விடயங்கள்**

1. புராதன காலத்தில் இலங்கையின் ஆட்சி செயற்பாடு சட்டம், நிர்வாகம், நீதி என்ற மூன்று நிறுவனங்களுக்கூடாகச் செயற்படுத்தப்பட்டது. அரசனும் அவன் சார்ந்த அதிகாரிகளும் நிர்வாகத்துறை சார்ந்தவர்களாவர் கலந்துரையாடல் மூலம் அரச சபை தீர்மானங்களை மேற்கொள்வதாயும் இருந்தது.

2. அரிய சந்தர்ப்பங்கள் தவிர ஏனைய எல்லாச் சந்தர்ப்பங்களிலும் புராதன ஆட்சியாளர்கள் நெகிழ்வுத் தன்மையுள்ள வெளிநாட்டுக் கொள்கையையே பின்பற்றி வந்தனர்.

3. எங்கள் புராதன சமூகத்தில் பல்வேறுபட்ட தொழில்களைப் புரிவோர் வாழ்ந்து வந்துள்ளனர். சமூகத்தை சுறுசுறுப்பானதாக்குவதற்கும் அதன் மூலம் பிரஜைகளின் வாழ்க்கையை இலகுபடுத்துவதற்கும் அவர்கள் ஒவ்வொருவரும் சமூகத்திற்குப் பெரும் பங்காற்றியுள்ளர்.

4. புராதன காலந்தொட்டு விவசாயமும் விலங்கு வளர்ப்பும் எம் நாட்டின் பெரும்பான்மையோரின் சீவனோபாயமாக விளங்கியது.

5. புராதன இலங்கையர் மிகவும் உயர் தரத்திலான கலை, அழகியல் இலக்கிய இரசனையில் ஆழ்ந்த ஈடுபாடுள்ளோராய் இருந்தனர். அவர்களுடைய படைப் பாற்றலும் நிறை அறிவும் மிகவும் உயர் மட்டத்தில் காணப்பட்டதனை உறுதிப்படுத்துவதற்கான ஆதாரங்கள் காணப்படுகின்றன.

6. புராதன காலத்தில் இந்நாட்டில் நிலவிய பௌத்ததர்மம்ஆழமானதத்துவங்களையும் மக்களுடைய பக்தியையும் ஈடுபாட்டையும் பல்வேறு செயற்பாடுகளினூடாக வெளிக் காட்டுவதாய் அமைந்திருந்தது. அக்கால பௌத்த குருமாருக்கும் மக்களுக்கும் நெருங்கிய கௌரவம் மிக்க உறவு இருந்தது.

7. பௌத்த சமயம் தவிர்ந்த ஏனைய சமயக் கருத்துக்களும் காலத்துக்கு காலம் இந்நாட்டில் பரவிச் சென்றன. இலங்கை தீவொன்றாக இருந்தமையாலும் ஆதிகாலத்திலிருந்து இந்து சமுத்திர வியாபார நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந் தமையாலும் வேறு சமயக் கருத்துக்களும் இந்நாட்டில் நிலை கொண்டு பரவின.

8. எமது நாட்டு மக்கள் வேற்று பண்பாட்டு மக்களுடன் ஒற்றுமையாக வாழ்ந்தமை வரலாற்றில் காணக்கூடிய சிறப்பம்சமாகும்.

### செயற்பாடு 01

இலங்கையில் புராதன சமூகத்தின் ஆட்சி அமைப்பு, சமயம், இலக்கியம் எனும் பகுதிகளை உள்ளடக்கி பத்திரிகைகளுக்கு கடிதம் ஒன்று எழுதுக.

### செயற்பாடு 02

இலங்கையில் புராதன சமூகம் தொடர்பாகக் குறு வினா - விடைப் புத்தகம் ஒன்றைத் தயாரிக்குக.

**பதனாகர**

*புராதன காலத்தில் பௌத்த குருமார் ஆழ்ந்த தியானத்தில் ஈடுப்படுவதற்காகப் பயன்படுத்தப்பட்ட கட்டட வகை ஒன்றே இவ்வாறு குறிப்பிடப்படுகின்றது. நீரோடையால் பிரிக்கப்பட்ட இரு கட்டடங்களை சிறிய பாலம் ஒன்றால் இணைத்து இது கட்டப்பட்டுள்ளது. வசப மன்னனால் உருவாக்கப் பட்ட பெரிமியன் குளம் கல்வெட்டில் சதுஸ்ஸன என்ற பெயரில் இருந்த இவ்வாறான பதனா கரவை குறிப்பதற்கு மும்மேடைக் கட்டடம் என்ற சொல்லும் பயன்படுத்தப்பட்டுள்ளது.*

**புகய**

*சமஸ்கிருத மொழியில் புக எனும் சொல்லால் சபை அல்லது ஒரு கூட்டத்தினரால் ஆன குழு குறிப்பிடப்படுகின்றது. இலங்கையின் புராதன கல் வெட்டுக்களில் புக எனும் சொல்லால், வணிகர் களின் சபை குறிப்பிடப்பட்டுள்ளது. புக எனும் சொல்லிற்குப் பதிலாக நியமஸ்தான (குறிப்பிட்ட இடம்) எனும் வார்த்தையும் கல்வெட்டுக்களில் பயன் படுத்தப்பட்டுள்ளன.*

**கியுபிக் அரபு எழுத்துக்கள்**

*பல்வேறுபட்ட அராபிய எழுத்துக்களின் ஆரம்ப வடிவமே கியுபிக் எனக் குறிப்பிடப்படுகின்றது. அவ்வெழுத்து முறை கி.பி. 7 ஆம் நூற்றாண்டில் ஈராக்கின் கூபா நகரத்தை மையமாகக் கொண்டு வளர்ச்சியுற்றது. இஸ்லாமியர்களின் புனித நூலான திருக்குர்ஆன் பிரதி செய்வதற்குப் பயன்படுத்தப் பட்டது இவ்வெழுத்து வகையாகும். இவ்வெழுத்தால் எழுதப்பட்ட புதைகுழிக் கல்வெட்டுக்கள் பல இலங்கையில் கண்டெடுக்கப்பட்டுள்ளன.*

# 5 இலங்கையின் புராதன விஞ்ஞானமும் தொழினுட்பமும்

### அறிமுகம்

விஞ்ஞானம் என்பது இயற்கையின் செயற்பாட்டிற்குப் பங்களிப்புச்செய்யும் அடிப்படையைத் தெரிந்து கொள்வதும் அதற்கு அர்த்தம் கற்பித்துக் கொள்வதுமாகும். அது அனுபவத்தை அடிப்படையாகக் கொண்ட ஒரு செயற்பாடாகும். விஞ்ஞானம் எனும் பெயரில் கலந்துரையாடாத போதிலும் பண்டைய சமூகம் இயற்கையின் அடிப்படையைப் புரிந்துகொண்டு அதனைத் தனது அன்றாட வாழ்வில் பயன்படுத்தியமையை அறிய முடிகிறது. இலங்கையின் பண்டைய சமூகத்திலும் விஞ்ஞான ரீதியிலான கருத்துக்கள் நடைமுறையில் இருந்துள்ளன. இந்த அத்தியாயத்தின் மூலம் அவ்வாறான கருத்துக்களின் தன்மை, மற்றும் அவை நடைமுறையில் பயன்படுத்தப்பட்ட விதம் என்பன பற்றிய விளக்கத்தைப் பெறுதலும் அதனூடாக எமது வரலாற்று மரபில் நிலவிய விஞ்ஞானத் தன்மையை அவதானித்தலும் எதிர்பார்க்கப்படுகின்றது.

## 5.1. விஞ்ஞானக் கருத்துக்களின் ஆரம்பக் கட்டம்

மிகப் பண்டைய காலந்தொட்டு இலங்கை வாழ் மக்களினால் மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகளை அறிந்துகொள்வதன் மூலம் அவற்றுக்குப் பின்னணியாக அமைந்த சிந்தனைகள் எவ்வாறானவை என்பது பற்றிய தெளிவினைப் பெறலாம். ஆய்வு ரீதியான மனப்பாங்கோடு அவற்றை அவதானிக்கும்போது அவ்வாறான சில நடவடிக்கைகள் விஞ்ஞான ரீதியாக சிந்தித்ததன் விளைவாகவே மேற்கொள்ளப்பட்டுள்ளன என்ற உண்மை தெளிவாகின்றது. இயற்கையோடு இணைந்து பணியாற்றும்போது அதன் அடிப்படை அம்சங்களைத் தெரிந்திருத்தல் கட்டாயமானதாகும் சிறியதொரு கல்லறையைக் கட்டுவதிலிருந்து பாரிய நீர்ப்பாசன நிர்மாணங்களை மேற்கொள்வது வரையிலான நடவடிக்கைகளின் வெற்றி தங்கியிருப்பது, அவை நீண்ட காலம் நின்று நிலைக்கத்தக்க வகையில் இயற்கையின் அடிப்படைப் பண்புகளை அறிந்து நிர்மாணித்துக் கொண்டதன் மூலமாகும். இலங்கையில் நிலவிய விஞ்ஞானக் கருத்துக்கள், அவற்றை செயற்படுத்தியமை மேற்கொண்ட தொழினுட்ப அணுகுமுறையின் தன்மை என்பன இவ்வத்தியாயத்தில் கலந்துரையாடப்படுகின்றன.

ஏதாவதொரு பொருளை மேலே எறிந்தால் அது கீழே விழுவதை நாம் கண்டிருக்கிறோம். அது இயற்கையின் பண்பாகும். அந்தப் பண்பில் செல்வாக்குச் செலுத்தும் அடிப்படை ஒன்றுள்ளது. அதனை விஞ்ஞானிகள் புவியீர்ப்பு என்பர். புவியின் வளிக்கோளத்தின் ஓர் எல்லை வரை புவியீர்ப்புச் சக்தி செயற்படும் என்பதை விஞ்ஞானிகள் ஆய்வு ரீதியாகவே நிரூபித்துள்ளனர். அது அவ்வாறு நிகழுமா என்பதை யாரேனும் அறிய விரும்பின் அதனை மீண்டும் ஆய்வுசெய்து அவராக அறிந்து கொள்ளவும் முடியும். விஞ்ஞானத்தின் பண்பு அவ்வாறானதே. இயற்கையின் அடிப்படையைச் சரியாகப் புரிந்து கொள்வதும் அவற்றைத் தேடியறிந்து உறுதிப்படுத்திக் கொள்வதும் விஞ்ஞான ரீதியாகச் செயற்படும்போது பின்பற்றும் சாதாரண செயற்பாடுகளாகும். பரிசோதனையின் பின்னர் தெரிந்துகொண்ட இயற்கையின் அடிப்படையைப் பிரயோகித்து நடைமுறையில் செயற்படுத்தும்போதே தொழினுட்ப அறிவு தேவைப்படுகின்றது. இயற்கையின் பல்வேறு விதமான சக்திகளை அழிப்பது முடியாத காரியம். ஆயினும் அச்சக்திகளை எமக்குத் தேவையான சக்திகளாக மாற்றிக்கொள்ள முடியும் என்பது பௌதிக விஞ்ஞானத்தின் அடிப்படையாகும். அதற்கேற்ப மின்சக்தியை ஒளிச்சக்தியாக மாற்றி மின்குமிழ் ஒன்றை உற்பத்தி செய்வதே தொழினுட்பமாகும்.

இயற்கையின் அடிப்படை நியதிகளை விளங்கிக் கொண்டு அதனை பிரதியீடு செய்வதற்கு புராதன இலங்கை மக்கள் செயற்பட்டுள்ளமைக்கான ஆதாரங்கள் வரலாற்றுக்கு முந்திய காலத்திற்குரியனவாகும். 28000 வருடங்களுக்கு முன்னர் உற்பத்தி செய்யப்பட்ட நிலைக்கண்ணாடி எனப்படும் ஒளி ஊடுருவக்கூடிய படிகக் கல்லினால்

செய்யப்பட்ட சமாந்தரமான கல்லாயுதங்கள், கரடு முரடான கற்பாறைகளை செப்பனிடுவதற்கு அன்றைய மனிதனிடமிருந்த தொழினுட்ப அறிவைக் காட்டுகின்றது. கல்லாயுதங்களைத் தயாரிப்பதற்காக கற்பாறைகளிலிருந்து கற்பாலங் களை பிரித்தெடுப்பதற்கான தொழினுட்பம் அமுக்கப் பிரயோகம் எனப்படுகின்றது

நடைமுறை விஞ்ஞானத்தின் ஆரம்ப கட்டம் வரலாற்றுக்கு முந்திய காலத்திலிருந்தே வெளிப்படுவதுடன் அது முன் வரலாற்றுக் காலத்திலேயே வளர்ச்சியடைந்தது. அக்காலப் பகுதியின் விஞ்ஞான அறிவைப் பறைசாற்றும் சந்தர்ப்பங்கள் சில பின்வருமாறு ;

### களிமண் ஓட வடிவிலான புராதன கல்லறை

களிமண்ணால் ஓட வடிவிலான கல்லறைகள் அமைக்கப்பட்டன. இறந்தவர்களைத் தகனம் செய்வதற்கு பச்சைக் களிமண்ணால் தோணி போன்ற வடிவத்தில் இது உருவாக்கப்பட்டது. அதற்காக பொருத்தமான களிமண்ணைத் தெரிவு செய்தல், கல்லறையின் சுவரின் உயரத்தைக் குறைத்தல், சுவரை நிலத்திற்கு செங்கோணத்தில் அமைத்தல், கல்லறைச் சுவர்களின் சமநிலையை பேணுதல் என்பன பற்றி அதனை அமைத்தவர்கள் சிந்தித்து செயற்பட்டுள்ளனர். கல்லறைகளில் மாத்திரமல்லாது உடரஞ்சாமடம எனுமிடத்தில் கண்டறியப்பட்ட வீட்டின் சுவரும் நிலத்திற்கு செங்குத்தாகவே அமைக்கப்பட்டிருந்தது.

ஏதாவதொரு பொருள் நிலத்துடன் செங் கோணமாகத் தொடுக்கப்பட்டிருக்கும்போது அப்பொருள் மூலம் நிலத்திற்கு அழுத்தம் கொடுக்கப்படும் தன்மை இல்லாது போய்விடும் என்பது பௌதிக விஞ்ஞானத்தின் அடிப்படைக் கோட்பாடாகும். இன்றும் சுவர் கட்டும்போது மேசன்மார் தூக்குக் குண்டைப் பயன்படுத்தி செங்குத்துத் தன்மையைப் பேணுவதை நீங் கள் கண்டிருப்பீர்கள். அதே போன்று பச்சைக் களிமண்ணால் செய்யப்பட்ட கல்லறை சுடப் படவோ, காய வைக்கப்படவோ இல்லை. அது மனித எலும்புக் கூட்டை வைத்து எரிக்கும்போது நன்றாகச் சுடப்பட்டது.

கி.மு. 1350 ஆம் ஆண்டிற்குரிய அதேபோன்றதொரு கல்லறையில் எலும்புக் கூட்டை எரிப்பதற்காக உள்ளே வளியோட்டத்தை வழங்கும் வகையில் களிமண் குழாய் பொருத்தப்பட்டிருந்தது. தீ எரிவதற்கு ஒட்சிசன் வாயு தேவை என்பதை நவீன விஞ்ஞானம் 18 ஆம் நூற்றாண்டளவிலேதான் தெளிவுபடுத்தியிருந்தது. ஆனால் சுமார் 3350 வருடங்களுக்கு முன்னரான காலப்பகுதியில் வாழ்ந்த இலங்கை மக்கள் அவ்வறிவைப் பெற்றி ருந்தனர்.

(இக்களிமண் ஓடக் கல்லறை பற்றி இரண்டாம் பாடத்தில் கற்றிருப்பீர்கள்)

### வீடமைப்புத் தொழினுட்பம்

பெல்லன்பதி பெலஸ்ஸ முதலிய திறந்த வெளிப் பிரதேசங்களில் வாழ்ந்த வரலாற்றுக்கு முற்பட்ட கால மனிதன் ஒருவகையான குடிசைகளை அமைத்துக் கொண்டு வாழ்ந்திருப்பான் என்று தொல்பொருளியலாளர்கள் கருதிய போதிலும் அதற்கான ஆதாரங்கள் எதுவும் கிடைக்கவில்லை. ஆயினும் தான் வாழ்ந்த இடத்தை வாழ்வதற்கு ஏற்ற வகையில் மாற்றிக் கொள்வதற்கு வரலாற்றுக்கு முந்திய கால மனிதனால் முடியுமாயிருந்தது என்பதை கித்துள்கல பெலிலென அகழ்வின்போது கிடைத்த கருங்கல் கட்டடமொன்றின் சிதை வுகள் மூலம் அறிய முடிகின்றது. அது இலை குழைகளிலான கூரையொன்றைத் தாங்குவதற்கு ஆதாரமாக அமைந்திருக்கலாம் எனத் தொல் பொருளியலாளர்கள் கருதுகின்றனர்.

இலங்கையின் வீடமைப்புப் பற்றி முன் வரலாற்றுக் காலத்திலேயே தெளிவான சான்றுகள் கிடைத்துள்ளன. கி.மு. 1129 ஆம் ஆண்டளவில் அமைக்கப்பட்ட வீடொன்றின் சிதைவுகளைத் தொல்பொருளியளார்கள் கண்டறிந்துள்ளார்கள். அவ்வீடு இரத்தினபுரி மாவட்டத்தின் உடரஞ்சா மடம எனும் கிராமத்திலேயே அமைந்திருந்தது. நிலத்திற்கு மேலால் கருங்கல் பரப்பப்பட்டு அதன்மேல் களிமண் இட்டு வீட்டுத் தரை அமைக்கப்பட்டிருந்தது. வீட்டின் வரிச்சு சுவர்களுக்கு களிமண் வைத்து எழுப்பப்பட்டு இருந்தது. அதில் மரத்தாலான கதவு நிலை பொருத்தப்பட்டிருந்த துளைகளும் அகழ்வின் போது கண்டறியப்பட்டுள்ளன. இவ்வாறு அத்திவாரமிட்டு அதன் மேல் சுவரெழுப்பி அதன்மேல் கூரையமைத்து நிலையான வீடொன்றை அமைப்பதற்கு தொழினுட்ப அறிவு அவசியமாகும்.

### மட்பாண்டங்கள் தயாரித்தல்

மிகப் புராதன காலந் தொட்டு களிமண்ணால் பாத்திரங்கள் தயாரிக்கும் தொழினுட்பம் எமது நாட்டில் நிலவியது என்பதற்கான ஆதாரம் முன் வரலாற்றுக் காலப்பகுதியிலயே கிடைக்கப் பெற்றுள்ளது. அக்காலத்திலும் வனைதல் சில்லு எனும் எளிய உபகரணம் மட்பாண்டத் தயாரிப்புக்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது. வனைதல் சில்லு என்பது சுழற்றக்கூடிய வட்ட வடிவிலான பலகையிலான ஒன்றாகும். தரமான மட்பாண்டத் தயாரிப்புக்குக் களிமண் சிறப்பாக பதப்படுத்தப்பட வேண்டும். மட்பாண்டத்திற்கான களிமண்ணைத் தெரிவுசெய்தல், அதனைப் பதனிடல், சுடுவதற்கான சூளையை அமைத்தல், உரிய வெப்பநிலையில் பாத்திரங்களை சுட் டெடுத்தல் எனும் பிரயோக ரீதியிலான அறிவு அதற்குத் தேவையானதாகும். முன் வரலாற்றுக் காலத்திற்குரிய ஒரு மட்பாண்டம் வெளியே செந்நிறமாகவும் உட்பகுதி கறுப்பு நிறமாகவும் தயாரிக்கப்பட்டிருந்தது. அவ்வகையான பாத்திரம் கருஞ்சிவப்பு மட்பாண்டம் எனப்பட்டது. களி மண் பாத்திரங்களை சூளையில் வைத்து சுடு வதற்கு முன்னர் பாத்திரத்தினுள் உமியை நிரப்பி சூளையினுள் கவிழ்த்து வைத்து அதன் பின்னர் சுட்டெடுக்கும்போது உள்ளே கருமை நிறமும் வெளியே செந்நிறமும் தோன்றும். பாத்திரத்தில் நிரப்பப்பட்ட உமி எரிவதற்குத் தேவையான ஒட்சிசன் வாயுவைத் தடுப்பதனால் பாத்திரத்தின் உட்பகுதி கருமை நிறம் பெறுகின்றது. இத்தகைய தொழினுட்பம் கி.பி 300 ஆம் ஆண்டின் பின்னர் இலங்கையில் இல்லாமல் போயுள்ளது. அது தவிர மட்பாண்டம் சுடப்பட்ட பின்னர் அதன் மேற்பரப்பில் உருவம் தீட்டுதல், வர்ணமிடுதல் என்பவற்றை மேற்கொள்வதற்கான தொழினுட்பமும் அக்காலப்பகுதியில் காணப் பட்டது. இதற்குச் சிறந்த உதாரணம் உடரஞ்சா மடம புராதன வீட்டில் கண்டெடுக்கப்பட்ட நிறந் தீட்டப்பட்ட மட்பாண்டமாகும். அதில் வெள்ளை நிறப் பின்னணியில் செந்நிறக் கோடுகள் வரையப்பட்டிருந்தன. நிறங்களைத் தயாரிப்பதற்கு தரையில் காணப்படும் செந்நிறக் கற்களே பயன்படுத்தப்பட்டிருந்தன. அப்பாத்திரம் தயாரிக்கப்படுவதற்கு முன்னர் அதற்கான களி மண் தண்ணீரில் கரைக்கப்பட்டு வண்டல் படிமமாக மாற்றப்பட்டது. பின்னர் அச்சுக ளில் வார்க்கப்பட்டே பாத்திரம் உருவாக்கப் பட்டுள்ளது. இது இன்றைய நவீன பீங்கான் கோப்பை உற்பத்தியின்போது பந்துக்களி பயன்படுத்தப்படுவதற்குச் சமமானதாகும்.

புராதன கால இலங்கை மக்கள் அதிகளவில் மட் பாண்டங்களை உபயோகித்த காரணத்தினால் மிகத் தரம் வாய்ந்த வகையில் அவற்றை உற்பத்தி செய்யும் தொழினுட்பம் முன் வரலாற்றுக் காலம் முதல் வளர்ச்சியடைந்துள்ளது.

**செயற்பாடு 1**

''எமது முன்னோரின் விஞ்ஞானத் தொழினுட்பத் தேர்ச்சி'' என்ற தலைப் பில் பத்திரிகை ஒன்றிற்குக் கடிதம் எழுதுக.

## 5.2. விஞ்ஞானப் பிரயோகத்தின் வளர்ச்சி

### 5.2.1. நீர் முகாமைத்துவம்

இலங்கையின் புராதன குடியிருப்புக்கள் உலர் வலயத்திலே பரம்பியிருந்த காரணத்தால் அங்கு வாழ்ந்த மக்கள் எதிர்கொள்ள வேண்டியிருந்த பாரிய சவால் தினசரி வாழ்க்கைக்கும் விவசா யத்துக்கும் தேவையான நீரைச் சேமித்து வைத்த லாகும். குளம், பொய்கை, கால்வாய் என்பன இந்நோக்கிலேயே உருவாக்கப்பட்டன. நீரைச் சேமித்து வைப்பதற்காக மேற்கொள்ளப்பட்ட எந்தவொரு நடவடிக்கைக்கும் பொருத்தமான பெயர் நீர் முகாமைத்துவமாகும். எமது நாட்டில் முன்னர் வாழ்ந்த விஞ்ஞானிகள், பொறியியலாளர்களின் வியக்கத்தகு அறிவின் தன்மையை நீர் முகாமைத்துவத்தில் அவர்களால் மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகளை நுணுகி ஆராய்வதனூடாக அறிந்து கொள்ளலாம்.

#### மகாவாவிகளை (பெருங்குளங்கள்) அமைத்தல்

எமது நாட்டின் வரலாற்றுக் காலத்திற்குரிய சிறந்த நிர்மாணமாக விளங்குவது பாரிய குளங்களை அமைத்தலாகும். விவசாய நடவடிக்கைகளை வெற்றிகரமாக மேற்கொள்ளல், வெள்ளப் பெருக்கை கட்டுப்படுத்தல், நகர மக்களின் நீர்த் தேவையை நிறைவு செய்தல் எனும் பல்வேறு தேவைகளை நிறைவு செய்யும் வகையில் பெருங் குளங்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

பாரிய அளவிலான குளங்களை நிர்மாணிப்பது மிகச் சிக்கலார்ந்த விஞ்ஞான அறிவுடன் கூடிய தொழினுட்பச் செயற்பாடொன்றாகும். அநுராதபுர காலத்தில் நிர்மாணிக்கப்பட்ட பாரிய குளங்கள் சிலவற்றின் பரப்பளவு கீழே தரப்படுகின்றது. அவ்வாறான குளங்களை அமைப்பதற்கும் நீர் நிறைந்த பின்னர் குளங்களை பராமரிப்பதற்கும் உயர்ந்த தொழினுட்ப விஞ்ஞான அறிவு தேவை என்பதை உங்களால் இலகுவாகப் புரிந்து கொள்ள முடியும்.

| | |
|---|---|
| கவுடுளு வாவி | (2537 ஹெக்டெயர்) |
| மின்னேரியா குளம் | (2550 ஹெக்டெயர்) |
| ஹுருளு வாவி | (2125 ஹெக்டெயர்) |
| கலாவாவி | (2125 ஹெக்டெயர்) |
| பதவியாக் குளம் | (2357 ஹெக்டெயர்) |

இவ்வாறான பாரிய குளங்களை அமைக்கும்போது கவனத்திலெடுக்கப்படவேண்டிய பிரதான விடயம் யாதெனில் குளத்தில் சேர்க்கப்பட்ட பாரிய நீர்ப்பரப்பின் அமுக்கத்தை கட்டுப் படுத்தி அதனை நீண்ட காலம் நிலைக்கச் செய்வதும் நீரை விநியோகிக்கும்போது ஏற்படும் அழிவு உண்டாக்கும் அமுக்கத்தைக் கட்டுப் படுத்துவதுமாகும்.

**குளக்கட்டு**

பாரிய நீர்ப்பரப்பைத் தாங்கி நிற்கும் வகையில் குளக்கட்டை சக்தி வாய்ந்ததாக அமைப்பது முதலிடம் பெற்றது. அச்சமயத்தில் நடைமுறையில் முக்கியத்துவம் பெற்ற விடயம் அமைக்கப்பட்ட குளக்கட்டு இடிந்து விழாதிருத்தலாகும். இதற்காக எமது முன்னைய தொழினுட்பவியலாளர்கள் இயற்கையான கற்பாறைகளை அத்திவாரமாகக் கொண்டே குளக்கட்டை அமைத்தனர். அவை ஆற்றுக்கு இரு பக்கமுள்ள இரண்டு எச்சக் குன்றுகள் அல்லது பாறைத் தொடர்களைத் தொடுக்கும் வண்ணம் அமைக்கப்பட்டமையால் அவை மேலும் சக்தி பெற்றது. யோத வாவி எனப் படும் இராட்சதக் குளத்தின் குளக்கட்டின் நீளம் ஏழு மைல்களாகும். உயரம் 44 அடிகளாகும். செயற்கையாக அமைக்கப்பட்ட குளக்கட்டு நீரால் நிரம்பிய பின்னர் அதனைத் தாங்கும் சக்தியை கொண்டிருத்தல் அவசியம் என்பது உங்களுக்குப் புரிந்திருக்கும்.

குளக்கட்டு நீண்ட காலம் நிலைத்திருப் பதற்காகக் குளக்கட்டை அமைக்கும்போது ஒரு வகைத் தொழினுட்பம் பின்பற்றப்பட்டது. அதனை அறிவதற்காக தொல்பொருளியலாளர் களால் சீகிரிய குளக்கட்டு அகழ்வாராய்ச்சிக்கு உட்படுத்தப்பட்டது. அப்போது குளக்கட்டு பல மண் படைகளால் அமைக்கப்பட்டிருந்தமை கண் டறியப்பட்டது. களிமண், மண், சரளை மண், வெண்களி என்பவற்றை ஓர் அடுக்கின் மேல் இன்னோர் அடுக்காக இட்டு, அதனை நன்கு அமுத்தி அணைக்கட்டு ஒன்று அமைக்கப்படும். இப்போது பெருந்தெருக்களை அமைக்கும்போது அவை புதையுறாமல் இருக்க நன்கு அமுத்துவதை நீங்கள் பார்த்திருப்பீர்கள். இன்று அவ்வாறு செய்வதற்கு இயந்திர சாதனங்கள் உள்ளன. ஆனால் அக்காலத்தில் மிருகங்களே இதற்குப் பயன்படுத்தப்பட்டன. ருவன்வெலிசாயவுக்கு அத்திவாரம் இடும்போது நிலத்தை அமுத்துவதற்கு யானைகள் பயன்படுத்தப்பட்டமை பற்றி வரலாற்று மூலாதாரங்கள் குறிப்பிடுகின்றன.

**அலைதாங்கி**

குளம் நீரால் நிரப்பப்பட்டிருக்கும்போது அதன் மேல் மட்டத்தில் அலைகள் உருவாகும். அவ்வாறு ஏற்படுவது நீரின்மேல் காற்று அமுத்தத்தைப் பிரயோகிப்பதனாலாகும். இவ்வாறு வலைகளி னால் ஏற்படும் அமுத்தத்தால் அணைக்கட்டு அரிப்புறுவதைத் தடுப்பதற்காக உருவாக் கப்பட்டுள்ள குளத்தின் உறுப்பே அலைதாங்கி எனக் குறிப்பிடப்படும். அணைக்கட்டின் உட் பகுதிச் சரிவில் கற்களைப் பதிப்பதன் மூலம் அலைதாங்கி அமைக்கப்பட்டது. நீரலைச் சக் தியின் செயற்பாட்டைக் கவனத்தில் கொண்டு அதனைத் தடுப்பதற்கான முறை ஒன்றை உருவாக்கிக் கொள்வதில் எமது முன்னோர்கள் விஞ்ஞான ரீதியாகச் சிந்தித்ததன் பிரதிபலனே இதுவாகும்.

## கலிங்கல் தொட்டியும் மடைக் கதவும்

விசாலமான நிலப்பரப்பில் பாரிய கொள்ளளவு டனான பரந்து விரிந்திருக்கும் குளத்திலிருந்து கால்வாய்க்கு நீரைத் திறந்து விடுவது என்பது கவனமாகக் கையாளப்படவேண்டியதொரு செயலாகும். குளமொன்றில் நீர் நிறையும்போது அதன் பரப்பளவு அதிகரிப்பதைப் போன்று அந்நீரைத் தேக்கி வைத்திருக்கும் குளக்கட்டும்



*உரு 5.3 தற்போதைய மாதுறுஓய நீர்த்தேக்க அணையின் மடைக்கதவை நிர்மாணிக்கும் பொருட்டு வெளிநாட்டுப் பொறியிலாளர் ஆராய்ந்து தெரிவுசெய்த இடம். இந்த இடத்தில் எமது புராதன பொறியியலாளர்களால் பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் மடைக் கதவு அமைக்கப்பட்டது. அவ்வாறான மடைக்கதவின் சிதைவு கண்டுப்பிடிக்கப்பட்ட பின்னரான படமே இதுவாகும்.*

உயரமாகவே அமைந்திருக்கும். அதே வேளை அக்குளத்தின் நீர் மட்டமும் கூடியிருக்கும். நீர் மட்டம் கூடும்போது நீரினால் உண்டாக்கப்படும் அமுக்கமும் அதிகரிக்கும். அவ்வாறு அமுக்கம் கூடிய நீரை வெளியே திறந்துவிடும்போது மிகக் கவனமாக இருக்க வேண்டும். ஏனெனில் அதன் மூலம் பாரிய அழிவுகள் ஏற்படுவதற்கான சந்தர்ப்பங்கள் எந்நேரமும் ஏற்படலாம் என்பதனாலாகும்.

எமது நாட்டின் பண்டைய நீர்ப்பாசனப் பொறியியலாளர்கள் இது பற்றி மிக நன்றாகச் சிந்தித்திருப்பது புலனாகின்றது. பாரிய குளங்களிலிருந்து நீரைத் திறந்துவிடுவதற்கு அவர்களால் ஆக்கப்பட்ட வியூகம் மடைக்கதவு என அழைக்கப்படுகின்றது. விசாலமான கற்பாறைகளைப் பயன்படுத்திக் குறிப்பிடத்தக்க உயரத்தில் மடைக்கதவு அமைக்கப்பட்டிருக்கும்.

பண்டைய கல்வெட்டுக்களில் ''ரஜமொஹால்'' எனும் பெயரால் மடைக்கதவு குறிப்பிடப்பட்டுள்ளது. நான்காம் மகிந்த மன்னனின் வெஸ்ஸகிரிய கல்வெட்டில் மொஹால், நகா எனும் இரு பதங்கள் காணப்படுகின்றன. அதன் அர்த்தம் மடைக்கதவு மூலம் வெளியிடப்படும் நீரைக் கட்டுப்படுத்துவதற்கு கலிங்கல் தொட்டியினுள் கோலொன்று அமைக்கப்பட்டுள்ளது என்பதாகும். குளக்கட்டில் நீர் நிறைந்துள்ள பகுதியில் ஆரம்பித்து குளக்கட்டின் கீழ்ப் பகுதியை துளைத்துச் செல்லும் வகையில் கருங்கற்பாறைகளால் மடைக்கதவு அமைக்கப்பட்டிருக்கும். அதனுடன் நீரைத் திறந்து விடுவதற்கு மடைக்கதவுக்குக்குறுக்காக அமைக்கப்பட்டிருந்த கற்றூண் பயன்படுத்தப்பட்டது. அதனை அங்கும் இங்கும் நகர்த்துவதன் மூலம் தேவையானளவு நீரைக் கால்வாய்க்குத் திறந்துவிட முடியும். இவ்வாறான கற்றூண் ''தண்ணீர் விளக்கு'' எனும் பதத்தால் கல்வெட்டுக்களில் குறிப்பிடப் பட்டுள்ளது.

வெஸ்ஸகிரி கல்வெட்டில் ஓரிடத்தில் ''தண்ணீரைக் கட்டுப்படுத்துவதற்காக மடைக்கதவில் பொருத்தப்பட்டிருந்த கற்றூண் நான்கு முழம் உயரமானது'' என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

பண்டைய மடைக்கதவு கலிங்கல் தொட்டியை ஆதாரமாகக் கொண்டே அமைக்கப்பட்டிருந்தது. அது செவ்வக வடிவிலான கருங்கற்களால் அமைக்கப்பட்டிருக்கும். மேலிருந்து பார்க்கும் போது அது ஒரு தொட்டி போலவே தோற்றமளிக்கும். உயரம் கூடிய பெரிய குளக்கட்டுக்களில் ஒன்றுக்கு மேற்பட்ட மடைக்கதவுகள் அமைக்கப்பட்டிருக்கும். ஏனெனில் குளத்தின் நீர்மட்டம் மாற்றமடையும் வேளைகளில் அம் மட்டத்தின் நீரின் அமுக்கத்தைக் குறைத்து நீரை திறந்து விடுவதற்காகும்.

அவ்வாறு கலிங்கல் தொட்டியின் கீழ் மட்டத்தில் அமைக்கப்பட்டுள்ள மடைக்கதவு ஈரக்கலிங்கல் எனப்படும். இது மழைக்காலத்தில் குளத்தில் சேரும்

சேற்றை வெளியேற்றவும் உதவும். மடைக்கதவை அமைப்பதற்கும் அதனைப் பயன் படுத்துவதற்கும் விஞ்ஞான பூர்வமான அறிவு அவசியமாகும். சிறப்பாக நீரின் செயற்பாட்டு வடிவங்களை அறிந்திருத்தல் வேண்டும். தண்ணீரின் அவ்வா றான பண்புகள் ‘‘ நீரின் தன்மை’’ எனும் சொல்லாக புழக்கத்தில் உள்ளது. எமது நாட்டின் பண்டைய விஞ்ஞானம் எனும் தலைப்பின் கீழ் கலிங்கல் தொட்டி மற்றும் மடைக்கதவு என்பன பற்றி கற்பது மிக முக்கியத்துவம் வாய்ந்தாகும்.

### கால்வாய்

நதிகளை மறித்து அணைகட்டி, நீரைத் தேக்கி, அந்நீரைக் குளங்களுக்குக் கொண்டு செல்லுதல் மிகப் பழங்காலத்திலிருந்தே எமது நாட்டில் இருந்து வந்த தொழினுட்பமாகும். கி.மு. 2ஆம் நூற்றாண்டுக்குரிய கல்வெட்டு ஒன்றில் ‘‘அடிக’’ எனும் பெயரால் குறிப்பிடப்படும் அதிகாரி ஒருவரைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. அவர் கால் வாய்கள் அமைப்பதில் ஈடுபட்ட ஒருவராவார்.

புராதன காலத்தில் அமைக்கப்பட்ட பிரமாண் டமான கால்வாய், மகாவலி கங்கையின் கிளை நதியான அம்பன் கங்கையை மறித்துக் கட்டப் பட்ட எலஹரவாகும். இதன் மூலம் மின்னேரி, கிரிதலை, கவுடுளு, கந்தளாய் குளங்களுக்கு நீர் கொண்டு செல்லப்பட்டது. மினிப்பே பிரதேசத் தில் மகாவலி கங்கையை மறித்து அணை ஒன்றைக் கட்டி பொலன்னறுவை வரை நீரைக் கொண்டு செல்வதற்காக இன்னொரு கால்வாய் வெட்டப்பட்டிருந்தது.

### பொய்கை

விகாரைகளில் வாழ்ந்த பௌத்த பிக்குகளின் பயன்பாட்டிற்காகக் கட்டப்பட்டிருந்த தடாகங் கள், நாட்டில் நிலவிய நீர்த்தொழினுட்பத்திற்குரிய இன்னொரு அங்கமாகும். குட்டம் பொய்கை, தாமரைப் பொய்கை, யானைப் பொய்கை போன்ற நிர்மாணங்கள் இவற்றிற்கு உதாரணங்களாகும்.

### கிணறு

பொதுமக்களின் நீர்ப்பாவனையின்போது நீரின் தரம், குளிர்ச்சி என்பவற்றை பேணிக்கொள் வதற்காக புராதன காலத்தில் எங்களது நாட்டில் குறிப்பிடத்தக்க தொழினுட்பமுறை இருந்து வந்துள்ளது.

முக்கியமாக அநுராதபுரம் போன்ற உலர் வலயப் பிரதேசங்களில் குடிநீரில் அமிலச்சுவை அதிகம். ஆகையால் குடிநீரின் குறிப்பிட்ட தரத்தைப் பேணிக் கொள்வதற்குத் தேவையான தொழினுட்பத்தை உருவாக்கிக் கொள்வதற்கு எத்தனிப்பது இயற்கையாகும். குடிநீரைப் பெற்றுக் கொள்வதற்கான கிணறுகளை வெட்டும்போது முறையான திட்டமுறையொன்றைக் கையாளல் இதற்காகக் கையாளப்பட்ட முறையாகும். பெரிய மட்பாண்டங்கள் பலவற்றை கிணற்றுக்குள் புதைத்து கிணற்றின் சுவரை மூடியுள்ளனர். இவ்வாறு அமைக்கப்பட்டவை ‘‘ ஊராகெட’’ கிணறுகள் எனப்பட்டன. இவ்வாறான பல கிணறுகள் உலர் வலயத்தில் கண்டறியப்பட்டுள் ளன.

### சீகிரியாவின் நீர்ப் பூக்கள்

சீகிரியாவின் மேற்கு நந்தவனத்தில் காணப்படும் சிறப்பானதொரு நிர்மாணமே நீர்ப்பூங்காவாகும். மேற்கு நீர்ப்பூங்காவின் ஊடாக சீகிரிக் குன்று வரையிலான பாதையின் இரு மருங்கிலும் நான்கு நீர்ப்பூக்கள் அமைக்கப்பட்டிருந்தன. இவ்வாறு நான்கு நீர்ப்பூக்கள் அமைக்கப்பட்டமைக்கான காரணம் யாதெனில் அவற்றின் மூலம் அதனை மேலெழும் நீரின் உயரத்தின் அளவுகளில் மாற்றங்களை ஏற்படுத்துவதாகும். இந்த நீர்ப்பூ மரங்கள் அமைக்கப்பட்டிருந்த தொழினுட்பம் மிக எளிமையானதும் செயற்றிறனுடன்கூடியது மாகும். சுமார் 600 அடி உயரத்திலிருந்து வாய்க்கால் ஒன்றின் மூலம் சமவெளியை நோக்கி ஓடும் நீரைத் திடீரெனத் தடுத்துக் கணிசமான அளவு அமுக்கத்தை ஏற்படுத்துவதன் மூலம் நீரை மேலெழச் செய்தலே இங்கு கடைப்பிடிக்கப்பட்ட தொழினுட்பமாகும்.

அவ்வாறு அமுக்கம் ஏற்படும் இடங்களில் வட்ட வடிவிலான துளைகளிடப்பட்ட கருங்கல்லைப் பொருத்துவதன் மூலம் அத்துவாரங்கள் ஊடாக கண்ணைக் கவரும் வண்ணம் தண்ணீர் மேலே பூந்து விசிறும் வகையில் அமைக்கப்பட்டிந்தது. இயற்கையாக உருவாகும் அமுக்கத்தினால் மேலெழும் தண்ணீரின் உயரத்தில் வேறுபாடுகள் ஏற்படும் வகையில் பொருத்தப்பட்டிருந்த கருங்கல் துவாரங்களின் விட்டத்தின் அளவுகளில் மாற்றங்கள் செய்யப்பட்டிருந்தன.

சிறிய விட்டத்தைக் கொண்ட துளையினூடாக மேலெழும் நீர் அதிகளவு உயரத்திற்குச் செல் லும் அதே வேளை பெரிய விட்டம் கொண்ட

துவாரத்தின் மூலம் மேலெழும் நீரின் உயரத்தை அதைவிடக் குறைந்ததாக அமைக்கப்பட்டிருந்தது. சீகிரிக் குன்றின் மேலிருந்து கீழாக நீரோட்டம் செல் லும்போது அதில் சேரும் வண்டல் இயற்கையான ஈர்ப்பு விசை மூலம் கீழ்ப்பகுதியில் படியும் வகையில் நீண்ட தூரத்திற்கு வாய்க்கால்களின் சரிவு குறைவானதாக அமைக்கப்பட்டு நீரின் வேகம் குறைக்கப்பட்டதுடன் வாய்க்கால் சுருள் வடிவில் அமைக்கப்பட்டிருந்தது. அவ்வாய்க்காலின் இடை யிடையே மழைக்காலங்களில் படியும் சேற்றை நீக்கும் வண்ணம் அகற்றக்கூடிய கருங்கற் பாறைத் துண்டங்கள் அமைக்கப்பட்டிருந்தன. அடை மழை பெய்யும் காலங்களில் சீகிரியாவின் நீர்ப் பூக்கள் செயற்படும் அழகை இன்றும் நாம் காணலாம்.

## 5.2.2 கட்டட நிர்மாணக் கலை

புராதன கட்டட நிர்மாணம் சம்பந்தமான பல் வேறு பகுதிகள் அநுராதபுரம், பொலன்னறுவை இராச்சியங்களின் தொல்பொருள்களை ஆராயும் போது எமக்கு கிடைக்கப் பெற்றுள்ளன. அக்காலத் தொழினுட்பவியலாளர்கள் சிறப்பான கட்டட நிர்மாணங்களை மேற்கொள்ளப்பட்டமைக்கான ஆதாரங்கள் அதிகமாகக் கிடைக்கப் பெற்றுள்ளன. அதில் மிகவும் குறிப்பிடத்தகு நிர்மாணங்கள் தொடர்பாகக் கவனம் செலுத்தப்படுகின்றது.

**கட்டடங்கள்**

அநுராதபுரம், பொலன்னறுவைக் காலங்களில் கண்டெடுக்கப்பட்ட கட்டட நிர்மாணக் கலைக் குரிய நிர்மாணங்களைக் கீழ்வருமாறு வகைப் படுத்தலாம். பௌத்த சமயக் கட்டடங்களான தூபி, தூபி மனை, சிலை மனை, விகாரைகள், ஆராமைகள், தானசாலைகள், தியான மண்ட பங்கள், அரச மாளிகை, கோட்டைகள் ,மருத்துவ நிலையங்கள்.

கட்டடங்கள் கட்டுவது மிகப் பண்டைய காலந்தொட்டு இந்நாட்டில் வளர்ச்சியடைந்து வந்ததொரு கலையாகும். அநுராதபுரத்தில் ஜேத்தவனராம, அபயகிரி, ருவன்வெலிசாய



*உரு. 5.3. அநுராதபுரத்தினூடாகப் பாய்ந்து செல்லும் மல்வத்து ஓயாவைக் கடந்து பயணம் செய்வதற்கு பொறியியலாளர்கள் கருங்கற்களால் பாலம் அமைத்தனர். பாலங்கள் அமைப்பதில் அடிப்படைத் தொழினுட்பத்தை அவர்கள் அறிந்திருந்தமை இதிலிருந்து தெளிவாகின்றது. அவ்வாறு அமைக்கப்பட்ட பாலம் ஒன்றின் சிதைவுகள் மேலேயுள்ள படத்தில் காட்டப் பட்டுள்ளது.*

முதலிய விகாரைகளும் லோவமகாபாய (ஆயிரம் கால் மண்டபம்) எனும் பலமாடிக் கட்டடமும் அமைக்கப்பட்டிருந்தன.

இப்பாரிய நிர்மாணங்களை மேற்கொள்வதற்கு வளர்ச்சியடைந்த விஞ்ஞான அறிவும் அவ் வறிவை செயற்படுத்துவதற்கான தொழினுட்பப் பயிற்சியும் அவசியமாகும். உதாரணமாக அதிகளவில் பருவக் காற்று மழைவீழ்ச்சி யைப் பெறும் இலங்கையின் வட மத்திய உலர் வலயத்தின் அநுராதபுர நகரில் அமைந்துள்ள ருவன்வெலிசாய போன்ற உயரமான தூபிகளுக்கு எந்நேரமும் இடி மின்னல் தாக்கம் ஏற்பட இடமுண்டு. ஆயினும் வரலாற்றில் எந்தவொரு இடத்திலும் அவ்விகாரை இடி மின்னலால் தாக்கப்பட்டதற்கான எந்தவொரு தடயமும் பதி வாகவில்லை. அவ்வாறனதொரு இயற்கையின் தாக்கத்தில் இருந்து பாதுகாத்துக் கொள்ளக்கூடிய விஞ்ஞான ரீதியான செயற்பாடொன்று பண்டைய பொறியியலாளர்களால் மேற்கொள்ளப்பட்டு இருந்தமையே அதற்கான காரணமாகும்.

இடி, மின்னல் என்பன எதிரான மின் னேற்றங்களுடன் கூடிய மேகங்கள் ஒன்றிலிருந்து ஒன்றுக்கு மின் கடத்தப்படும்போது நடைபெறும் ஒரு நிகழ்வாகும் என்று பௌதிக விஞ்ஞானம் கூறுகின்றது. அவ்வாறான அதிகளவு மின்ச ாரத்தைக் கொண்ட மின்னல் மின்னைக் கடத்தக்கூடிய உயரமான பொருளொன்றின் மூலம் பூமியை வந்தடையும். அவ்வாறு மின்னல் கடத்தப்படும் பொருளானது எரிந்து அழிந்து விடும். இது பற்றிய மேலதிகத் தகவல்களை விஞ்ஞான பாடத்தின்மூலம் அறிந்து கொள்ள முடியும்.

இடி மின்னலில் இருந்து பாதுகாப்புப் பெறும் பொருட்டு வீடுகளிலும் இடிதாங்கி பொருத்தப்பட்டிருக்கும். ருவன்வெலிசாயவைக் கட்டும் போதும் அதன் உச்சியில் ஓர் இடி தாங்கியைப் பொருத்துவதற்கு அன்றைய பொறியியலாளர்கள் மறக்கவில்லை. வரலாற்று மூலா தாரங்களில் அவ்வுபகரணம் ''வஜ்ரசும்பட்ட'' என்ற பெயரால் குறிப்பிடப்பட்டுள்ளது. ''வஜ்ர'' என்பது மின்னல் அல்லது இயற்கையாய் உருவாகும் மின்சாரம் எனப் பொருள்படும். ''சும்பட்ட'' என்பது காந்தம் எனப் பொருள்படும். காந்தம் என்பது கவரும் தன்மை கொண்டது. எனவே ருவான்வெலிசாயாவின் உச்சியில் பொருத்தப்பட்ட அவ்வுபகரணத்தின் பெயர் மிகப் பொருத்தமானதே. மின்னலில் உற்பத்தியாகும் மின்சாரம் நிலை மின் எனப்படும். அதுபற்றி பௌதிக விஞ்ஞானப் பாடத்தில் கற்பீர்கள்.

### ருவன்வெலிசாயவின் அத்திவாரம்

அநுராதபுரத்தில் அமைந்துள்ள ருவன்வெலி சாய விகாரை துட்டகைமுனு மன்னனால் கட்டப் பட்டதாகும். அக்காலப் பகுதியில் இலங்கையில் அமைக்கப்பட்ட மாபெரும் தூபியாக அது காணப் பட்டது. பண்டைக் காலத்தில் அமைக்கப்பட்ட கட்டடமொன்று பற்றிய நீண்ட விபரங்கள் எழுதப் பட்டிருப்பது ருவன்வெலிசாய விகாரைத் தொடர் பாகவாகும் இவ்விகாரைக்கான அத்திவாரம் அமைக்கப்பட்ட விதம் பற்றி விரிவான விளக்கம் இலக்கிய மூலாதாரங்களில் தெளிவாகக் குறிப் பிடப்பட்டுள்ளன.

அதன்படி அவ்விகாரை கட்டப்படுவதற்கு முன்னர் அதன் தளம் ஏழு முழம் (10.5 அடி) ஆழத்திற்கு அகழப்பட்டது. அதன் பின்னர் அவ்வகழியில் பலம்வாய்ந்த மனிதர்களைக் கொண்டு சுண்ணாம்புக் கற்பாறைகள் இடப்பட்டு



*உரு இல 5.6 சப்ரகமுவ மாகாணத்தின் பல்லேபெத்த கல்பாய எனும் இடத் தில் கண்டுபிடிக்கப்பட்ட புரதான தேவாலயமொன்றின் இடிபாடு. இது நான்கு அடி ஆழத்தில் புதைந்திருந்தது. பால்மடு யாகம எனும் பசு மாடு களைப் பாதுகாப்பதற்கான பூசை நடைபெற்ற இடம். இது கி.பி. 2 ஆம் நூற்றாண்டுக்குரியதாகும்.*



*திட்ட வரைபு 5.1 பொலன்னறுவை ஆலாஹன பிரிவெனாவின் வைத்திய சாலை நில அமைப்புத் திட்ட வரைபடம். இந்த வைத்தியசாலை முதலாம் பராக்கிரமபாகு மன்னனின் காலம் முதற்கொண்டு செயற்பட்டது.*

அவை உடைக்கப்பட்டன. பின்னர் அதில் நீர் ஊற்றி, கடின தோலிலான பாதணிகளை யானைகளுக்கு அணிவித்து அந்த யானைகள் மூலம் அக்கலவை மிதித்து மட்டமாக்கப்பட்டது. அதன் பின்னர் வெண்ணெய்க் களி எனப்படும் களிமண் இடப்பட்டு அது உறுதிப்படுத்தப்பட்டது. அடுத்து அதன்மேல் கருங்கல் படையொன்று இடப்பட்டு அதன்மேல் சரளைக்கற் படையொன்று இடப்பட்டது. அதன் மேல் படிகக்கல் படையொன்றும் இடப்பட்டது. அதன் பின்னர் அப்படையின் மேல் ''நவநீதம்'' எனப்படும் களிமண் பூசப்பட்டது. அடுத்து இரசாயனத் திரவமொன்றின் மூலம் கரைக்கப்பட்ட விளாம்பழச்சாறு பூசிய உலோக வலையொன்று விரிக்கப்பட்டது. அவ்வலையின் மேல் நல்லெண்ணெயில் நனைக்கப்பட்ட 'ரன்சிரியல்' எனப்படும் கற்கள் பரப்பப்பட்டன.

இந்த விபரங்கள் பற்றிக் கவனம் செலுத்துவோமாயின் ருவன்வெலி சாய விகாரையின் அத்திவாரம் நவீன கொங்கிரீட் தொழினுட்பத்திற்குச் சமமான முறையொன்றின் மூலம் அமைக்கப்பட்டுள்ளமை புலனாகின்றது. இவ்வளவு சக்தி வாய்ந்த அத்திபாரமொன்று அமைக்கப்பட்டதன் நோக்கம் அதன் மேல் கட்டியெழுப்பப்படும் செங்கற்களினாலான தூபியின் பாரத்தை நீண்ட காலத்திற்குத் தாங்கி நிற்றல் வேண்டும் என்பதாகும்.

இற்றைக்கு 2200 ஆண்டுகளுக்கு முன்னர் பாரிய கட்டடமொன்றை அமைக்கும்போது எமது பொறியியலாளர்கள் சிந்தித்த விதமும் அதற்குரிய விஞ்ஞான ரீதியிலான சிந்தனையும் மேற்படி உதாரணம் மூலம் தெளிவாகின்றது.

### நகர நிர்மாணமும் பூங்கா அலங்காரமும்

கட்டடக் கலையுடன் பூங்கா அலங்காரம் பற்றியும் எமது பண்டைய சமூகத்தினர் சிறந்த அறிவைப் பெற்றிருந்தனர்.

அதற்கு சிறந்த உதாரணம் சீகிரியா நகர நிர்மாணமும் அங்கு காணப்பட்ட பூங்காக்களும் ஆகும். கி.பி. 5 ஆம் நூற்றாண்டில் கட்டியெழுப்பப்பட்ட சிறந்த நகர நிர்மாணமே சீகிரியாவாகும். மிகப் பெரியதொரு தனிக்குன்றை மையமாகக் கொண்டு அந்நகரம் வடிவமைக்கப்பட்டது. சீகிரியக் குன்று அது அமைந்துள்ள சமவெளியிலிருந்து இருநூறு அடி உயரமானது. அதன் உச்சியில் அரச மாளிகையின் இடிபாடுகள் மூன்று ஹெக்டெயர் பரப்பளவில் காணப்படுகின்றன.



*உரு இல 5.5 பொலன்னறுவை ஆலாஹன பிரிவெனா அகழ்வின் போது கண்டுபிடிக்கப்பட்ட வைத்தியசாலையொன்றின் இடிபாடுகளில் கிடைக்கப்பெற்ற உலோகக் கத்தரிக்கோல்கள் சில. இவை சத்திர சிகிச்சைக் காகப் பயன்படுத்தப்பட்டவையாகும்.*

குன்றை அடிப்படையாகக் கொண்ட கிழக்கு மற்றும் மேற்குப் பிரதேசப் பாதைகள் முறையே நாற்பது ஹெக்டெயர் மற்றும் தொண்ணூறு ஹெக்டெயர் பரப்பளவைக் கொண் டவையாகும். இந்த நகரைச் சுற்றி செங்கல்லினால் அமைக்கப்பட்ட பாதுகாப்பு மதிலின் நீளம் 10 கிலோமீற்றர்களாகும். மேலும் சீகிரியாக் குன்றை சுற்றி அமைக்கப்பட்ட நீர் அகழி எட்டு கிலோ மீற்றர் நீளமானது. இவையனைத்தும் திட்டமிடப் பட்ட கணித முறையிலான அளவீடுகளைக் கொண்டே அமைக்கப்பட்டுள்ளன.

## சுகாதார சேவையும் வைத்திய முறையும்

வைத்தியக்கலை தொடர்பான மிக நீண்ட வரலாறு இலங்கைக்குண்டு. பண்டுகாபய மன்னனின் காலத்தில் அநுராதபுரத்தில் அமைக்கப்பட்டிருந்த பிரசவ விடுதி (சிவிகசால) பற்றி மகாவம்சத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. துட்டகைமுனு மன்னன் பதினெட்டு வைத்தியசாலைகள் அமைத்ததாக வம்சக் கதைகள் கூறுகின்றன. அவற்றில் சேவையாற்றிய வைத்தியர்கள் பற்றிக் கல் வெட்டுக்களில் குறிப்பிடப்பட்டுள்ள விடயங்கள் பற்றி இந்நூலின் முற்பகுதியில் காணப் படுகின்றது. எமது நாட்டை ஆட்சி செய்த சில அர சர்கள் வைத்தியக் கலையை கற்றறிந்தவர்களாகக் காணப்பட்டதுடன் இன்னும் சிலர் வைத்தியக் கலையின் வளர்ச்சிக்கு அனு சரணை வழங்கியவர்களாகக் காணப் பட்டனர்.

1982ஆம் ஆண்டு அது தொடர்பான மிக முக்கியதுவம் வாய்ந்த தொல்பொருள் ஆதாரமொன்று தொல்பொருளாளர் களால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

பொலன்னறுவை ''ஆலாஹண பிரி வெனா'' அமைந்திருந்த நிலத்தில் அகழ்வாராய்ச்சி செய்தபோது அந்த இடத்தில் 147.5 அடி நீளமானதும் 109.2 அடி அகலமானதுமான வைத்திய சாலை கட்டடமொன்றின் இடிபாடுகள் கண்டுபிடிக்கப்பட்டன. அத்துடன் பயன்படுத்தப்பட்ட வைத்தியக் கருவி கள், மருத்துவ ஓடம் என்பனவும் பண்டைய வைத்தியத் துறையின் வளர்ச்சியைப் பறைசாற்றுகின்றன.

வைத்திய நூல்கள், மருத்துவ ஓடம், வைத்தியர் களுக்கென கிராமங்களை ஒதுக்குதல், மூலிகைத் தோட்டங்களை அமைத்தல். தொடர்பாகவும் தெரியவந்துள்ளது. சுகாதாரத் திற்காக மேற்கொள்ளப்பட்ட செயற்பாடுகளும் இதற்குட்படும். இதுவரை கண்டறியப்பட்டுள்ள மலசலகூட தொல்பொருள்களில் வடித்தல் முறையில் கழிவுகளை முகாமை செய்துள்ளமை தெரியவந்துள்ளது. இதற்கு ஓர் உதாரணமாக அரண்மனையில் பயன்படுத்திய மலசல கூடங்களின் கழிவுகள் ஆழமான குழிக்குள் விடப்படுவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட் டுள்ளன. சூழலுக்குத் தீமை பயக்காத வகையில் கழிவுகளை வெளியேற்றுவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தமை தெரியவருகிறது. பொலன் னறுவை சிதைவுகளில் அழுக்கு நீர் ஓடுவதற்காக அமைக்கப்பட்ட சாக்கடைத்தொகுதி கண்டறியப் பட்டுள்ளது.

குளிக்கும் தொட்டிகளிலிருந்தும் விஷேட குழாய் கள் மூலம் அழுக்கு நீரை வெளியேற்றவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. ஆலஹென பிரிவெனா பற்றி சூளவம்சத்தில் கூறப்பட்டுள்ள விடயங்களில் கட்டடத்தின் பரப்பளவுக்கேற்ப மலசலகூடங்கள் நிர்மாணிக்கப்பட்டிருந்ததாகக்

கூறப்பட்டுள்ளது. இதற்கமைய இலங்கையின் கட்டடக் கலையில் கட்டட நிர்மாணங்களும் அவற்றைப் பயன்படுத்துவோரின் தன்மை பற்றியும் கவனத்தைச் செலுத்தியுள்ளோம்.

## இரும்பைப் பிரித்தெடுக்கும் தொழினுட்பம்

மிகப் பண்டைய காலந்தொட்டே எமது மூதாதையர் இரும்புத் தாதிலிருந்து இரும்பைப் பிரித்தெடுக்கும் தொழினுட்பத்தை நன்கறிந் திருந்தனர். ஊவா மாகாணத்தில் பெரகல எனு மிடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட கி.மு. 2400 என கால நிர்ணயம் செய்யப்பட்ட கல்லறை ஒன்றிலிருந்து தொல்பொருளியலாளர்கள் கண்டுபிடித்த ஒரு சிதைவு அக்கால கட்டத்தில் இரும்பை உருக்குவதற்குப் பயன்படுத்தப்பட்ட சூளையின் ஒரு பகுதியாகும். இது இரும்பு உரு வாக்கப்பட்டமைக்கான சிறந்த ஆதாரமாகும்.

புராதன இலங்கையில் இரும்புத்தாதிலிருந்து இரும்பைப் பிரித்தெடுப்பதற்கான தொழினுட்பம் எவ்வாறானது என்பதைப் புரிந்து கொள்வதற்கான இரண்டு வரலாற்றுச் சந்தர்ப்பங்கள் அறியப் பட்டுள்ளன. அதில் முதலாவது சப்ரகமுவ மாகாணத்தின் பலாங்கொடை சமனலவெவ பிரதேசத்தில் கண்டுபிடிக்கப்பட்ட இரும்பை உருக்கும் சூளையாகும்.

இரண்டாவது மத்திய மாகாணத்தின் சீகிரியாவுக்கு அண்மையில் உள்ள அலகொலவெவ தெஹிகஹ அலகந்த எனுமிடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட புராதன இரும்பு உலையாகும். இயற்கையான சூழலில் காணப்படும் இரும்புத்தாதை பிரித் தெடுப்பதற்கு அதனை அதிக வெப்ப நிலையில் சூடாக்குதல் வேண்டும். இரும்பு உருகுவதற்கு 1538$^{0}$ செல்சியஸ் வெப்பநிலை வேண்டும். அந்தளவு வெப்பநிலையைப் பெற்றுக் கொள்வதற்கு மிகச் சிறப்பான தொழினுட்ப அறிவு தேவை. சமனலவெவ எனுமிடத்தில் இரும்பு உருக்கப்பட்ட காலப்பகுதி கி.மு. 3 ஆம் நூற்றாண்டிலாகும். அதற்கான அடுப்பை எரிப்பதற்கு இயற்கையாக வீசும் காற்றே பயன்படுத்தப்பட்டதாக அறியப்படுகின்றது. இந்த இரும்புச் சூளையானது மலை உச்சியில் அமைக்கப்பட்டிருந்தது. மலைகளுக்கிடையில் வேகமாக வீசும் காற்றின் மூலம் அச்சூளை தொடர்ந்தும் பன்னிரண்டு மணித்தியாலங்கள் அணையாது எரிந்துள்ளது. இன்றும் அப்பகுதியில் பருவக்காற்று வீசும் காலப்பகுதியில் அப்பிரதேசத் தில் மாலையில் வீசும் காற்று அடுத்த நாள் காலை வரை தொடர்ந்து வீசுவதைக் காணலாம். இரும்புத்தாது படிந்த கற்களை துண்டுகளாக்கி அதனைக் களிமண்ணாலான அடுப்புகளில் இட்டு அதன் மேல் கரி இட்டு மாலை நேரத்தில் தீ மூட்டப்படும். அடுத்த நாள் அதிகாலை வரை வீசும் காற்று மூலம் அவ்வடுப்பு எரிந்து இரும்பைப் பிரித்தெடுக்கும்.

சமனலவெவ எனுமிடத்தில் இரும்பைப் பெற்றுக்கொள்வதற்காக லிமனைட் மற்றும் ஹெமடைட் எனும் இரசாயனப் பெயர்களைக் கொண்ட கற்களே பயன்படுத்தப்பட்டுள்ளன. இந்த உலையை எரிப்பதற்கு ‘மரங்’ எனப்படும். மரத்தை எரித்துப் பெற்றுக்கொள்ளப்பட்ட கரியே பயன்படுத்தப்பட்டுள்ளது. இன்றும்





*உரு 5.1 இரும்பு உருக்கும் தொழில் நுட்பம் மிகப் பழங்காலந் தொடக்கம் எமது தொழினுட்பவியலாளர்களால் பின்பற்றப்பட்டுள்ளன. இரும்பு உருக்குவதற்கு பயன்படுத்தப்பட்ட பல இரும்பு உலைகள் தொல்பொருளியலாளர்களினால் அடையாளங் காணப்பட்டுள்ளது. சப்ரகமுவ மாகாணத்தில் சமனலவெவ பிரதேசத்தில் கண்டறியப்பட்ட இரும்பு உலை ஒன்றின் படமே இடப்பக்கத்தில் காணப்படுகின்றது. அது இயற்கையாக காற்று சக்தியால் இயக்கப்பட்டுள்ளது. தொல் பொருளியலாளர்களால் புதிதாக அமைக்கப்பட்ட அவ்வாறான இரும்பு உலையே வலப்பக்கப் படத்தில் காணப்படுகின்றது.*

அப்பகுதியில் இம்மரங்கள் வளர்ந்திருப்பதைக் காணமுடிகின்றது. அவை 'யகடமரங்' (இரும்பு மரம்) என்றே அழைக்கப்படுகின்றன.

தெஹிகஹ அலகந்த பகுதியில் இரும்புச்சூளை எரிவதற்கான வளி இன்று கொல்லர் பட்டறையில் பயன்படுத்தப்படும் ஊதுளை எனும் கருவி மூலமே பெற்றுக்கொள்ளப்பட்டது. கி.மு. 180 முதல் கி.பி. 200 வரையிலான காலப்பகுதியில் அங்கு இரும்பு பெற்றுக்கொள்ளப்பட்டுள்ளது.

### சிறு கைத்தொழில்கள்

சிறு கைத்தொழில்கள் என்பதில் பல்வேறு ஆபரணங்களை வடிவமைத்தல், மட்பாண்டக் கைத்தொழில், மாணிக்கம், பட்டறைத் தொழில் என்பன அடங்கும்.

ஆபரணங்களைத் தயாரிக்கும் தொழினுட்பம் பற்றிய நல்லதொரு உதாரணமாக ஜேதவனாராமய அகழ்வின்போது கிடைத்த தங்க ஆபரணத்தைக் குறிப்பிடலாம். அதில் ஒரு நெல்மணி அளவிலான தங்க நகையில் 21 பூக்கள் செதுக்கப்பட்டிருந்தன. அது இன்றைய நவீன நகை உற்பத்தியாளர்களுக்கும் சவாலாகவுள்ளது. அதே போல அபயகிரி அகழ்வில் கண்டறியப்பட்ட நிற ஓடுகள் இந்நாட்டின் மட்பாண்டக் கைத்தொழிலுக்கான சிறந்த உதாரணங்களாகும். பட்டறைக் கைத்தொழிலும் பெரும் முன்னேற்றம் அடைந்திருந்ததை அக்காலக் கட்டத்திற்குரிய பல்வேறு உபகரணங்கள், ஆயுதங்கள், நுண்ணுபகரணங்கள் என்பவற்றிலிருந்து தெரிந்து கொள்ள முடிகின்றது.

## 5.2.3 உள்நாட்டுச் சம்பிரதாயங்கள்

புத்த சமயம் மக்களிடையே பரவியிருந்த போதிலும் விவசாயத் தேவைகளின் பொருட்டு



*உரு 5.7 பல்லே பெத்த கல்பாய எனுமிடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட தேவாலயத்தின் ஆரம்ப நிகழ்வுகளில் இடம்பெற்றதைச் சித்தரிப்பதற்காக வரையப்பட்ட சித்திரம்.*

அக்கால மக்கள் ஏனைய பூசைகளையும் செய்யும் பழக்கமுடையோராக இருந்தனர். பல்வேறு பிரதேசங்களில் வெவ்வேறு தெய்வங்களுக்குப் பூசை செய்தல் அவற்றில் முக்கியமானதாகும். இவை தவிர்ந்த அன்றாடப் பிரச்சினைகளைத் தீர்த்துக் கொள்வதற்கும் சில முறைகளைக் கையாண்டனர். நெய், நல்லெண்ணெய் ஆகியவற்றுள் ஒன்றைக் கொண்டு விளக்கு ஒன்றையோ அல்லது பலவற்றையோ ஏற்றிப் பூசை செய்வது சாதாரணமாக நடைபெற்றது. பயிர்களுக்குக் கிருமிகளால் ஏற்படும் தொல்லைகளை நீக்கவும், மாடுகளுக்கு ஏற்படும் நோய்களைத் தவிர்க்கவும் சில சமய ஆசாரங் களைப் பின்பற்றினர்.

புராதன காலத்தில் நடாத்தப்பட்ட பூசைகள் தொடர்பான முக்கிய தகவல்களை 2009 ஆம் ஆண்டு தொல்பொருளியலாளர்களால் கண்டறியக் கூடியதாக இருந்தது. இரத்தினபுரி மாவட்டத் தில் கல்பான என்ற பிரதேசத்தில் அகழ்வுகளை நடத்தியபோது தொல்பொருளியலாளர்களால் புராதன தேவாலயமொன்றின் சிதைவு கண்டு பிடிக்கப்பட்டது. அங்கு கோள வடிவிலான மட்பாத்திரங்கள் தலைகீழாகக் கவிழ்க்கப்பட்டுக் காணப்பட்டதுடன் அங்கு நெருப்புக் குவியலின் அடையாளங்களும் இருந்தன. நெருப்புக் குவியலின் அருகில் காளையொன்றின் தாடையும் மட்பாத்திரமொன்றின் பகுதிகளும் எஞ்சி இருந்தமையைக் காணக்கூடியதாக இருந்தது. அவை அனைத்தையும் உள்ளடக்குமாறு அமைக்கப்பட்டிருந்த கட்டடத்திற்குரிய தூண் களையும் வெளிக்கொணர தொல்பொருளியலா ளர்களால் முடியுமானதாக இருந்தது. அவ்விடம் சாந்தி பூசை செய்வதற்குப் பயன்படுத்தியமை பின்னர் தெரிய வந்தது. பசுக்களின் பாதுகாப்பின் பொருட்டே சாந்தி பூசை செய்யப்படுகின்றது. இந்தத் தேவாலயம் கி.பி. 3 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது என உறுதிப்படுத்தப்பட்டுள்ளது.

பசுக்களின் பாதுகாப்பின் பொருட்டு சாந்தி பூஜை செய்யும் பழக்கம் சப்ரகமுவ, ஊவா ஆகிய மாகாணங்களில் இன்றும் காணப்படுகின்றது.

## 5.2.4 தேசிய அறிவு

### அளவை முறைகள்

மிகப் பண்டைய காலந்தொட்டு இயற்கைத் தத்து வத்துடன் இணைந்த அடிப்படையை விளக்கி அதற்குரிய அறிவைப் பெற்றதாக இலங்கையின் ஆதி சமூகம் திகழ்ந்துள்ளது. ஒரு சமூகத்தின் விஞ்ஞான அறிவைப் பறைசாற்றுவதற்கான கருவியாக அமைவது இயற்கையின் பௌதிகத் தன்மைகளை அளவிடும் முறையொன்று காணப்படுவதாகும். எமது பண்டைய அளத்தல் முறைகள் இதற்குச் சிறந்த உதாரணமாகும்.

### நில அளவீடு

எமது மூதாதையர் விவசாயத்திற்காக நிலத்தை அளவிட வேண்டிய தேவை இருந்தது. எனவே விவசாய யுகத்தில் அதற்கான அளவை முறைகள் முன்னோர்களால் தயாரிக்கப்பட்டன. கிரிய, அமுண (அவனம்), கரீசை, பேல்ல எனும் தானியங்களின் முகத்தல் அளவை முறைகளே நில அளவீட்டிற்கும் பயன்படுத்தப்பட்டன. அதாவது ஒரு கரீசை வயல் எனும்போது ஒரு கரீசை அளவு விதை நெல்லை விதைக்கக்கூடிய பரப்பளவைக் கொண்ட வயல் நிலமாகும். ஒரு கரீசை என்பது நான்கு அவனத்திற்குச் சமமானது. ஒரு அவனம் நிலம் என்பது இன்று சுமார் இரண்டு ஏக்கரைக் குறிக்கும். இவ்வாறு பெருக்கல் முறையிலான தொடர்பு பேணப்பட்ட அளவை முறைகள் உயர் கணித அறிவைப் பறை சாற்றுகின்றன. இங்கு அவதானிக்கத்தக்க விடயம் யாதெனில் நில அளவைக்காக எமது முன்னோர் பரப்பளவை அளப்பதற்கான அலகுகளைப் பயன்படுத்தியுள்ளமையாகும். இதனைப் பின் வரும் அளவை வாய்ப்பாட்டின் அடிப்படையில் நோக்குவோம்.

| | | |
|---|---|---|
| 40 லாஹ(இலாச்சம்) | = | 1 பேல்ல |
| 12 பேல்ல | = | 1 குறுனி |
| 44 குறுனி | = | 1 அமுண(அவனம்) |
| 01 அமுண (அவனம்) | = | 0.25 கரீசை |

அநுராதபுர மாவட்டத்தில் துனுமடலாகந்த எனும் இடத்தில் கண்டறியப்பட்ட பாதிகாபய மன்னனுக்குரிய கல்வெட்டொன்றில் அப்பகுதி யில் அமைக்கப்பட்ட விகாரை ஒவ்வொன்றிற்கும் ஒவ் வொரு கரீசை அளவில் வழங்கப்பட்ட நிலங்கள் பற்றிய விபரங்கள் உள்ளடங்கியுள்ளன. அநுராதபுர மாவட்டத்தில் ஹொரிவெல எனுமிடத்தில் காணப்பட்ட குட்ட கண்ணஅபய மன்னனுக்குரிய கல்வெட்டொன்றில் அப்பகுதி யில் காணப்பட்ட திஸ்ஸ எனும் விகாரைக்கு எட்டுக் கரீசை நிலம் தானமாக வழங்கப்பட்டதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

நீளத்தை அளப்பதற்கும் பண்டைய காலத்தில் முறையான அளவை முறையொன்று பயன் படுத்தப்பட்டது. அதில் மிகச் சிறிய அலகு பரமாணு எனப்பட்டது. சிறிய தூரத்தை அளப்பதற்கு ஆங்குல மற்றும் வியத் எனும் அலகுகள் பயன்படுத்தப்பட்டன. ஒரு வியத்த என்பது இன்றைய ஒன்பது அங்குலத்திற்குச் சமமானது. கட்டடங்கள் கட்டும்போது சிறிய அளவீட்டு அலகுகள் தேவைப்பட்டன. நீண்ட தூரத்தை அளப்பதற்கு கவ்வ, யொதுன, உக்க எனும் அலகுகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. நிஸ்ஸங்கமல்ல மன்னனின் ஆட்சியில் பிரதான வீதிகளில் கவ்வையிலிருந்து கவ்வைக்கு கற்றூண்களை நடுமாறு அவன் ஆணையிட்டுள்ளான். அது இன்றைய பெருந் தெருக்களில் காணப்படும் கிலோமீற்றர் அளவைக் குறித்த கற்களுக்கு ஒப்பானதாகும். அவ்வாறான கற்றூண்கள் 'காவுத கணு' எனும் பெயரால் குறிப்பிடப்பட்டன. அவ்வாறான இரண்டு கற்றூண்கள் தென் மாகாணத்தின் கட்டுகஹகல்கே மற்றும் வெலிகந்த பிரதே சங்களில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இந்த அளவை முறையானது புராதன காலத்தில் கிழக்கு நாடுகளில் பொதுவாகப் பயன்படுத்தப்பட்டுள் ளதாகத் தெரிகிறது. அவ்வளவை முறைகளில் காணப்படும் கணித பெருக்கல் முறையை பின்வரும் வாய்ப்பாட்டின் மூலம் விளங்கிக் கொள்க.

| | | |
|---|---|---|
| *36 பரமாணு* | = | *01 அணு* |
| *36 அணு* | = | *01 தஜ்ஜாரி* |
| *36 தஜ்ஜாரி* | = | *01 ரத்தரேணு* |
| *36 ரத்தரேணு* | = | *01 லிக்க* |
| *07 லிக்க* | = | *01 உக்க* |
| *07 உக்க* | = | *01 தன்னமாச* |
| *07 தன்னமாச* | = | *01 ஆங்குல* |
| *12 ஆங்குல* | = | *01 வியத்* |

## 5.1.3 நிறையை அளத்தல்

பாரத்தை அளப்பதற்கும் அக்காலத்தில் முறையான அலகுகள் இருந்துள்ளன. சிறப்பாக வியாபார நடவடிக்கைகளின்போது சில வர்த்தகப் பொருள்களின் நிறையைச் சரியாக அளவிடவேண்டிய தேவை இருந்தது. வியாபாரத்தின்போது முறைகேடான வகை அளவை நிறுவைகளைக் குறைப்பது தண்டனைக்குரிய குற்றமாகக் கருதப்பட்டது.

சொரபொர வாவி தூண் கல்வெட்டில் குறிப் பிடப்பட்டுள்ளதன்படி அரசாங்கத்தினால் அனும திக்கப்படாத தராசு, படிக்கல் என்பவற்றால் நிறுப்பது தடை செய்யப்பட்ட நடவடிக்கையாகும்.

பண்டைய இலங்கையில் பாரத்தை அளப்பதற்குப் பயன்படுத்தப்பட்ட அளவை முறைகளின் தன்மையைப் பின்வரும் வாய்ப்பாட்டின் அடிப் படையில் விளங்கலாம்.

| | | |
|---|---|---|
| *4 வீஹ(வீசை)* | = | *01 குஞ்சா* |
| *2 குஞ்சா* | = | *01 மாசக்க* |
| *2.5 மாசக்க* | = | *01 அக்க* |
| *8 அக்க* | = | *01 தரண* |
| *5 தரண* | = | *01 சுவர்ண* |
| *2 சுவர்ண* | = | *01 பல* |

இவ்வாறான அளவை முறைகள் பயன்படுத்தப் பட்டபோது அவற்றைக் குறித்து வைப்பதற்கு இலக்கங்கள் தேவை என்பதை நாம் நன்கறிவோம். இன்று நாம் பயன்படுத்தும் இலக்கங்கள் இந்து அராபியரினால் அறிமுகப்படுத்தியவையாகும். எனவே அவை இந்து அராபிய இலக்கங்கள் எனப்படுகின்றது. ஆயினும் எமது நாட்டுக்குரிய புராதன இலக்க முறையொன்று காணப்பட்டது. 1 முதல் 1000 வரையிலான இலக்கங்கள் பண்டைய கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன. அவ்வாறு எழுதப்பட்டுள்ளவை என்னவென்பது 5.1 அட்ட வணையில் காட்டப்பட்டுள்ளது.

### காலத்தை அளத்தல்

காலத்தைக் கணிப்பிடுதல் விவசாயத்தை அடிப்படையாகக் கொண்டதொரு சமூகத்தின் இன்றியமையாத தேவையொன்றாகும். பயிர் விதைத்தல் மற்றும் அறுவடை செய்தல் என்பன உரிய காலத்தில் நிறைவேற்றப்பட வேண்டி யவையாகும். காலத்தைக் கணித்தல் என்பது மிகக் கவனமாகச் செய்யப்படவேண்டியதொரு பணியாகும். காலத்தைக் கணிப்பதற்கு எமது முன்னோர்கள் பயன்படுத்திய முறைகளை விளங்கிக் கொள்வதற்குப் போதுமான ஆதாரங்கள் மூலாதாரங்களில் காணப்படுகின்றன.

நீண்ட காலத்தைக் கணிப்பதற்கு வருடம் எனும் அளவு பயன்படுத்தப்பட்டது. அது சந்திரக்




*அட்டவணை இல 5.1. இலங்கையின் புரதான கல்வெட்டுக்களில் காணப்படும் இலக்கங்கள்.*

கணக்கை அடிப்படையாகக் கொண்ட மாத அளவை உடையதாகும். அமாவாசையிலிருந்து பௌர்ணமி வரை பதினைந்து நாட்களென்றும் பௌர்ணமி தினத்திலிருந்து அடுத்த அமாவாசை வரை பதினைந்து நாட்களென்றும் அமைந்த முப்பது நாட்கள் ஒரு மாதம் என்றும் கணிப்பிடப்பட்டது. மேற்கூறியவாறு ஒரு மாதத்தின் இரு பகுதிகளும் வளர்பிறை, தேய்பிறை என்று அறியப்பட்டிருந்தன. முப்பது நாட்களைக் கொண்ட மாதங்கள் தை, மாசி, பங்குனி என்று பெயரிடப்பட்டிருந்தன. இது கீழைத் தேசத்திற் குரிய முறையாகும்.

பன்னிரண்டு மாதங்களைக் குறிப்பதற்கு 'வச' எனும் சொல்லும் 'ஹவஜர' எனும் சொல்லும் கல்வெட்டுகளில் பயன்படுத்தப்பட்டுள்ளன. 'வச' எனும் சமஸ்கிருதச் சொல்லின் அர்த்தம் வருடம் என்றும் 'ஹவஜர' எனும் சமஸ்கிருத சொல் ஓராண்டுப் பூர்த்தியையும் குறிக்கின்றது. இன்று வருடத்தைக் குறிப்பதற்கு சிங்களத்தில் பயன்படுத்தப் படும் சொல்லான அவுருது என்பது ஹவஜர எனும் சமஸ்கிருதச் சொல்லி லிருந்து பிறந்ததாகும். நாள் அல்லது தினம் எனும் சொல் புராதன காலத்தில் 'தீதிய' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. குட்டகண்ண அபய எனும் மன்னன் இன்றைய மட்டக்களப்பு மாவட்டத்தின் ராஜகல எனுமிடத்தில் பொறித்துள்ள ஒரு கல்வெட்டில் 'தத' எனும் சொல்லைக் குறிப்பிட்டுள்ளான். அதன் அர்த்தம் 'தீதிய' என்பதாகும். நாளொன்று பல முகூர்த்தங்களைக் கொண்டதாகும்.

சிங்களத்தில் பயன்படுத்தப்படும் 'மொஹத்த' எனும் சிறியளவு நேரத்தைக் குறிப்பதற்குப் பயன்படுத்தப்படும் சொல்லானது முகூர்த்தம் எனும் சொல் லிலிருந்து பிறந்ததாகும்.

அளவை மற்றும் இலக்கம் என்பவற்றைப் பயன்படுத்துவதற்கு விஞ்ஞான பூர்வ மாக சிந்தித்தல் அவசியமானதாகும். உலகில் நிலவுகின்ற பல்கூட்டுப் பண்புகளை அதனூடகப் புரிந்து கொள்வதற்கு எமது மூதாதையர் அவ்வாறு சிந்தித்து செயற்பட்டிருப்பதை மேற்கூறிய விடயங்களின் மூலம் புரிந்து கொள்ளமுடியும். அவ்வாறான அளவை முறைகளை அடிப்படையாகக் கொண்டு பழங்கால இலங்கையரின் விஞ்ஞான ரீதியான அனுபவங்கள் சிலவற்றை இப்பாடத்தின் மூலம் அவதானிப்போம்.



*உரு 5.8 இந்த வெண்கல யானை விளக்கு கேகாலை மாவட்டத்திலுள்ள தெடிகம கொட்ட விகாரையில் கண்டெடுக்கப்பட்டது. யானை உருவத்தின் வயிற்றிலேயே விளக்கிற்குத் தேவையான எண்ணெய் நிரப்பப்படுகிறது.*

### தெடிகம யானை விளக்கு

பராக்கிரமபாகு மன்னன் (கி.பி. 1153 - 1186) பிறந்த இடமாகக் கருதப்படும் புங்ககாம எனும் ஊர் இன்று தெடிகம என்றழைக்கப்படுகிறது. அது கேகாலை மாவட்டத்தைச் சேர்ந்தது. மகா பராக்கிரமபாகு மன்னனின் பிறப்பை நினைவுகூருமுகமாக அங்கு ஒரு தூபி அமைக்கப் பட்டுள்ளது. அது 'தெடிகம சூதிகர சைத்திய' என்றழைக்கப்படுகிறது.

1951ஆம் ஆண்டு அத்தூபி அமைந்திருந்த இடம் அகழ்வாராய்ச்சிக்குட்படுத்தப்பட்டது. அச்சமயம் அவ்விகாரையின் தாதுகர்ப்பத்திலிருந்த வெண்கல விளக்கொன்று கண்டுபிடிக்கப்பட்டது.

அந்தக் குத்துவிளக்கின் மேல் யானை உருவமும் அதன்மேல் அமர்ந்துள்ள இரு மனித உருவங்களும் காணப்படுகின்றன. யானை தனது தும்பிக்கையில் கரும்பு ஒன்றை வைத்துள்ளது. விளக்கு எரிவதற்குத் தேவையான எண்ணெய் யானையின் வயிற்றில் களஞ்சியப் படுத்தப்பட்டிருந்ததுடன் யானையின் பின்னங் கால்களிரெண்டிற்கும் இடையிலிருந்து விளக்கில் எண்ணெய் வற்றித் தீபம் அணையப் போகும் சந்தர்ப்பத்தில் தன்னிச்சையாக யானையின் வயிற்றில் உள்ள எண்ணெய் விளக்கில் வடியுமாறு அமைக்கப்பட்டிருந்தமையானது விஞ்ஞான அடிப்படையிலாகும். அது நீர் நிலையியல் கோட்பாடு எனப்படும். இங்கு எண்ணெய்விடும் நடவடிக்கை தன்னிச்சையாக நடைபெற்றது. பௌதிக விஞ்ஞானத்தின் அடிப்படைப் பண்புகள் பற்றிய அறிவு பண்டைய இலங்கையில் வாழ்ந்த பொறியியலாளர்களிடம் காணப் பட்டமையை அறிந்து கொள்வதற்கு தெடிகம விகாரையில் கிடைத்த இந்த யானை விளக்கு சிறந்த அத்தாட்சியாகும்.

**முக்கிய விடயங்கள்**

1. இயற்கையில் காணப்படுபவனவற்றை விளங்கிக்கொள்ளுதலும் அதற்கமைய செயற்படத் தேவையான வழிவகைகளைக் கட்டியெழுப்புதலும் என்ற கருத்தினை விஞ்ஞானம், தொழினுட்பம் ஆகிய சொற்கள் குறித்து நிற்கின்றன.

2. இடம், காலம், பொருள் என்பனவற்றை அளவிடுவதற்குத் தேவையான அளவீடுகளை எமது புராதன மக்கள் செயற்படுத்தினர்.

3. விஞ்ஞான அடிப்படைகளை செயல் ரீதியாகப் பயன்படுத்தித் தமது வேலைகளை இலகுவாக்கிக் கொள்வதற்கு அவர்கள் முயன்றனர்.

4. மேற்கு நாடுகளில் வளர்ச்சியடைந்த நவீன விஞ்ஞானம் மிகவும் பயனுள்ளதாக விளங்குவது போல கிழக்கு நாடுகளின் மக்களின் விஞ்ஞான செயற்பாடுகளும் பயனுள்ளவையாகும். உதாரணமாக சீனாவில் நிலவிய பண்டைய விஞ் ஞானக் கருத்துக்கள் முழு உலகிலும் தாக்கத்தை ஏற்படுத்தியது. இலங்கை யில் அமைக்கப்பட்டிருந்த கலிங்கல் தொட்டியின் தொழினுட்பம் தெற்கு ஆசியாவிலும் பரவியது.

5. எமது கிராம மக்களிடையே நிலவும் சமய ஆசாரங்கள், பழக்க வழக்கங்கள் என்பன தமது வாழ்வில் ஏற்படும் பிரச்சி னைகளுக்குத் தீர்வுகாணும் பொருட்டு அவர்களால் உருவாக்கப்பட்ட மற்று மொரு அறிவுத் தொகுதியாகும்.

**செயற்பாடு 02**

1. எமது முன்னோரின் விஞ்ஞான அறிவும் தொழினுட்பத்திறமையும் என்ற தலைப் பில் கட்டுரை ஒன்று எழுதுக.

2. முன் வரலாற்றுக் காலத்தில் பயன்பாட்டி லிருந்த விஞ்ஞானம் தொழினுட்பம் என்பவற்றில் உள்நாட்டுத் தனித்துவம் வெளிப்படும் சந்தர்ப்பங்களை உதாரணங் களுடன் தெளிவுப்படுத்துக.

***சீகிரிய நீர்ப்பூங்கா :***

*சீகிரிய மலைக்குன்றின் மேற்கே உள்ள சிதைவுகள் நீர்ப் பூங்காவிற்குரியதாகும். சமாந்தர திட்டமிடலுக்கு ஏற்ப அமைக்கப்பட்டுள்ள பூங்காவின் ஒரு பக்கத்தில் காணப்படும் அம்சங்கள் எதிர்ப்பக்கத்திலும் அமைக்கப்பட்டுள்ளன. இப்பூங்காவின் மேற்கு அந்தத்தில் அமைக்கப்பட்டுள்ள பகுதியே நீர்ப் பூங்காவாகும். சீகிரிய நந்தவனத்தின் மேற்குத் திசை முழுமையாகவும் நீர்ப்பூங்கா எனப்படுவதற்கான காரணம் அங்கு நீர்த் தடாகங்கள், நீர்க் கால்வாய்கள், கண்கவர் நீர்ப்பூக்கள் என்பன அமைக்கப் பட்டிருந்தமையாகும்.*

***பால்மடு யாகம் :***

*மாடுகளின் பாதுகாப்பிற்காகவும் விவசாய நடவடிக் கைகளின் வெற்றிக்காகவும் மேற்கொள்ளப்பட்ட தொரு சாந்திப் பூசையாகும். இந்த யாகம் ''மங்கர'' எனும் உள்நாட்டுத் தெய்வத்தை முன்னிலைப்படுத்தி செய்யப்பட்டதாகும். இந்த சாந்தி பூசை சப்ரகமுவ பகுதிக்குரியதாகும்.*

***தண்ணீர் விளக்கு :***

*புராதன குளங்களில் நீரை விநியோகிப்பதற்காக அமைக்கப்பட்டிருந்த கலிங்கல் தொட்டியுடன் தொடர்பான கருங்கல்லிலான தூண் இதுவாகும். இத்தூணை அசைப்பதன் மூலம் கலிங்கல் தொட்டியிலுள்ள தண்ணீர் கால்வாய்க்கு விடப்பட்டது. சில பாரிய குளங்களின் கலிங்கல் தொட்டிகளில் அவ்வாறான பல கற்றூண்கள் பயன்படுத்தப்பட்டதாக கல்வெட்டுக்களில் காணப் படுகின்றன.*

# 6 வரலாற்று அறிவும் அதன் நடைமுறைப் பிரயோகமும்

**அறிமுகம்**

எந்தவொரு சமுதாயமும் சமநிலையாக அமைவது அறிவை மையமாகக் கொண்டாகும். இங்கு அறிவானது அந்த சமுதாயத்திற்குரிய இயற்கைச் சூழலுக்கும் அதனோடு இணைந்து வாழும்போது தோன்றும் பண்பாட்டிற்கும் ஏற்றதாகக் கட்டியெழுப்பப்படும். இதனால் உலகில் காணப்படும் சமுதாயங்களில் ஒன்றுக்கொன்று வேறுபட்ட அறிவுத் தொகுதியைக் காணக்கூடியதாய் உள்ளது. அனைத்து அறிவுத் தொகுதியும் சமுதாயத்தின் பயன்தரக்கூடிய செயற்றிறமையையும் நிலையான அபிவிருத்தியையும் உறுதிசெய்யும். எந்த ஒரு சமுதாயத்தாலும் ஏற்படுத்தப்பட்ட அறிவு தொடர்பான சீரான அமைப்பில் பல்வேறுபட்ட பிரிவுகள் இருக்கலாம். தமது சமுதாயத்தை ஒழுங்குபடுத்திக்கொள்ளத் தேவையான கணிப்பீடு, பொருளாதாரப் பரிமாற்றம் என்பன முறையாகச் செயற்படத் தேவையான நடைமுறைப் படிமுறை, நம்பிக்கை என்பன அவற்றில் சிலவாகும். வரலாற்றில் பண்பாட்டு உரிமை எனப்படுவது அதுவாகும். இலங்கை வரலாற்றில் பண்பாட்டுக்கு உரித்தான தெரிவுசெய்யப்பட்ட ஆறு எண்ணக் கருக்கள் தொடர்பாக மாணவரின் உணர்வு பூர்வமான மனநிலையை ஏற்படுத்தி வரலாறு தொடர்பான முழுமையான அறிவுள்ள பிரசையை உருவாக்கும் நோக்குடன் இப்பாடம் தயாரிக்கப்பட்டுள்ளது. இலங்கையின் பழைய சமூக ஒழுங்கமைப்பு, சட்டமும் பாரம்பரியங்களும், பணமும் செலாவணியும், பெண்களின் பங்களிப்பு, சூழல் பாதுகாப்பு, சுதேச உணவு என்பனவே அவையாகும்.

## 6.1.வரலாற்றுக் கால சமுதாய அமைப்பு.

சமுதாய அமைப்பு (Social organisation)என்பது ஒரு சமுதாயம் நிலையானதாகச் செயற்படுவதற்கு அந்த சமுதாயத்தில் வாழும் நபர்களுக்கும் குழுக்களுக்கும் இடையில் நிலவும் தொடர்பின் தன்மையாகும். அது ஒரு சமூக விஞ்ஞான எண்ணக்கருவாகும்.

எந்த ஒரு செயலினதும் வெற்றி அதன் ஒழுங்கமைப்பிலேயே தங்கியுள்ளது. சமுதாயம் என்பதும் அவ்வாறேயாகும். சமூக அமைப்பு நிலையற்றதாகும்போது அதில் நிலவும் சட்டம், ஒழுக்கவியல், சம்பிரதாயக் கணிப்பீடு என்பன அழிவுறும். அப்போது சமுதாயம் அமைதியை இழக்கத் தொடங்கும்.

வரலாற்றுக் காலத்தில் இலங்கையை ஆட்சி செய்த அறிவும் செயற்றிறனுமுடைய ஆட்சியாளர்கள் எமது நாட்டின் சமுதாயத்தை சிறப்பாக அமைக்க அர்ப்பணிப்புடன் செயலாற்றினர். சமூக அமைப்பொன்றில்காணப்படும்முக்கியஇயல்பாக அமைவது தனிநபர் தொடர்பு முறைமைகளில் ஒழுங்கு காணப்படுவதனாலாகும். இது பதவி நாமங்கள் எனப்படும். சமூகமொன்றினுள் சமூகப் பதவிகள் உண்டு. அது மேலிருந்து கீழ் வரை அதிகாரம் படிப்படியே வரும் சிறு கட்டமைப்பானதால் அது நிலைக்குத்தான கட்டமைப்பு எனப்படும். அரசன், அமைச்சர்கள், வேறு அரச அலுவலர்கள் என்று மேலிருந்து கீழ் நோக்கி வரிசைப்படி வருதல் இதற்கு எடுத்துக் காட்டாகும்.

சமாந்தரமான அதிகாரமுடைய கட்டமைப்புகளும் சமுதாயத்தில் உண்டு. பல நிறுவனங்களில் உயர் அதிகாரிகள் ஒரே தரத்தில் உள்ளவர்களாக இருப்பதுண்டு. அவ்வாறான அமைப்பு கிடையான கட்டமைப்பு எனப்படும். அமைச்சர், சேனாதிபதிகள், பொருளாளர் என்போர் அவ்வாறான சம அதிகாரமுடையோராவர். பண்டைக்காலத்தில் இலங்கையில் நிலவிய சமுதாய அமைப்பைத் தெளிவுபடுத்தும் முகமாகக் கீழே குறிப்பிடப்படும் வரைபடம் 6.1 இன் குறிப்பைப் பயன்படுத்தவும்.

இந்தச் சமூக அமைப்பில் உச்ச நிலையில் உள்ளவன் அரசன். இவன் நற்குணமுடையவனாக இருக்க வேண்டும் என்பதும் அரச மரபைச் சேர்ந்தவனாக இருக்க வேண்டும் என்றும் எதிர்பார்க்கப்பட்டது. இதனால் அரசன் மேன்மையானவன். அவன் குடிமக்களுக்குத் தெய்வமாக விளங்க வேண்டியவன் எனத் தம்புளை விகாரையிலுள்ள கூட கண்ணதீசனின் கல்வெட்டொன்றில் பொறிக்கப்பட்டுள்ளது.




*வரைபடம் 6.1 வரலாற்றுக் காலத்தில் இலங்கையில் நிலவிய சமூக அமைப்பைக் காட்டும் விளக்கப்படம். (பேராசிரியர் சேனக்க பண்டார நாயக்க 2013 ஆம் ஆண்டு எழுதிய கட்டுரையிலிருந்து எடுக்கப்பட்டது.)*

அரசனுக்கு நெருங்கிச் செயற்பட்டோர் அரசாங்க அதிகாரிகளாவர். ஒன்பதாம் நூற்றாண்டில் எழுதப் பட்ட கல்வெட்டுக்களில் இந்த அதிகாரிகள் ''ரத்கொல் சம்தரு'' என்று அழைக்கப்பட்டனர். அரச குலத்தவர் என்பது இதன் பொருளாகும். கண்டி இராச்சியக் காலத்தில் ''ரதல'' என்ற சொல் இதிலிருந்தே வந்ததாகக் கருதப்படுகிறது. (ராஜகுல › ரத்கொல் › ரதொல் › ரதல)பௌத்த பிக்குமார் அரசனுக்கு ஆலோசனை வழங்கி சமுதாயத்தில் மேலிடத்தில் இருந்தனர். சில சந்தர்ப்பங்களில் அவர்கள்நாட்டின்நிருவாகத்திலும்உதவினர். கி. பி. 1 ஆம், 2 ஆம் நூற்றாண்டுகளில் குளங்களிலிருந்து பெறப்பட்ட வரியை அறவிடும் பொறுப்பினை அரசர்கள் விகாரைகளிடம் ஒப்படைத்தனர். செல் வந்த வர்த்தகர்கள், கப்பல் துறையில் ஈடுபட்ட கப்பித்தான்கள், வைத்தியர்கள், ஆசிரியர்கள், என்போர் நீண்ட காலத்திலிருந்தே சமுதாயத்தில் முக்கியமானவர்களாகக் கருதப்பட்டனர்.

இவர்கள் விவசாயத்திலோ, மந்தை வளர்ப்பிலோ ஈடுபடவில்லை. இவர்களுக்கு அடுத்ததாக நாட்டின் சாதாரண மக்கள் இருந்தனர். கல்வெட்டுக்களில் அவர்கள் குடிகள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளனர். விவசாயிகள், இடையர்கள், குயவர்கள், இரத்தினக் கல் வெட்டுவோர், கொல்லர்கள், மீனவர்கள், ஏனைய தொழில் செய்வோர் ஆகியோர் இதில்



*உரு 6.1 இலங்கையின் பண்டைய அரசர்கள் தாம் விகாரைகளுக்கு வழங்கிய கொடைகள், நாட்டில் தாம் இயற்றிய சட்டங்கள் என்பவற்றைக் கற்களில் பொறிப்பதற்கான நடவடிக்கைகளை மேற்கொண்டனர். இந்த பொறிப்புகள் நீண்ட காலம் நிலைத்திருக்க வேண்டுமென்பதே இதன் மூலம் கருதப்பட்டது.*

அடங்குவர். இவர்களிடையே இருந்த விவசாயிகள் மூலமே முழு சமுதாயமும் உணவினைப் பெற்றது.

சாதாரண மக்களுக்கும் உயர்குடி மக்களுக்கும் இடையே தொடர்பினை ஏற்படுத்துவோராக இருந்தவர்கள் சாதாரண வர்த்தகர்களும் அரச அலுவலர்களுமாவர். இடையிடையே கிராமங் களுக்கு வந்த சாதாரண அரச அலுவலர்கள் பற்றிக் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்பட்டுள்ளன, அவ் வாறு அவர்கள் வரும்போது கிராம மக்கள் தமது குறைகளை அவர்களிடம் கூறியதுடன் அவர்கள் அதனை மேல்மட்ட அலுவலர்கள் மூலம் அரச னுக்கு அறிவித்தனர்.

சமுதாயத்தில் கீழ்மட்டத்தில் இருந்தோர் அடிமை களாவர். பல்வேறு வேலைகளில் அவர்கள் ஈடுபட்டனர். சமுதாயத்தில் ஏனையோருக்கு இருந்த சுதந்திரம் அவர்களுக்கு இருக்கவில்லை. இரண்டு விதமான அடிமைகள் அக்காலத்தில் இருந்தனர். பரம்பரையாக அடிமைகளாக இருந் தோர் ஒரு பிரிவினர். மற்றைய பிரிவினர் கூலிக்குப் பெறக்கூடிய அடிமைகள் ஆவர். தனக்கீத்ததாச என அவர்கள் அழைக்கப்பட்டனர்.

சமுதாய அமைப்பிலிருந்த பிரிவுகளுக்கிடையே நல்லுறவை ஏற்படுத்தலும் அனைவரதும் பாதுகாப்புக்கு வழி வகுத்தலும் அரசனால் மேற்கொள்ளப்பட்டன. நிறுவனங்களுக்கிடையி லான உறவினைப் பாதுகாப்பதன் மூலம் சமுதாயம் வீழ்ச்சியடையாதிருக்கும் முறையை எமது நாட்டின் ஆட்சியாளர்கள் அறிந்திருந்தனர். இந்த எண்ணக்கரு சமூக ஒருங்கிணைப்பு (Social cohension) எனப்படும். இதனால் நல்லாட்சி செய்ய அவர்கள் முயன்றனர்.

## 6.2. சட்டமும் பாரம்பரியங்களும்

சமுதாயம் நல்ல முறையில் செயற்படுவதற்கு சமுதாயத்தால் அனுமதிக்கப்பட்ட பொதுவான விதிமுறைகள் மிக முக்கியமாகும். சட்டமாக அமைவது இவ்வாறு ஏற்றுக்கொள்ளப்பட்ட விதிமுறைகளாகும். இந்த விதிமுறைகள் இரு வகைப்படும். அவைகளில் சில எழுத்து வடிவம் பெற்றவை. ஏனையவை சமுதாயத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்ட மரபாகும்.

சமுதாயத்தின் நன்மை கருதி சமூக விரோத செயல்கள் சட்டத்தின் மூலமும் மரபு ரீதியாகவும் கட்டுப்படுத்தப்பட்டன. சமுதாயத்தின் நன்மை கருதி பழங்காலந் தொடக்கம் எமது ஆட்சியாளர்கள் சட்டத்திற்கும் மரபுகளுக்கும் அமைய செயலாற் றினர். சட்டமியற்றுதல், சட்டத்தைச் செயற் படுத்துதல் என்பவற்றின்போது எமது அரசர்கள் தெளிவாகக் கருமமாற்றினர்.

கி.பி. 9 ஆம் நூற்றாண்டில் மானவர்மன் என்ற அரச பரம்பரையைச் சேர்ந்த புகழ்பெற்ற அரசர்கள் இலங்கையை ஆட்சி செய்தனர். அம்மன்னர்களது கல்வெட்டுக்களில் அக்காலத்தில் நிலவிய சட்டம், சட்டம் தொடர்பான நிறுவனங்கள் என்பன பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளன. அக்கல்வெட்டுக் களில் ''வதால'' மற்றும் ''சபாவ'' எனும் இரண்டு சொற்பதங்கள் பிரயோகிக்கப்பட்டுள்ளன. சட்ட நடவடிக்கையொன்றின்போது ''வதால'', ''சபாவ'' என்ற இரு பிரிவிலிருந்து வந்த அதிகாரிகள் கலந்து கொண்டதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கு வதால என்ற சொல்லின் கருத்து சட்டத் துறையாகும். நாட்டுக்குத் தேவையான சட்டங் களை இயற்றியது சட்டத்துறையாகும். இது இன் றைய பாராளுமன்றத்தைப் போன்றது. புராதன காலத்தில் அது அரச சபை எனப்பட்டது. அந்தக் கல்வெட்டுக்களில் சபா எனக் குறிப்பிடப்பட் டுள்ளதன் கருத்து நீதிமன்றமாகும். நாட்டின் சட் டங்களை செயற்படுத்துவது நீதிமன்றமாகும். நாட்டின் சட்டங்களை செயற்படுத்துவது நீதி மன்றங்கள் புராதன காலத்தில் எமது நாட்டில் முறையான நீதி மன்றங்கள் இருந்தமை கல்வெட் டுக்களின் மூலம் உறுதிசெய்யப்பட்டுள்ளது.

மக்களிடையே சட்டம் செயற்படுத்தப்படுவது பாதுகாப்பு அதிகாரிகள் மூலமாகும். அவர்கள் நிறைவேற்றுனரின் அதிகாரத்தையே செயற் படுத்துகின்றனர். கி.பி. 9 ஆம் நூற்றாண்டு கல்வெட்டுக்களில் மெய்க்காப்பாளர் எனக் குறிப்பிடப்படுவது இவ்வாறான அதிகாரிகளை யேயாகும். அது தமிழ் மொழியில் மெய்காப்பாளர் என்ற சொல்லிலிருந்து வந்ததாகும். அதன் கருத்து பாதுகாப்பு அதிகாரி என்பதாகும்.

அந்த அதிகாரிகளைக் குறிப்பதற்குத் தண்டநாயக எனும் சொல்லும் பயன்படுத்தப்பட்டது. முதலாம் விஜயபாகுவுக்குப் பகைவர்களால் துன்பம் ஏற் பட்டபோது சித்தாரும்பி புத்தநாயக்க என்ற பெயரையுடைய தண்டநாயக்கவே உதவியதாக விஜயபாகுவால் எழுதப்பட்ட பனாக்கடுவ செப் பேட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. எமது நாட்டு வரலாற்றில் பழைய காலத்தைச் சேர்ந்த சட்டங்கள் எவ்வாறாக இருந்தன என்பதனை விபரமாக அறியக்கூடிய சாட்சிகள் குறைவாக இருந்தபோதி லும் அவற்றின் தன்மையை அறிந்து கொள்ளப் பழைய கல்வெட்டுக்கள் ஓரளவு உதவுகின்றன. இவற்றில் கி.பி. 1 ஆம், 2 ஆம் நூற்றாண்டுகளில் எழுதப்பட்ட கல்வெட்டுக்களில் குளங்களின் பரிபாலனம், அரச நிலங்களைப் பயன்படுத்துவது தொடர்பாக வரி அறவிடுதல் என்பன பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளன. உற்பத்தியில் ஆறில் ஒரு பங்கு வரியாகச் செலுத்தப்பட்டது.

**வரிச் சட்டத்தின் மூலம் அறவிடப்பட்ட முக்கிய வரிகளாவன;**

- **தக்கபதி**
  குளங்களிலிருந்து நீரைப் பயன்படுத்துவோரி டம் இருந்து அறவிடப்பட்ட வரி.

- **போஜக்கபதி**
  அரசனுக்குச் சொந்தமான நிலங்களில் பயிர் செய்வதற்காகச் செலுத்தப்பட்ட வரி.

- **மதரமஞ்சக்க**
  வாய்க்கால்களில் மீன் பிடித்ததற்காக அரசுக் குச் செலுத்திய வரி.

சில சந்தர்ப்பங்களில் அரசாங்கம் பொருளாக வரியைப் பெற்றது. அறுவடையாகக் கிடைக்கும் பத்துக் காய்களுக்கு ஒரு காய் வரியாக செலுத்தப்பட வேண்டுமென 9 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறது. விவசாயம் தவிர்ந்த ஏனைய சிலவற்றிற்கும் வரிச்சட்டம் செயற்படுத்தப்பட்டது. வெளிநாடுகளிலிருந்து பொருள்களை இறக்குமதி செய்யும்போது துறை முகங்களில் சுங்கவரி அறவிடப்பட்டது.

அம்பாந்தோட்டை மாவட்டத்திலுள்ள அம்பலந் தோட்ட கொடவாயவில் உள்ள பழைய பௌத்த விகாரையொன்றில் காணப்படும் கி.பி. 1 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டொன்றில் அவ் விகாரைக்கு அண்மையிலுள்ள துறைமுகத்தினால் அறவிடப்பட்ட சுங்கவரி, அந்த விகாரைக்குக் கொடுக்கப்பட்டதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.



*உரு 6.2. இலங்கையில் பயன்படுத்தப்பட்ட பழைய நாணயம் ஹஸ்ஸ்பு எனப்படும். அது இந்தியாவில் செய்யப்பட்டது. அவை வர்த்தகர்களால் இலங்கைக்குக் கொண்டுவரப்பட்டன.*

இவ்வாறு அமுல்செய்யப்பட்ட வரிச்சட்டங்களை மீறுவோருக்கு மட்டுமின்றி, சமுதாயத்தின் நீதியைப் பாதுகாக்க நடைமுறைப்படுத்தப் பட்ட சட்டங்களை மீறுவோருக்கு தண்டனை விதிக்கவும் அக்காலத்தில் நீதிமன்றத் தொகுதிகள் செயற்பட்டன. அவ்வாறான நீதி மன்றம் பற்றி முதலாம் கஜபாகு மன்னனால் சித்துல்பவ்வயில் உள்ள கல்வெட்டொன்றில் குறிப்பிடப்பட்டுள்ளது. அப்பிரதேசத்தில் இருந்த தீர்ப்பு மண்டபத்திலிருந்து பெறப்பட்ட அபராதப் பணம் மன்னனால் சித்துல்பவ்வ விகாரையில் வாழ்ந்த பௌத்த பிக்குகளின் தேவையின் பொருட்டு வழங்கப்பட்டதாக அந்தக் கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளது.

சுற்றாடலைப் பாதுகாக்கவும் அரசர்கள் நடவடிக்கை எடுத்தனர். இயற்கையில் காணப்படும் உயிரினங்கள், மரஞ்செடிகள், நீர், மண் என்பவற்றைப் பாதுகாக்கச் சட்டங்களை அமுல் செய்ய அவர்கள் முன்வந்தனர். உரிய காலத்தில் உழவு செய்யத் தவறும் நபர்களுக்கு ஐந்து கலங் அபராதமாகச் செலுத்துமாறு கூறப்பட்டமை தொடர்பான சட்டமொன்று கி.பி. 9 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கொண்ட வட்டவான் தூண் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. மழை காலத்தில் உழவு செய்வதன் மூலம் மண் அரிப்பு ஏற்படுவதால் இந்தச் சட்டம் அமுல்செய்யப் பட்டது. விவசாயத்தை ஒழுங்காக முன்னெடுத்துச் செல்லும் பொருட்டு ஆட்சியாளர்களால் பல சட்டங்கள் பிறப்பிக்கப்பட்டன. அநுராத புரத்தில் வெஸ்ஸகிரியில் உள்ள கல்வெட் டொன்றில் இவ்வாறான சட்டமொன்று பொறிக் கப்பட்டுள்ளது. குளங்களிலிருந்து நீர் பெறப்படும் வயல்களில் நெல் தவிர, பாசிப் பயறு விதைத்தல் ஆகாது என அதில் குறிப்பிடப்பட்டுள்ளது. இக்கல்வெட்டு நான்காம் மகிந்தனின் காலத்தைச் சேர்ந்தது.

பண்டைய சமுதாயத்தில் நிலவிய முக்கிய தொழில்களில் வர்த்தகமும் ஒன்றாகும். உள் நாட்டு வர்த்தகம் ஒழுங்காக நடைபெற அக்கால மன்னர்கள் சட்டங்கள் இயற்றினர். கி.பி. 9 ஆம் நூற்றாண்டில் நிலவிய அவ்வாறான சட்டங்கள் எவ்வாறானவை என்பதனை அறிய எமக்கு உதவுவது பதுளைக் கல்வெட்டாகும். இது சொரபொரவெவத் தூண் கல்வெட்டு என்றும் அழைக்கப்படுகிறது. இது நான்காம் உதய மன்னனால் அமைக்கப்பட்டதாகும். (கி.பி.946 - 954) மன்னன் மகியங்கனை விகாரைக்குச் செல்லும் சந்தர்ப்பத்தில் ஹோபிட்டிகமுவ என்ற இடத்தில் இருந்த அரசாங்க வர்த்தக நிலையத்திற்கு வந்து அங்கு நடைபெற்ற சில பொருத்தமற்ற செயற் பாடுகளைத் தடுத்து விதித்த சட்டங்கள் அந்தக் கல்வெட்டில் விபரிக்கப்பட்டுள்ளன. அவற்றில் சில பின்வருவனவாகும்.



*உரு 6.3. யானை, சுவஸ்திக்கா எனப்படும் இந்த நாணயங்கள் பழைய காலத்தில் இலங்கையில் பயன்படுத்தப்பட்டன.*

- ஹோப்பிட்டிகம வர்த்தக நிலையத்தின் எல்லையில் வியாபாரம் செய்வோரிடம் மாத்திரம் வரி அறவிடப்பட வேண்டும். வர்த்தக நிலையத்தைக் கடந்து செல்வோரிடமிருந்து வரி அறவிடக்கூடாது.
- அதிகாரிகளிடம் காண்பிக்காது வர்த்தக நிலையங்களில் பொருள்கள் விற்போரிடமிருந்து இரு மடங்கு வரி அறவிடுதல் வேண்டும்.
- அரச அதிகாரிகளால் அளவு குறிக்கப்படாத தராசுகள் கொண்டு வியாபாரம் செய்தல் ஆகாது.
- வெற்றிலை, பாக்கு என்பன விற்கும் பொருட்டு அதற்கென ஒதுக்கப்பட்ட இடங்களில் மாத்திரம் வியாபாரம் செய்தல் வேண்டும்.
- போயா தினங்களில் (நோன்மதி) வியாபாரம் செய்வோரிடமிருந்து தண்டப் பணமாக எண்ணெய் வரி அறவிட வேண்டும்.

சொரபொரத் தூண் கல்வெட்டில் விதிக்கப்பட்டுள்ள சட்டதிட்டங்கள் பற்றி விளங்கிக் கொள்வதன் மூலம், அந்தத் தூண் கல்வெட்டு அமைக்கப்பட்ட காலப்பகுதியில் இந்நாட்டில் வர்த்தகம் தொடர்பாக நிலவிய உள்நாட்டு சட்டங்களின் தன்மையை அறியக்கூடியதாக உள்ளது.

மிருகங்களை எவரும் கொல்லக் கூடாதென முதன் முதல் சட்டம் இயற்றியவன் ஆமண்ட காமினி அபய மன்னனாவான். (கி.பி.19 - 29) அது படுகொலை சட்டம் எனப்பட்டது. எருமை, பசு, ஆடு என்பவற்றைக் கொல்வோருக்கு மரண தண்டனை விதிக்கும் சட்டம் நான்காம் மகிந்த மன்னனால் (கி.பி. 956 - 972) நிறுவப்பட்ட மிகிந்தலை சுவர்க் கல்வெட்டில் காணப்படுகிறது. நீர் நிலைகளில் வாழும் பறவைகளைக் கொல்லக் கூடாதென நிசங்கமல்ல மன்னனால் (கி.பி.1187 - 1196) சட்டம் விதிக்கப்பட்டது.

குற்றச் செயல்கள் தொடர்பாகவும் எமது அரசர்கள் கடுமையாகச் செயற்பட்டனர். இது தொடர்பாகக் குறிப்பிடத்தக்க விளக்கத்தை நான்காம் மகிந்த மன்னனால் (கி.பி.956 - 972) நிறுவப்பட்ட வேவல்கெட்டிய கல்வெட்டில் காணக்கூடியதாக உள்ளது. களவு எடுத்தல், கொலைசெய்தல் என்பன தொடர்பாகக் விதிக்கப்பட வேண்டிய தண்டனை அதில் விபரிக்கப்பட்டுள்ளது. கொலைக் குற்றத்திற்கு வழங்கப்பட்ட தண்டனை தூக்கிலிடுதலாகும். பிறருக்கு சொந்தமான மாடுகளைக் களவு செய்து பிடிபட்டால் அந்த மிருகங்களைத் தேடி உரியவர்களிடம் ஒப்படைத்து, மாடுகளின் உடலில் இடப்பட்ட அடையாளத்தை அவைகளைத் திருடியவர்களின் நெற்றியில் சூடாக்கி இட வேண்டும் என அதில் குறிப்பிடப்பட்டுள்ளது.

தலைமறைவாகி இருக்கும் குற்றவாளிகளைப் பிடிக்கும் பொறுப்பு அக்கிராமத்து மக்களிடம் ஒப்படைக்கப்பட்டது. குற்றவாளியைப் பிடிக்கும் வரை குற்றவாளி வாழ்ந்த கிராம மக்கள் ஒரு வரியை அரசாங்கத்திற்கு செலுத்தவேண்டி இருந்தது. அது உள்ளூர் தண்டப்பணம் எனப் பட்டது.

குற்றவாளிக்கு வழங்கப்பட்ட தண்டனைகளை ஏனையோர் படிப்பினையாகக் கொண்டு குற்றங் கள் செய்யாதிருக்கும் பொருட்டே தண்ட னைகள் வழங்கப்பட்டுள்ளன. இவை எமது சட்டங்களுக்குப் பின்னணியாக அமைந்ததாகும். தற்காலத்தில் உரோமன் - டச்சுச் சட்டங்களே இலங்கையில் பின்பற்றப்படுகிறது. இது மிகவும் பிற்பட்ட காலத்திலேயே அறிமுகம்செய்யப் பட்டதாகும்.

## 6.3 பணமும் செலாவணியும்

செலாவணி என்பது பொருளாதார நோக்கத்துடன் செய்யப்படும் நாணயமாற்று முறையாகும். முற்காலத்தில் பொருளாதாரத்தில் பண்டமாற்று முறையே நிலவியது. இதனை நாம் வரலாற்று மூலாதாரங்கள் மூலம் அறியக்கூடியதாக உள்ளது. தொல்பொருள் அகழ்வுகளின் மூலம் கண்டுபிடிக்கப்பட்ட களி மண்ணாலான வட்ட வடிவி லான ''கலம்'' சில சமயங்களில் பொருளாதார நடவடிக்கையில் நாணயமாற்று தொடர்பாக பயன்படுத்தப்பட்டிருக்கலாம் எனத் தொல்பொருள் ஆய் வாளர்கள் கருதுகின்றனர். இந்நாட்டில் பணப்புழக்கம் கி.மு. 250 ஆம் ஆண்டளவில் ஆரம்பமாகியது. அது வட இந்திய வர்த்தகர்களால் இங்கு கொண்டுவரப்பட்ட வெள்ளி நாணயமாகும். வரலாற்றாளர்கள் அதனை ''ஹஸ்எபு'' என்று அழைக்கின்றனர். வட்டம், சதுரம், நேர் பக்கங்களுடைய வடிவினைக் கொண்ட இந்த நாணயங்களில் பல்வேறு இலச்சி னைகள் பொறிக்கப்பட்டுள்ளன. அவை இந்தியாவிலிருந்து இங்கு வந்தோரால் கொண்டு வரப்பட்ட வையாகும்.

கல்வெட்டுக்களில் ''கஹபண'' என்றும், இலக்கிய நூல்களில் கஹவணு என்றும் அறிமுகமாவது இந்த ஹஸ்புவ என்ற பணமாகும்.இந்தச் சொல் சமஸ்கிருதத்திலுள்ள கர்ஷாபண என்பதிலிருந்து வந்ததாகும்.

கி.மு. 1 ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியில் அல்லது கி.பி. 1 ஆம் நூற்றாண்டின் முற் பகுதியில் இந்நாட்டில் நாணயம் ஒன்று வெளியிடப்பட்டதாகச் சான்றுகள் உள்ளன. தொல்பொருள் அகழ்வுகளின்மூலம் கண்டு பிடிக்கப்பட்டுள்ள யானை மற்றும் சுவஸ்திக்க முதலான அடையாளங்களைக் கொண்ட நாணயம் இதற்கு எடுத்துக்காட்டாகும். இவை தவிர பல்வேறு அரசர்கள் தமது ஆட்சிக் காலத்தில் நாணயங்கள் வெளியிட் டுள்ளனர். நாணயம் அச்சிடுவதற்குப் பொறுப் பாகப் புறம்பான அதிகாரி ஒருவர் இருந்தார்.

அவர் நாணய வெளியீட்டு அதிகாரி எனப்பட்டார். கி.பி. 2 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டுக் களில் அவரை குறிக்க ''ரூப்பதக்க'' என்று எழுதப்பட்டுள்ளது. முற்காலத்தில் இலங்கையில் பாவனையில் இருந்த நாணயங்கள் உரு 6.2, 6.3 இல் தரப்பட்டுள்ளன.



*உரு 6.4. இந்த வர்ண மணிகள் பழைய மாகம நகரில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவற்றால் செய்யப்பட்ட ஆபரணங்களை அணிவதில் அக்காலப் பெண்கள் ஆர்வம் கொண்டிருந்தனர் என்பது இதன் மூலம் தெளிவாகிறது.*

முற்காலத்தில் இலங்கையில் வர்த்தகச் செயற்பாடுகளில் நாணயங்களுக்குப் பதிலாக உலோகத்தின் நிறையும் பெறுமதியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. அநுராதபுரத்திலிருந்த அபயகிரி விகாரையின் அகழ்வுகளில் தங்க உலோகத்துண்டு ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அந்த உலோகத்தின் மீது ''ரன் தெவிசி கலந்த'' என்று எழுதப்பட்டுள்ளது. அந்த எழுத்து கி.பி. 8 ஆம் அல்லது 9 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும். கலந்த என்பது நிறையை அளவிடும் அலகாகும். வெஸ்ஸகிரியில் கண்டெடுக்கப்பட்ட கி.பி 10 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டில் அநுராதபுரத்தில் அக்காலத்தில் வீராங்குர என்ற பெயரில் அறிமுகமான விகாரையில் வாழ்ந்த பிக்குகளுக்கு நான்காம் காசியப்ப மன்னனால்(கி.பி. 898 - 914) 200 தங்கக் கலங்கள் வழங்கப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது.

இலங்கையின் பல பாகங்களிலும் வெளிநாட்டு அடையாளங்கள் உள்ள நாணயங்கள் கிடைத்துள்ளன. இவற்றில் அநேகமானவை உரோம நாணயங்களாகும். வெளிநாட்டு நாணயங்கள் பாவனையில் இருந்த போதிலும் அவற்றில் உலோக நிறைக்கு சமமான பெறுமதி கவனத்தில் கொள்ளப்பட்டது. தற்போது கண்டுபிடிக்கப்பட்டுள்ள பல உரோம நாணயங்கள் செம்பிலானவையாகும். முற்காலத்தில் இலங்கையிலிருந்த துறைமுகங்களில் சுங்கவரி அறவிடப்பட்டது. வெளிநாட்டவர் தமது வர்த்தகப் பொருள்களைக் கொண்டுவரும்போது தமது நாட்டுப் பணத்தின் மூலமே வரி செலுத்தினர். அவ்வேளையில் நாணயங்களின் உலோகத்தின் நிறை கவனத்தில் கொள்ளப்பட்டது. உரோம நாணயங்கள் தவிர்ந்த பழைய சீன, அராபிய, பிரித்தானிய நாணயங்களும் இந்நாட்டில் பாவனையில் இருந்தன. நாம் பார்த்துள்ள V.O.C என்ற எழுத்துக்களையுடைய நாணயங்கள் கிழக்கிந்திய வர்த்தகச் சங்கம் என்ற ஒல்லாந்த வர்த்தக நிறுவனத்திற்குச் சொந்தமானதாகும்.

முற்காலத்தில் இலங்கை தன் பொருளாதார செயற்பாடுகளில் முறையாக இயங்குவதற்கு எவ்வாறு செயற்பட்டது என்பது இதன் மூலம் தெளிவாகிறது.

## 6.4 பெண்களின் பிரதிநிதித்துவம்

முற்காலத்தில் இலங்கைச் சமுதாயம் பெண்களை உயர்வாகக் கருதியதுடன் அவர்களை மதித்து நடந்தது. இலக்கியங்களும் தொல்பொருள் மூலாதாரங்களும் இதனை உறுதிசெய்கின்றன. ஆட்சியிலும் பெண்களுக்குச் சந்தர்ப்பம் வழங்கப்பட்டதிலிருந்து எமது புராதன சமுதாயம் பெண்களுக்கு அளித்த மரியாதையையும் அவர்கள்மீது கொண்ட நம்பிக்கையையும் அறியக் கூடியதாக உள்ளது.

சூளசீவலிதேவி என்ற அரசி பற்றிக் கூறும் கல்வெட்டு லாஹுகலயில் அமைந்துள்ள நில்கிரி சேய என்ற பெயரால் அழைக்கப்பட்ட பழைய தூபிக்கு அருகில் கண்டெடுக்கப்பட்டது. லீலாவதி அரசி இந்நாட்டை மூன்று முறை ஆட்சி செய்தாள். பொதுவாகக் கூறின் புராதன காலத்தில் இந்நாட்டில் வாழ்ந்த பெண்கள் கடுமையான சமூகக் கட்டுப்பாடுகளால் துன்புறவில்லை. அவர்கள் சுதந்திரமாகச் செயற்படத் தடைகள் இருந்தன என்பதனைக் காட்டும் ஆதாரங்கள் எதுவும் இலக்கிய மூலாதாரங்களில் இல்லை.

தனது கணவன் தூர நாடொன்றிற்கு வர்த்தகத்தின் பொருட்டு சென்று மூன்று ஆண்டுகளின் பின்னர் திரும்பி வரும் வரை தனியாக வாழ்ந்த ஒரு பெண்ணைப் பற்றி ரசவாஹினி எனப்படும் இலக்கிய நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது. தாய் என்ற நிலையில் தமது பொறுப்புக்களை நிறைவேற்றியதாலேயே பெண்கள் அக்காலத்தில் சமூகத்தின் மதிப்புக்கு உள்ளாகினர். ஒரு முறை பௌத்த பிக்குமார் விகாரமகாதேவியிடம் நீங்கள் முற்பிறப்பில் செய்த நற்செயல்களினால் இப்பொழுது செல்வாக்குடன் இருக்கிறீர்கள் என்று கூறினர். பிள்ளைகள் இல்லாத வாழ்வில் உள்ள சுகம் என்ன சுகம் என்று அதற்கு விகாரமகாதேவி பதிளித்ததாக ரசவாஹினியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

பெண்கள் திருமணம் செய்ய வேண்டும் என்பது சமுதாயத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்ட நியதியாக இருந்தது. 16 வயதை அடைந்ததும் திருமணம் செய்ய அவள் தகுதியுடையவளாவாள். திருமணம் செய்யும் வயதை அடையும் வரை பெண்கள் தமது பெற்றோரின் பாதுகாப்பிலேயே இருக்க வேண்டும். பிள்ளைகளுக்குக் கல்வியறிவை வழங்குவது பெற்றோரின் கடமையாகும் என சகஸ்ஸ வத்துப்பகரண என்ற நூலில் குறிப்பிடப்

பட்டுள்ளது. சாலியவின் மனைவி அசோகமாலா துட்டகைமுனு மன்னனின் மாளிகையில் சுவையான உணவு தயாரித்து அனைவரதும் மனதைக் கவர்ந்ததாக சத்தம்மாலங்காரவில் விபரிக்கப்பட்டுள்ளது. கல்வியறிவில் சிறந்து விளங்கிய பெண்கள் மதுபாச்சிகா என்ற சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்டதாக தம்பியா அட்டுவா கெட்டபத என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது. சில சந்தர்ப்பங்களில் ''மதுரஹத்தரசா'' என்ற பதமும் இதற்குப் பயன்படுத்தப்பட்டது. அதன் கருத்து கைராசி என்பதாகும்.

அரச குடும்பங்களில் மட்டுமன்றி சாதாரண சமுதாயத்திலும் பெண்களுக்குத் தலைமைத்துவம் வகிப்பதில் தடைகள் இருக்கவில்லை. கி.மு. 2 ஆம் நூற்றாண்டளவில் இந்நாட்டில் பிரதேச ஆட்சியுடன் தொடர்புடைய பருமக எனப்படும் தலைவர்கள் இருந்தனர். அநுராதபுர மாவட்டத்தில் உள்ள பிராமணயாகம என்ற இடத்தில் கண்டெடுக்கப்பட்ட ஒரு கல்வெட்டில் பருமக்கலு சுமனா என்ற பெயரையுடைய பெண் ஒருவரைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. அவள் பருமக்க நதிக்க என்பவரின் மனைவி என்றும் அதில் குறிப்பிடப்பட்டுள்ளது. பருமக்கலு என்பது பருமக்க என்ற சொல்லின் பெண்பாலாகும். அக்காலத்தில் பெண்களும் பிரதேச ஆட்சியில் ஈடுபட்டிருந்தனர் என்பதற்கு இது சிறந்த சான்றாகும். பௌத்த பிக்குகளுக்கென கற்குகைகளைத் தானமாக வழங்கிய பெண்களின் பெயர்கள் அக்கற் குகைகளில் பொறிக்கப்பட்டுள்ளன. அநுராதபுர மாவட்டத்திலுள்ள கொக்அபே என்ற இடத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள கி.பி. 2 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பாறைக் குறிப்பொன்றில் தலுதா லக்ஷ்மி என்ற பெண் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. பாதியதிஸ்ஸ என்ற மன்னனின் காலத்தில் அவள் தனது குடும்பத்திற்குச் சொந்தமான நிலபுலங்களில் ஒரு பகுதியைப் பௌத்த விகாரைக்கு வழங்கியதாகக் கூறப்படுகின்றது. தமது செல்வத்தைக் கொண்டு சமயப் பணிகளை மேற்கொள்ள அக்கால பெண்களுக்குச் சுதந்திரம் இருந்தது.

இலக்கிய மூலாதாரங்களில் முன்வைக்கப்பட்டுள்ள எமது நாட்டுப் பெண்கள் பற்றிய இவ்வாறான தகவல்கள் தொல்பொருள் அகழ்வுகளின் மூலம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. கி.மு. 1129 ஆம் ஆண்டில் பெண்கள் தமது கண் இமைகளுக்கு நிறந் தீட்டுவதற்குப் பயன்படுத்திய உலோகக் கம்பி ஒன்று இரத்தினபுரி மாவட்டத்திலுள்ள உடரஞ்சமடம என்ற இடத்தில் பழைய வீடொன்றிலிருந்து கண்டெடுக்கப்பட்டதுடன் எதனையும் கூராக்கக்கூடிய சிவப்பு, மஞ்சள், நிறத்தாலான கற்கள் சிலவும், களிமண் மணிகளும் அங்கு கண்டெடுக்கப்பட்டுள்ளன. தோலை நிறமூட்டவே இந்தக் கற்கள் பயன்படுத்தப்பட்டன. இற்றைக்கு மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இலங்கையில் வாழ்ந்த பெண்கள் தமது உடல் அழகில் அக்கறை கொண்டிருந்தனர் என்பது இதிலிருந்து தெரிகின்றது. பெண்களின் ஆபரணங்களைச் சேர்ந்த பல்வேறு பொருள்கள் தொல்பொருள் அகழ்வுகளிலிருந்து கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. கி.மு. 700 - 450 இற்கும் இடைப்பட்ட காலத்தைச் சேர்ந்த பழைய மயானமொன்று தம்புளைக்கு அருகிலுள்ள இப்பன்கட்டுவையில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. அங்கு மேற்கொள்ளப் பட்ட அகழ்விலிருந்து அழகிய கழுத்துச் சங்கிலி கிடைத்துள்ளது. அந்த சங்கிலி செய்வதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ள சில மணிகள் இந்தியாவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டவையாகும். முற்காலத்தில் இலங்கையில் வாழ்ந்த பெண்கள் தாய்மாராகவும் சகோதரிகளாகவும் சமுதாயத்தினால் மதிக்கப்பட்டனர். அவர்கள் எவராலும் துன்புறுத்தப்பட்டதாக எவ்வித சான்றுகளும் இல்லை. நீண்டகாலம் முதற்கொண்டு எமது மக்கள் பெண்களின் சுதந்திரத்திற்கு மதிப்பளித்து வந்தனர்.

## 6.5 சுதேச உணவு

மிகப் பழங்காலந் தொடக்கம் இந்நாட்டு மக்கள் உள்நாட்டில் விளைந்தவைகளை உணவாகக் கொண்டனர். 10500 வருடங்களுக்கு முன்னர் கித்துள்கல பெலிலெனயில் வாழ்ந்த வரலாற்றுக்கு முற்பட்ட மக்கள் உணவாகக் கொண்ட காட்டு பலா விதை, வாழை என்பன பற்றிச் சான்றுகள் உள்ளன. வரலாற்றுக் காலத்தில் பெருமளவில் நெல், குரக்கன் ஆகிய தானியங்கள் உணவாகப் பயன்படுத்தப்பட்டன. இது தவிர உழுந்து, எள்ளு, சாமை என்பவற்றையும் உணவாகப் பயன்படுத்தினர். அக்காலத்தில் மக்களால் உட்கொள்ளப்பட்ட ஏழு தானியங்கள் பற்றிப் புராதன நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. அக்காலத்தில் மக்களால் உட்கொள்ளப்பட்ட ஏழு தானியங்கள் பற்றிப் புராதன நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

கறிகளைச் சுவையூட்டுவதற்கு பல வகையான பொருள்களைப் பயன்படுத்தும் முறை முற்



*உரு 6.5. சுவையான உணவை உட்கொள்ளும் பிரிவினரைக் கொண்ட இந்தப் படம் கி.பி. 19 ஆம் நூற்றாண்டில் வரையப்பட்டதாகும். இது முல்கிரிகல விகாரையில் காணப்படுகின்றது.*

உணவு சமைப்பதற்குப் பயன் படுத்தப்பட்ட எண்ணெய் பொது வாக உணவுக்கு பயன்படுத்தும் எண்ணெய் எனப்பட்டது. அவற்றில் நெய் முக்கிய இடத்தினைப் பெற் றது. தேங்காய் எண்ணெயின் பாவனை குறைவாகவே இருந்தது.

பாலின் பாவனை சாதாரண கிராம மக்களிடையேயும் காணப்பட்டது. 9 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டுக்களில் கிரிகெரி எனக்கூறப்பட்டிருப்பது கிரா மங்களிலுள்ள பசுக்களாகும். ''தீகிரி'' என்ற சொல்லும் அதில் குறிப்பிடப்பட்டுள்ளதால் தயிரும் உணவில் சேர்த்துக் கொள்ளப் பட்டது என்பது தெளிவாகின்றது. தனது மகள் திருமணமாகி புகுந்த வீடு செல்லும்போது ''எனது மகளுக்குத் தயிர் உண்பதற்கு ஒரு சோடி மாடும் தேவைப்படுமே'' எனத் தந்தையொருவர் கூறுவதாகப் பூஜாவலியில் குறிப்பிடப்பட்டுள் ளது.

காலத்தில் இலங்கையில் இருந்தது. அவைகள் வாசனைப் பொருள் என்ற பெயரில் அறிமுக மானது. இன்று வாசனைப் பொருள்கள் என்ப தற்கு பதிலாக பலசரக்கு என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றனர். முக்கிய பொருள்களையும் வேறு ஐந்து பொருள்களையும் அச்சொல் குறிக் கின்றது. உப்பு, சீரகம், மிளகாய் என்பனவே முதல் மூன்று பொருள்களாகும். கருஞ்சீரகம், சிறுஞ் சீரகம், கொத்தமல்லி, கடுகு, வெந்தயம் என்பன ஏனைய ஐந்து பொருள்களுமாகும். சில பிரதேசங் களில் கடுகு, வெந்தயம் என்பனவற்றிற்கு பதிலாக ஓமம், சீரகம் என்பன பயன்படுத்தப்பட்டன. இவை தவிர உணவைச் சுவையூட்ட புளிப்பு வகைகளும் பயன்படுத்தப்பட்டன. எலுமிச் சம்பழம், தோடம்பழம், கொரக்கா புளி, நாரத்தை என்பன அதன் பொருட்டு பயன்படுத்தப் பட்டுள்ளன. பழைய நூல்களில் கருபோ ஓய எனக் குறிப்பிடப்பட்டுள்ளது கறிவேப்பிலையாகும்.

கஞ்சியை உணவாகக் கொள்வது பழங்காலந் தொட்டே எம் நாட்டு மக்களிடையே பழக்கத்தில் இருந்தது. அது இலகுவில் சமிபாடு அடையக்கூடிய சிறந்த உணவாகும். கஞ்சி என்பதற்குப் பதிலாக பழைய நூல்களில் ''அபு ஹம்பு காடி'' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. அரிசியை நீரில் வேக வைத்து உப்பிட்டதும் அது கூழ் எனப்பட்டது. ஒரு பங்கு அரிசியுடன் ஆறு பங்கு நீர் சேர்த்து நோயாளருக்குத் தயாரிக்கப்படும் கஞ்சி ''யவாகு'' எனப்பட்டது. நாம் அதனை இப்போது உப்புக் கஞ்சி என அழைக்கின்றோம். பல்வேறுபட்ட நோய்களின்போது மருந்துப் பொருள்களைக் கலந்து கஞ்சி வகைகள் தயாரிக்கப்பட்டன. சுவை யாகத் தயாரிக்கப்பட்ட கஞ்சி ஒன்று பற்றி சத்தர் மரத்னாவலியில் குறிப்பிடப்பட்டுள்ளது. நீர் சேர்க் காத பாலில் தயாரித்து தேன், நெய் என்பன சேர்த்து ஆறிய பின் தோடம்பழச் சாற்றைச் சேர்த்து அது தயாரிக்கப்பட்டது. பண்டைய காலத்தில்

இந்நாட்டில் வாழ்ந்த மக்கள் நாளொன்றின் ஆரம்பத்தில் முதலாவது உணவாகக் கஞ்சியை அருந்தினர். மருத்துவக் குணமுடைய இலைகளைக் கொண்டு தயாரிக்கப்பட்ட அவ்வகையான கஞ்சி ''எம்புல் ஹம்பு'' அல்லது ''எம்புல் கெந்த'' என்ற பெயரால் அழைக்கப்பட்டது

மாமிசமும் அக்காலத்தில் உணவில் சேர்த்துக் கொள்ளப்பட்டது. தரைவாழ் விலங்குகளைப் போன்றே மீன்களையும் உணவாகக் கொள்வதற்கு மக்கள் பழகி இருந்தனர். குளங்களிலிருந்து வயலை நோக்கி வரும் சிறு வாய்க்கால்களில் மீன் பிடித்தல் தொடர்பாக அரசாங்கத்தால் அறவிடப்பட்ட வரி ''மாத்ரிக்க மத்சய பாகய'' என்ற பெயரால் அழைக்கப்பட்டது. ''மாத்ரிக்க'' என்பது சிறு வாய்க்கால் என்பதாகும்.

பழங்கால மக்கள் தமது உணவு குறித்து கவனமாக இருந்தனர். விவசாய நடவடிக்கைகளிலும், விலங்கு வளர்ப்பிலும் ஈடுபட உடலாரோக்கியம் தேவையானதால் உணவு பற்றியும் உடற் சுகம் பற்றியும் கவனமாக இருந்தமை தெரிய வருகின்றது. அவர்கள் ஒரு போதும் செயற்கை உணவை உட்கொள்ளவில்லை. இயற்கையில் காணப்பட்ட உணவை, அதன் போசணை சத்துக் குறையாமல் தயாரித்து உண்பதற்கு அவர்கள் பழகியிருந்தனர். அது இன்று வாழும் எம் அனைவருக்கும் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

கீர்த்தி ஸ்ரீ மேகவண்ண மன்னனது (கி.பி.301 - 328) தோணிகலக் கல்வெட்டில் உழுந்து, பயறு, எள் என்பன பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. கி.பி. 12 ஆம் நூற்றாண்டளவில் இலங்கையில் செல்வந்தர்கள் மத்தியில் விருப்பமான உணவாக விளங்கியது மணம் நிறைந்த நெய்யில் சமைக்கப்பட்ட மயில் இறைச்சியும் அல் எனும் ஓரின அரிசியால் சமைக்கப்பட்ட சோறும் என சத்தர்மரத்னாவலியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

அக்காலத்தில் ஏழைகள் பெரும்பாலும் கீரை வகைகள், காடிப்புளிப்பு, தீட்டாத அரிசிச்சோறு என்பனவற்றை உணவாகக் கொண்டனர். அரிசி மாவைப் புளிக்க வைப்பதன் மூலம் பெறப் பட்ட புளிப்பே காடிப் புளிப்பு எனப்பட்டது. கஞ்சி வகைகளை அருந்துதலும் பழக்கத்தில் இருந்தது. கஞ்சி என்ற சொல்லுக்குப் பதிலாக ''யாகு'' அல்லது ''ஹம்பு'' என்ற சொல் பயன்படுத்தப்பட்டது.

தானியங்களை வறுத்து அதன் மூலம் பெறப்பட்ட உணவு “அத்சுணு'' என பழைய நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. உணவிற்குப் பின் சிற்றுண்டியாக எள்ளை உண்டனர். பிக்கு ஒருவருக்கு இவ்வாறு எள்ளைக் கொடுப்பது பற்றிய குறிப்பு தோணிகலக் கல்வெட்டில் காணப்படுகின்றது. ''திலசங்குலிக்கா'' எனப்படும் உணவு ஒன்று பற்றி தம்பிய அட்டுவாவில் குறிப்பிடப்பட்டுள்ளது. இது எள்ளுருண்டையாகவும் இருக்கலாம்.

தானிய வகைகளுக்கு மேலதிகமாகக் கிழங்கு வகைகளும் முக்கிய இடத்தினைப் பெற்றன. கொடிக் கிழங்கு, முட்கிழங்கு, வற்றாளை என்பன பற்றிப் பழைய இலக்கிய நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. சொடல என்ற சொல் சத்தர்மரத்னாவலியில் காணப்படுகின்றது.

அக்காலத்தில் பீர்க்கங்காய், சுரைக்காய், பூசணிக் காய், சுண்டக்காய், வெள்ளரிக்காய், முருங்கை என்பனவற்றுடன் கீரை வகைகளும் உணவாகக் கொள்ளப்பட்டன. சுரைக்காய், பீர்க்கங்காய் ஆகிய கொடி வகைகள் முள்ளுள்ள தாவரங்கள் என சத்தர்மரத்னாவலியில் கூறப்பட்டுள்ளன. பொரியல், சுண்டல், குழம்பு என்பனவற்றிற்கு மேலதிகமாக மரக்கறி வகைகள் மூன்று விதமாக சமைக்கப்பட்டன. குழம்பு, புளிச்சுவை, கெட்டியான கறி என்பனவே அவையாகும். திரவத் தன்மையற்ற கெட்டியான கறி நியம்பலாவ எனப்பட்டது.



*உரு 6.6. சுற்றாடல் பற்றி எமது முன்னோரிடம் அதிக அக்கறை காணப்பட்டது. இயலுமான வரையில் சுற்றாடலைப் பாது காக்க அவர்கள் நடவடிக்கைகளை மேற்கொண்டனர். சுற்றாடலில் காணப்படும் உயிரோட்டத்தை வெளிப்படுத்தும் இந்தச் சித்திரம் 19 ஆம் நூற்றாண்டில் களனி விகாரையில் வரையப்பட்டதாகும்.*

## 6.6. சூழல் பாதுகாப்பு

சமுதாயமொன்று அங்கு வாழும் அங்கத் தவர்களுக்கு உகந்ததாக விளங்க வேண்டுமாயின் அந்த சமுதாயத்திலுள்ள சுற்றாடல் பாதுகாக்கப்பட வேண்டும். இயற்கை சூழலை அழிப்பதன் மூலம் பல பிரச்சனைகளை நாம் எதிர்நோக்க வேண்டிய நிலை ஏற்படும். மரஞ்செடிகளை அழிப்பதன் மூலம் நீர்ப் பற்றாக்குறை ஏற்படும். மண் அரிப்பினால் மண் வளம் குன்றி விளைச்சல் குறைவடையும். இவை அனைத்தினதும் தீய விளைவுகளை நாமே அனுபவிக்க வேண்டிய நிலை ஏற்படும்.

சுற்றாடலைப் பாதுகாப்பதன் முக்கியத்துவத்தை உணர்ந்த எமது முன்னைய ஆட்சியாளர்கள் இதன் பொருட்டு சட்டங்களை வகுத்தனர். உயர் நிலங்களில் உள்ள மரங்களை வெட்டக் கூடாதென மன்னன் நான்காம் மகிந்தனால் பொறிக்கப்பட்ட அநுராதபுரக் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. உயர் நிலங்களிலுள்ள இயற்கைக் காடுகளை அழிப்பதன் மூலம் மண் சரிவு, மண் அரிப்பு என்பன ஏற்பட வாய்ப்புண்டு. மேலும் இயற்கை நீர் நிலைகள் வற்றிப் போவதற்கும் அது வழிவகுக்கும். மன்னன் மூன்றாம் உதயனால் (கி.பி.935 - 938) அநுராபுரத்தில் புத்தன்னெஹெல என்ற இடத்தில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டில், ஒரு இடத்தில் காட்டு மரங்களை வெட்ட வேண்டாம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஐந்தாம் காசியப்ப மன்னனது கொண்டவட்டவான் தூண் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளதன்படி மரஞ்செடிகளின் முகாமைத்துவத்தில் அரசினால் அமுல் செய்யப்பட்டுள்ள சட்டங்களுக்கு அமைய செயற்படும்படி அரச அதிகாரிகளுக்கு அறிவுரை வழங்கப்பட்டுள்ளது.

இயற்கைச் சூழலில் வாழும் உயிரினங்கள், மண் என்பனவற்றைப் பாதுகாப்பது தொடர்பான சட்டங்களைக் கொண்ட பழைய கல்வெட்டுக்கள் இலங்கையில் காணப்படுகின்றன. இவற்றை அவதானிக்கும்போது புராதன காலத்தில் சுற்றாடலைப் பாதுகாக்கும் பொருட்டு முறையான வேலைத்திட்டம் இருந்தமை தெரிய வருகின்றது. எமது நாட்டில் உயர்ந்த மனப்பான்மையுடைய குடிமக்கள் வாழ்ந்தமையை இந்தப் பாடத்தைக் கற்றதன் மூலம் நீங்கள் அறிந்து கொண்டீர்கள். பல்லாயிரம் ஆண்டுகள் தொடர்ந்து இந்நாட்டில் வாழ்ந்த மக்கள் தமது வாழ்க்கை அனுபவத்துடன் அறிவையும் இணைத்து சிறப்பாக வாழ்ந்தமையை நீங்கள் முன்னுதாரணமாகக் கொள்ள வேண்டும்.

**முக்கிய விடயங்கள்**

1. எமது புராதன சமுதாயம் முறையாக ஒழுங் கமைக்கப்பட்டிருந்தது. மேலிருந்து கீழ் நோக்கி அதிகாரம் முறையாக ஒழுங்கமைக்கப்பட்டு இருந்ததால் சமுதாயத்தில் ஒவ்வொருவரும் தமது கடமைகளைச் சரிவர நிறைவேற்றக்கூடியதாக இருந்தது.

2. சட்டத்துடனும் நீதியுடனும் கூடிய சமுதாயம் நிலவுவதற்கு புராதன ஆட்சியாளர்கள் செயற் பட்டனர். சட்டம் தொடர்பான தெளிவு பழங்காலந் தொடக்கம் எமது முன்னோர்களிடம் காணப்பட்டதுடன், அதற்கமைய வாழவும் அவர்கள் முற்பட்டனர்.

3. பொருளாதாரத்தை முறையாக முன்னெடுத்துச் செல்ல இந்நாட்டு மக்கள் செயற்பட்டுள்ளனர். பொருளாதார ஊடகமாக உலோக நாணயங்கள் பயன்படுத்தப்பட்டன. உலோக நாணயங்களை அச்சிடுவதன் பொருட்டு ரூப்பதக்க என்ற பெயரைக் கொண்ட விசேட அதிகாரி ஒருவர் அக்காலத்தில் இருந்தார்.

4. பெண்களை மதித்தல், அவர்களுக்கு சமுதாயத்தில் உரிய இடமளித்தல் என்பன புராதன சமுதா யத்தில் காணப்பட்டன. பெண்களிடம் காணப் பட்ட பல்வேறு நற்பண்புகள் காரணமாக அவர்கள் சமுதாயத்தின் மதிப்பினைப் பெற்றனர். நாட்டை ஆட்சிசெய்வதற்குப் பெண்களுக்கு இடமளிக்கப்பட்டிருந்தது.

5. பண்பாட்டைக் கட்டியெழுப்பக்கூடிய அளவுக்கு எமது முன்னோர்கள் சுகதேகிகளாக வாழ்ந்த மைக்கு அவர்கள் உட்கொண்ட உணவு, சுகாதார பழக்கவழக்கங்கள் என்பன காரணங்களாக அமைந்தன. உள்நாட்டு முறையிலான அந்த உணவுப் பழக்கங்களை சுகதேகிகளாக வாழ்வதற்கு இன்று நாமும் பின்பற்றலாம்.

6. எமது முன்னோர் விவசாயிகளாக இருந்தமையால் இயற்கையுடன் அவர்கள் நெருங்கிய தொடர்பினை ஏற்படுத்திக் கொண்டனர். மரஞ்செடிகள், உயிரினங்கள் என்பனவற்றை அழிப்பதற்குப் பதிலாகச் சுற்றாடலுடன் இணைந்து வாழ்வதற்கான சட்டங்கள் அக் காலத்தில் இருந்தன.

**செயற்பாடு 1**

1. பண்டைய சமூகக் கட்டமைப்பில் ஒவ்வொரு குழுவினருக்கும் ஒப்படைக்கப்பட்ட செயற்பாடுகள் நல்ல சமுதாயத்தைக் கட்டியெழுப்ப உதவிய முறையைத் தெளிவுபடுத்துக.
2. புராதன சமூக அமைப்பில் இருந்து இன்றைய சமூதாயம் பெறக்கூடிய முன்மாதிரிகளைக் குறிப்பிடுக.
3. புராதன சட்டங்களும் சம்பிரதாயங்களும் நல்லதொரு சமுதாயத்தைக் கட்டியெழுப்புவதற்கு உதவிய விதத்தை தெளிவுபடுத்துக.
4. முற்காலத்தில் பின்பற்றப்பட்ட சுற்றாடல் பாதுகாப்பு முறையைத் தற்காலத்தில் எவ்வாறு பின்பற்றலாம் என விளக்குக.
5. நோய்களைத் தவிர்த்துக்கொள்வதற்குப் பண்டைய உணவுப் பழக்கவழக்கங்களிலிருந்து பெறக்கூடிய முன்மாதிரிகளை எழுதுக.
6. புராதன சமுதாயம் வீழ்ச்சியடையாமல் பாதுகாக்கப்படுவதற்கு சமூகக் கட்டமைப்பில் ஒவ்வொரு பிரிவினருக்குமிடையே நிலவிய தொடர்புகளை விளக்குக.

**நகர மயமாதல்**

*கிராமமொன்று நகரமொன்றாக மாற்றமடைதல் நகர மயமாதல் எனப்படும். அது ஒன்றோடு ஒன்று இணைந்த செயற்பாடாகும். கிராமமென்பது சிக்கலற்ற எளிமையான குடியிருப்பாகும். குறிப்பிட்ட மக்கள் தொகையினர் சிறிய இடைவெளியில் குழுக்களாக இணைவதன் மூலம் கிராமம் தோற்றம் பெறுகின்றது. உறவு முறையிலான குடும்பத் தொடர்புகள் அதில் பிரதானமாகும். நகரமென்பது பெருந்தொகையான மக்களைக் கொண்ட குடியிருப்பாகும். அங்கு வாழ்வோர் தொழில் அடிப்படையிலேயே ஒருவரோடொருவர் தொடர்பு கொள்கின்றனர். கிராமத்தின் உற்பத்தித்திறன் பெருகி, செல்வந்தர்கள் தோன்றும்போதே நகரங்கள் உருவாகின்றன. உள்நாட்டு, வெளிநாட்டு வர்த்தக நடவடிக்கை, செயற்றிறன், நிர்வாகக் கட்டமைப்பு, எழுத்துத் தொகுதியைப் பயன்படுத்துதல் என்பன செல்வந்தர் வாழும் குடியிருப்புகளில் காணக்கூடிய சிறப்பியல்புகளாகும்.*

***சமூக வகுப்பு*** *- ஏதேனும் ஒரு சமூகத்தில் வாழும் மக்களிடையே செல்வத்தின் அடிப்படையில் ஏற்படும் வித்தியாசங்களின் காரணமாக ஏழைகள் நடுத்தர வகுப்பினர் செல்வந்தர் ஆகியோர் காணப்படுகின்றனர்.*

# 7 உலர் வலய புராதன நகரங்களின் வீழ்ச்சியும் தென்மேற்கில் புதிய இராச்சியங்களின் தோற்றமும்

### அறிமுகம்

உலர்வலயத்தைச் சேர்ந்த வடமத்திய மாகாணத்தில் உள்ள புராதன அநுராதபுர நகரமும் அதே வலயத்திற்குட்பட்ட தென் மாகாணத்தில் மாகம நகரமும் நீண்ட காலமாகப் புகழ்பெற்ற நகரங்களாகத் திகழ்ந்தன. அந்நகரங்கள் தோன்றுவதற்கான பின்னணி பற்றி வரலாற்று மூலாதாரங்களில் விளக்கப்பட்டுள்ளன. உதாரணமாக அநுராதகாம எனும் பெயரில் கிராமமாக ஒரு காலத்தில் திகழ்ந்த இடத்தை ஒரே இரவில் அநுராதபுர நகராக மாற்றியமைப்பதற்கு பண்டுகாபய மன்னனால் முடியுமாயிருந்தது என மகாவம்சம் குறிப்பிடுகின்றது. கிராமமாக இருந்த ஓரிடம், நகரமாக மாற்றமடைவது பற்றி வரலாற்று மூலாதாரங்களில் குறிப்பிடப்படுவது மிகவும் சரியான கருத்துக்களாகும். உண்மையிலேயே நகரம் ஒன்றாக மாற்றப்பட்டது கிராமக் குடியிருப்பு ஒன்றாகும். கிராம குடியிருப்பு ஒன்று நகரக் குடியிருப்பாக வளர்ச்சி பெறுவது மிகவும் நீண்ட காலத்தில் திட்டமிட்டு மேற்கொள்ளப்பட வேண்டிய ஒரு நடவடிக்கையாகும். மனிதர்களின் வாழ்க்கை முறை கிராமியத் தன்மையிலிருந்து நகரத் தன்மையாக மாற்றமுறுவதே அங்கு இடம் பெறும் நிகழ்வாகும். அவ்வாறு நடப்பது நீண்ட கால செயற்பாடொன்றின் விளைவாகும். ஒரு வகையில் அச்செயற்பாட்டிற்கு உள்நாட்டில் ஏற்படும் பொருளாதார வளர்ச்சி நேரடியாகப் பங்களிப்புச் செய்யும். மறுவகையில் வெளிநாடுகளுடன் ஏற்படுத்திக் கொள்ளப்படும் வர்த்தகத் தொடர்புகளும் தீர்மானமான செல்வாக்கைச் செலுத்தும். இப்பாடத்தின் மூலம் இலங்கையில் புராதன நகரங்கள் தோன்றலும் அவை சிதைவுறலும் தொடர்பான கருத்துக்கள் விளக்கப்படவுள்ளன.

## 7.1. நகர வாழ்க்கையின் பின்னணி

உலர் வலயத்தைச் சேர்ந்த அநுராதபுரமும் தென்கிழக்கு பகுதியில் அமைந்துள்ள மகாகமையும் கி.மு. 450 ஆம் ஆண்டளவில் அபிவிருத்தியுறுவதற்கான ஆரம்பத் தன்மைகளைக் கொண்டிருந்தன. நகர் ஒன்றிற்குத் தேவையான கட்டடங்கள், நீர்வசதி, பாதைகள் என்பவற்றை இவை கொண்டிருந்தன என்பது மட்டுமல்ல, நகரொன்றில் வாழ்வதற்குத் தேவையான வாழ்க்கைத் தரமுள்ள சனத்தொகை ஒன்றும் இங்கு உருவாகியிருந்தது என்பது இதிலிருந்து தெளிவாகிறது.

இந்நாட்டில் வாழ்ந்த புராதன மனிதன் தனது நாடோடி வேட்டைத் தொழிலைக் கைவிட்டு அதற்குப் பதிலாக விவசாயத்தை முதன்மைப் படுத்திய வாழ்க்கைக்குப் பழக்கப்பட்டதற்கான ஆதாரங்கள் கி.மு. 2400 ஆண்டுகளுக்கு முற்பட்டதென இரண்டாம் பாடத்தில் நீங்கள் கற்றுள்ளீர்கள். விவசாயத்திற்குப் பழக்கப்பட்டதால் அக்காலச் சமூகத்தில் ஏற்பட்ட பிரதான மாற்றமொன்றாக நிரந்தர வாழ்விடத்தைக் குறிப்பிடலாம். நிரந்தர வாழ்விடம் என்பது ஒரே இடத்தில் நீண்ட காலத்திற்கு வாழ்வதாகும். இந்நாட்டு புராதன கிராமங்களின் தோற்றத்திற்கான முக்கிய காரணமாக இது இருந்தது.

இத்தகைய ஆரம்ப கிராம மக்கள் விவசாயத்தையும் மந்தை வளர்ப்பையும் தமது வாழ்வாதாரமாகக் கொண்டிருந்தனர். இதனோடு வேட்டையாடலும் இடம்பெற்றது. விவசாயமும் மந்தை வளர்ப்பும் அவர்களது அன்றாட உணவுத் தேவைகளை நிறைவு செய்தன.

வரட்சி, வெள்ளம், கால்நடைகளிடையே பரவும் தொற்று நோய்கள் போன்ற இயற்கையினால் ஏற்படும் இடைஞ்சல்களுக்கு முகங்கொடுத்து, அதை எதிர்கொண்டு வாழ்வதற்கு இவ்விரு தொழில்களிலும் ஈடுபட்டிருந்த மக்களால் முடியுமாயிருந்தது. இதனால் இவர்களது வாழ்க்கை இணக்கமான அமைதித் தன்மையைக் கொண்டிருந்தது.




*வரைபடம் : 7.1 புராதன அநுராதபுர நகரின் திட்டவரைபு*

நீண்ட காலமாக விவசாயத்தில் ஈடுபட்டிருந்த மையால் அந்தந்தக் குடியேற்றங்களில் வாழ்ந்த மக்களிடையே துலக்கமான வேறுபாடு ஏற்படுவதற்கான பண்புகள் வெளித்தெரிய ஆரம்பித்தன. அது விவசாயம் செய்த நிலத்தின் தன்மை, விவசாயத்தை மேற்கொள்வதில் காணப் பட்ட நுட்பமான அறிவாற்றல் போன்ற பல்வேறு நடத்தைகளால் நிர்ணயிக்கப்பட்டன.

போதியளவு நீர் கிடைக்கின்ற வளமான நிலத்தில் பயிர்ச் செய்கையில் ஈடுபடும் விவசாயிகளுக்கு நல்ல விளைச்சல் கிடைக்கப்பெற்றதுடன், அத்தகைய வளம் இல்லாத நிலத்தில் பயிரிட்டோ ருக்கு வருடம் முழுவதும் வாழ்க்கைத் தேவைக்குப் போதுமான விளைச்சலைப் பெற்றுக் கொள்ள இயலவில்லை. விளைச்சல் சிறப்பாக அமைந்த நபர்களுக்கு வருடம் முழுவதும் பயன்படுத்தி விட்டு எஞ்சியிருக்கும் தானியங்கள் கையிருப்பில் இருந்தன.

இது மிகை உற்பத்தி எனக் குறிப்பிடப்படும். சமூக மொன்றில் மிகை உற்பத்தி காணப்படும்போது அவ்வுற்பத்தியின் உடைமையாளர்கள் கூட்டம் ஒன்று உருவாவது, சமூகத்தின் பொருளாதாரத்தில் பாரிய மாற்றங்களை ஏற்படுத்துவதற்கு வழி வகுத்தது. இவ்வாறான உற்பத்திக்குச் சொந்தக் காரர்கள் புராதன சமூகத்தில் வாழ்ந்தார்கள் என்பதைக் காண்பிப்பதற்கான ஓர் உதாரணம் ‘‘ஜாதக அட்டகதா’’ நூலில் காணப்படுகின்றது.

அதில் கூறப்பட்டுள்ளபடி ஒரு போகத்தில் போதி யளவு அறுவடை கிடைக்காத விவசாயி ஒருவர் அக்கிராமத்தின் தலைவனை அணுகி அடுத்த போகத்தில் திருப்பித் தரும் வாக்குறுதியின் பேரில் நெல் மூட்டை ஒன்றைப் பெற்றுக் கொண்டுள் ளான். ‘‘ஜாதக அட்டகதா’’வில் கூறப்பட்டுள்ள இச்செய்தி எமது புராதன சமூகத்தில் முன்னர் குறிப்பிட்ட சமூக மாற்றம் நிகழ்ந்து கொண்டிருந்தமைக்கான மிகப் பொருத்தமான ஒரு தகவலாகும்.

ஒரு புறம் விவசாய நடவடிக்கை தடைப்பட்டுப்போனமையால் ஏழ்மையுற்ற விவசாயி பற்றியும் மறுபுறம் அவருக்கு உதவக் கூடிய மிகை உற்பத்தியைக் கொண்டவர்கள் பொருளாதார அமைப்பில் இருந்தமை பற்றியும் இதன் மூலம் அறியக்கூடியதா யுள்ளது.

மேலே குறிப்பிடப்பட்டுள்ள மூலாதாரத்தில் விவரிக்கப்பட் டிருந்த மிகை உற்பத்தியைக் கொண்டிருந்தவர் கிராமத் தலைவர் ஒருவர் என்று குறிப் பிடப்பட்டதிலிருந்து எம்மால் விளங்கிக் கொள்ளக்கூடிய முக்கியமான விடயம் ஒன் றுள்ளது. அதாவது அவருக்கு தலைமைப் பதவியைப் பெற்றுக் கொள்வதற்கான பிரதான தகுதி அவர் பொருளாதார ரீதியில் தன்னிறைவு அடைந்திருந்தமை யாகும். ‘பருமக்க’, ‘பத்த’ எனப் படும் அவ்வாறான பிரதேசத் தலைவர்கள் பற்றிக் கல்வெட் டுக்களில் குறிப்பிடப்படுகிறது. பருமக்க பற்றி மூன்றாம் பாடத்தில் முன்வைக்கப்பட்டுள்ளது.

பொருளாதார நிலையை அடிப் படையாகக் கொண்டு, பணக் காரர்களும் ஏழைகளும் என்று பிரிவுபடுவதனை சமூக சம நிலையின்மை என்று குறிப்பிடு வர். நகரங்கள் உருவாவதற்கான அடிப்படையான செயற்பாடாக அமைந்தது இவ்வாறான சமூக வேறுபாடாகும்.




*வரைபடம் 7.2. புராதன பொலன்னறுவை நகரத்திட்டம்*

## 7.2 முதலாவது நகராக்கம்

கி.மு.450 அளவில் எமது நாட்டில் சமூக ஏற்றத்தாழ்வு ஓரளவுக்குப் பூரண நிலை அடைந்திருந்தது. அக்காலகட்டத்தில் மிகை உற்பத்தியைக் கொண்டிருந்த பிராந்தியப் பிரபுக்கள் பெருந்தொகையினர் உலர் வலயம் முழுவதும் பரந்து காணப்பட்டனர் என்று ஆரம்பக் கால கல்வெட்டுக்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. இதுவரை கண்டுபிடிக்கப்பட்டுள்ள கல்வெட்டுக் களில் பருமக என்று குறிப்பிடப்பட்டிருந்தோர் தொகை எண்ணிக்கையில் பெருந்தொகையினராக இருந்தனர்.

இப்பிரபுக்கள் ஒரே குடும்ப அமைப்பைக் கொண்டிருந்தனர். இப்பிரபுத்துவ குடும்பங்கள் தத்தமது குடும்பங்களின் அந்தஸ்தை வெளிக் காட்டும் ஒரு செயலாக, வெளிநாடுகளில் இருந்து தருவிக்கப்பட்ட மட்பாண்டங்கள், மணிகள் போன்றவற்றை பயன்படுத்தத் தூண்டப்பட்டனர். அநுராதபுரம், திஸ்ஸ மகாராமய ஆகிய பழைய நகரங்களில் செய்த அகழ்வுகளில் வெளி நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட மட்



*உரு .7.1. பாழடைந்து, காடடைந்து காணப்படும் தூபாராம தூபி, நகரம் வீழ்ச்சியடைந்த பின்னர் இவ்வாறான கட்டடங்கள் அனைத்தும் பாழடைந்தன. இப்படம் அண்மைக் காலத்தில் மேற்கொள்ளப்பட்ட புனர் நிர்மாணத்திற்கு முன்னர் எடுக்கப்பட்டது.*

பாண்டங்கள், மணிகள் என்பன கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவ்வாறான பரிமாற்றம் வெளிநாட்டு வர்த்தகத்துடன் கொண்டிருந்த தொடர்பின் விளைவாகும். இந்து சமுத்திரத்தில் அப்போது இடம்பெற்று வந்த வெளிநாட்டு வர்த்தகத்துடன் நேரடியாகத் தொடர்பு கொண்டதனால் பெருந்தொகைப் பணம் நாட்டினுள் வந்தது. உற்பத்தி மிகையைக் கொண்டிருந்த சிறு கூட்டத்தினர், வாழ்க்கைப் பிரச்சினை இன்றி தமது வாழ்வை ஆடரம்பரமாக நடத்திச் செல்வதற்குச் சந்தர்ப்பம் வாய்த்தது. நாட்டினுள் பெருகிய வருமானத்தை நிர்வகிப்பதற்கான தேவை ஒன்று ஏற்பட்டதால் நிர்வாகப் பொறிமுறையொன்றின் அவசியம் உணரப்பட்டது. மேலதிக உற்பத்திக்குச் சொந்தக்காரர்களான பிரபுக்கள் முறையாகத் திட்டமிடப்பட்ட குடியிருப்புகளில் ஒன்றுபட்டனர். வீதிகள், சந்தைகள், வணக்க வழிபாடுகளுக்கான கட்டடங்கள், அழகான பூங்காக்கள், பாதுகாப்பு மதில்கள், நீர்த்தேக்கங்கள் என்பவற்றைக் கொண்டிருந்த இவ்வாறான குடியிருப்புக்கள் நகரம் என்று குறிப்பிடப்பட்டன. புராதன அநுராதபுர நகரத்தை அவ்வாறு திட்டமிட்ட முறையில் பண்டுகாய மன்னன் நிர்மாணித்ததாக மகாவம்சத்தில் குறிப்பிடப்பட்டிருப்பதில் இருந்து இது உறுதியாகின்றது.

கிராமத்தின் விவசாயிகள் உற்பத்திசெய்த உணவு மற்றும் விலங்குணவுகள் மூலம் கிராமங்கள் தன்னிறைவுற்றுக் காணப்பட்டதுடன் உலோகக் கைத்தொழில் மற்றும் நீர்ப்பாசனத் தொழினுட்பம் உள்ளிட்ட பல்வேறு கைத்தொழில்களிலும் நீண்ட காலம் வினைத்திறனுடன் மக்கள் செயல்பட்டு வந்தமை காரணமாக சுமார் 1400 ஆண்டு காலமாக அநுராதபுரம் இலங்கையின் தலைநகரமாக சிறப்புடன் திகழ்ந்தது. தென் பகுதியில் அமைந்திருந்த மாகம நகரமும் அப்பிரதேசத்தின் கலாசாரத்தைக் காட்டும் கண்ணாடியாகத் திகழ்ந்தது.

கி.பி. 6 ஆம் நூற்றாண்டின் பின்னர் இந்து சமுத்திரத்தில் நடைபெற்று வந்த சர்வதேச வர்த்தகம் அராபிய வர்த்தகர் களின் கைகளுக்கு மாறியது. இந்து சமுத்திர வர்த்தக நட வடிக்கைகளில் உலகின் கவ னத்தைப் பெற்றிருந்த இந்து சமுத்திரத்தின் மேற்குப் பகுதி யின் வர்த்தக நடவடிக்கைகள் விஸ்தரிக்கப்பட்டதுடன் அதில் தென் கிழக்கு ஆசியாவும் தென் சீனாவும் இணைந்து கொண் டன.



உரு 7.2 . பொலன்னறுவை லங்காதிலக சிலைமனை அண்மைக் காலத்தில் மேற்கொள்ளப் பட்ட புனர் நிர்மாணத்திற்கு முன்னர் இருந்த நிலை. பொலன்னறுவையின் வீழ்ச்சியின் பின்னர் இவைகள் காடடைந்தன.

கி.பி. 9 ஆம் நூற்றாண்டின் பின்னர் இந்து சமுத்திர வர்த் தகம் சமுத்திரத்தின் கிழக்குப் பகுதியை மையமாகக் கொண்டு செயற்பட்டது. இம்மாற்றத்தால் ஏற்பட்ட நன்மைகளை இலங்கை பெற்றுக்கொள்ள வேண்டு மாயின் கிழக்குக் கரையில் உள்ள துறைமுகங்களை இயங்கச் செய்வதன் ஊடாக அத்துறைமுகங்களூடாக நாட்டுக்குக் கிடைக்கும் வரு மானத்தை நிர்வகிக்கவும் அதனூடாக நாட்டுக்குள் பிரவேசிக்கும் பல்வேறு நபர்களினால் பாதுகாப்பு தொடர்பாக ஏற்படும் அச்சுறுத்தல்களைத் தடுத்துக் கொள்வதற்காகவும் கிழக்குக் கரைக்கு சமீபமாக உள்ள தலைநகரமொன்றே ஆட்சி நிர்வாகத்தை மேற்கொள்ளப் பொருத்தமானது என்பதை தூரநோக்குடைய ஆட்சியாளர்கள் தெரிந்து வைத்திருந்தனர். முதலாம் விஜயபாகு மன்னன் தனது நிர்வாகத் தலைநகரமாகப் பொலன்னறுவையைத் தெரிவுசெய்வதில் இக்காரணம் நேரடியாகச் செல்வாக்கு செலுத் தியுள்ளமை தெரிகின்றது.

முதலாம் விஜயபாகுவிற்குப் பின்னர் ஆட் சிக்கு வந்த முதலாம் பராக்கிரமபாகு மன்னனின் ஆட்சிக் காலத்தில் நிலவிய சமூக நிலை, வெளி நாட்டுத் தொடர்பு என்பன பற்றி பரிசீலிக்கும் போது தென்கிழக்காசியாவின் வர்த்தகத் தொடர்பு, அக்கால இலங்கையின் அரசியல், சமய, பொருளாதாரத் துறைகளில் எவ்வாறான பாதிப் பினைச் செலுத்தியுள்ளது என்பது தெளிவாகும். மகாவம்சத்தில் குறிப்பிடப்படுவதன்படி முதலாம் விஜயபாகு மன்னனின் பின்னர் ஆட்சிக்கு வந்த அரசர்கள் பர்மா, கம்போடியா முதலிய தென்கிழக்காசிய நாட்டு அரச குலப் பெண்களைத் திருமணம் செய்துள்ளனர். பொலன்னறுவைக் காலப் பகுதியில் அந்நாட்டில் உருவான கட்டட சிற்பக் கலைப் படைப்புகளில் அதாவது புத்தர் சிலைகளிலும் சமயக் கட்டடங்களிலும் தென்

கிழக்காசிய நாடுகளின் கலைப் பண்புகள் தெளிவாக வெளிப்படுகின்றன. பொலன்னறுவை கல்விகாரை புத்தர் சிலை, சத்மஹல் பிரசாதய எனும் ஏழடுக்கு மாளிகை என்பன இதற்குச் சிறந்த உதாரணங்களாகும்.

## 7.3 பொலன்னறுவை இராசதானி வீழ்ச்சியடைதல்

அநுராதபுர இராசதானியின் இறுதி ஆட்சியாள னான ஐந்தாம் மஹிந்த மன்னனின் காலத்தில் நிகழ்ந்த சோழ ஆக்கிரமிப்பினால் அவ்விராச் சியம் வீழ்ச்சியடைந்த பின்னர் முதலாம் விஜயபாகு மன்னன் சோழரிடமிருந்து நாட்டை மீட்டு பொலன்னறுவையைத் தலைநகராகக் கொண்டு முழு நாட்டையும் ஒருகுடையின் கீழ் ஆட்சி செய்தான். முதலாம் விஜயபாகு மன்னனின் மறைவையடுத்து ஏற்பட்ட சிம்மாசன உரிமைப் போராட்டம் காரணமாக ஏற்பட்ட ஆட்சி உறுதியின்மையை முடிவுக்குக் கொண்டு வந்து மீண்டும் நாட்டை ஒற்றுமைப்படுத்தியவன் முதலாம் பராக்கிரமபாகு மன்னனாவான். இவன் பொலன்னறுவை நகரை அபிவிருத்தி செய்ததுடன் நாடளாவிய ரீதியில் நீர்ப்பாசன நடவடிக்கைகளை மேற்கொண்டு மீண்டும் இலங்கையில் செழிப்பான யுகம் ஒன்றை உருவாக்கினான். ஆயினும் அம்மன்னனின் மறைவையடுத்து ஏற்பட்ட அரசியல் குழப்பநிலை காரணமாக பொலன்னறுவை இராசதானி வீழ்ச்சியை நோக்கி நகர்ந்ததை அவதானிக்க முடிகின்றது. முத லாம் பராக்கிரமபாகுவின் பின்னர் உறுதியான ஒன்பது வருட ஆட்சியை மேற்கொண்டவன் நிஸ்ஸங்கமல்லன் மட்டுமே. இவ்வாறு பொலன் னறுவை இராசதானி படிப்படியாக வீழ்ச் சியடைந்தமைக்கான காரணங்கள் பலவாகும்.

### 1. பலவீனமான மன்னர்கள் ஆட்சிபீடம் ஏறியமை

முதலாம் பராக்கிரமபாகு மன்னனின் மரணம் சம்பவித்த கி.பி. 1186 ஆம் ஆண்டிலிருந்து பொலன்னறுவை வீழ்ச்சியடைந்த கி.பி. 1215 ஆம் ஆண்டு வரையிலான 29 வருட காலப் பகுதியில் பன்னிரண்டு ஆட்சியாளர்கள் பதவி வகித்துள்ளனர். அவர்களுள் நிஸ்ஸங்கமல்ல மன்னனின் 9 ஆண்டு கால ஆட்சி தவிர்ந்த ஏனைய ஆட்சியாளர்களின் காலப்பகுதி மிகக் குறுகியதாகும். இதிலிருந்து தெளிவாவது யாதெனில் அவ்வாட்சியாளர்களால் அரசியல் உறுதித் தன்மையைப் பேண முடியவில்லை என் பதாகும். இது பொலன்னறுவையின் வீழ்ச்சிக்கு முக்கியமான காரணியாகும்.

### 2. கலிங்க, பாண்டிய வம்சங்களிடையே ஏற்பட்ட ஆட்சியதிகாரப் போராட்டம்

முதலாம் விஜயபாகு மன்னனின் மறைவையடுத்து இலங்கையிலிருந்த கலிங்க வம்சத்தவருக்கும் பாண்டிய வம்சத்தவருக்கும் இடையில் அதிகாரப் போராட்டம் உக்கிரமடைந்தது. கலிங்க வம்ச ஆதரவாளர்கள் அந்த வம்சத்தவர்களை ஆட்சி பீடமேற்ற முயற்சித்தனர். எனவே கலிங்க வம்ச ஆட்சியாளனான நிஸ்ஸங்கமல்ல மன்னனின் மறைவையடுத்து அவனது சகோதரியின் மகனான சோடகங்கனும் சகோதரனான சாகச மல்லனும் நிஸ்ஸங்கமல்லனின் மனைவியான கல்யாணவதியும் இடையிடையே ஆட்சி பீடமேறினர். பரண் வம்சத்தினர் முதலாம் பராக்கிரமபாகுவின் மனைவியான லீலாவதியை மூன்றுமுறை ஆட்சியில் ஏற்றினர். இவ்வாறு கலிங்க - பாண்டிய அரசுரிமைப் போட்டி இராச தானியின் வீழ்ச்சிக்கு வழிவகுத்தது.

### 3. பொருளாதார வீழ்ச்சி

நிஸ்ஸங்கமல்ல மன்னனின் மறைவையடுத்து பலவீனமான மன்னர்கள் ஆட்சிபீடமேறியமை யாலும் அவர்களால் அரசியல் உறுதித் தன்மை யைப் பேண முடியாமையாலும் அவர்களால் குளங்கள், கால்வாய்கள் உள்ளிட்ட நீர்ப்பாசனக் கட்டமைப்பை பராமரிக்க முடியாமற்போன மையை அறியமுடிகின்றது. அரசியல் குழப்பம் நிலவிய இக்காலப்பகுதியில் பிரதேச நிர்வாகமும் சீர்குலைந்திருக்கலாம். எனவே விவசாயமும் விவசாய நடவடிக்கைகளும் நலிவடைந்ததால் பொருளாதாரநிலை வீழ்ச்சி கண்டதுடன் அது இராசதானியின் வீழ்ச்சிக்கும் காரணமாக அமைந் தது.

### 4. கலிங்க மாகனின் ஆக்கிரமிப்பு

பொலன்னறுவை இராசதானியின் வீழ்ச்சிக்கான உடனடிக் காரணம் கலிங்க மாகனின் ஆக்கி ரமிப்பாகும். கலிங்க நாட்டிலிருந்து மாகன் என்பவன் பாரிய படையணி ஒன்றுடன் கி.பி. 1215 ஆம் ஆண்டு இலங்கையை ஆக்கிரமித்தபோது நாட்டில் காணப்பட்ட பலவீனமான அரசியல் நிலைமை காரணமாக அதற்கு முகங்கொடுப்பதற்கு இலங்கையரால் முடியாதிருந்தது. எனவே பொலன்னறுவை உட்பட இராசரட்டையை மாகனின் படையினர் முற்றுகையிட்டனர். மாகனின் அழிவு நாச வேலைகளின் விளைவாக தலைநகரான பொலன்னறுவை மட்டுமல்லாது

1500 ஆண்டு காலம் நின்று நிலைத்த இராச ரட்டையின் நீர் வள நாகரிகமும் நிர்மூலமானதைக் காணமுடிகின்றது.

மாகனின் ஆக்கிரமிப்பினால் ஏற்பட்ட அழிவு நாசத்தை மகாவம்சம் பின்வருமாறு கூறுகின்றது.

''ஆக்கிரமிப்பாளர்கள் மக்களைக் கட்டிவைத்து வதைத்து அவர்களது செல்வங்களைச் சூறையாடி அம்மக்களை ஏழைகளாக்கினர். புத்தர் சிலைகளை உடைத்தெறிந்தனர். விகாரைச் சொத்துக்களை கொள்ளையடித்தனர். பக்தர்களைத் தாக்கினர். சிறுவர்களையும் அடித்துத் துன்புறுத்தினர்.''

இவ்வாறு மாகனின் படைகள் மேற்கொண்ட அழிவு நாச வேலைகளால் இராசரட்டை மக்களின் வாழ்க்கைக்கும் சொத்துக்களுக்கும் பாதுகாப்பு இல்லாமல் போனது.

எனவே தொல்லைகளுக்காளான பௌத்த பிக்குகளும் பொதுமக்களும் பாதுகாப்புக் கருதி உருகுணைரட்டை எனும் தென்பகுதிக்கும் மாயாரட்டை எனும் மேற்குப் பகுதிக்கும் புலம் பெயர்ந்தனர். இதனால் இராசரட்டையின் பல பகுதிகளும் சனசந்தடியற்ற நிலையை அடைந்தன. மத்திய நிர்வாகத்திலிருந்து பிரிந்த சில பிரதேசங்கள் வன்னிப் பிரதேசங்களாக மாறின. ஆயிரக்கணக்கான மக்கள் தினமும் வணங்கி வழிபட்டு வந்த ருவன்வெலிசாய, அபயகிரி, ஜேத்தவனராமய முதலிய விகாரைகள் காடுகளாக மாறின. இராசரட்டையின் சனச்செறிவான நகரங்கள் பலவும் சிதைவுகளாகவும் எச்சங்களாகவும் மாறின.

**புராதன நகரங்களின் வீழ்ச்சிக்கான காரணங்கள் :**

- எதிரிகளின் ஆக்கிரமிப்பு.
- மத்திய அரச நிர்வாகம் சீர்குலைந்தமை.
- பாதுகாப்பு இல்லாமல் போனமை.
- வர்த்தகமும் போக்குவரத்தும் தடைப்பட்டமை.
- மக்கள் வேறு இடங்கள் நோக்கிப் புலம் பெயர்ந்தமை.

## 7.4 இரண்டாவது நகரமயமாக்கம்

உலர்வலய நகரங்களும் அவற்றின் செழிப்புத் தன்மையும் வீழ்ச்சியடைந்ததைத் தொடர்ந்து குறுகிய காலத்தில் உலர் வலயத்திற்கு வெளியே குறிப்பாக தென்மேற்குப் பிரதேசத்தில் சில நகரங்கள் உருவானதைக் காணமுடிகின்றது. இது மற்றுமொரு நகரமயமாக்கத்தின் பிரதிபலிப்பாகும். அரசியல் அதிகாரம் பன்முகப்படுத்தப் பட்டமையால் நிர்வாக மையங்கள் சமகாலத்தில் செயற்பட்டமை, புதிய துறைமுகங்கள் வளர்ச்சியடைந்தமை, இலக்கியங்கள் எழுச்சியடைந்ததைத் தொடர்ந்து இடம்பெற்ற அறிவு மறுமலர்ச்சி என்பன இரண்டாவது நகரமய மாக்கத்தை அறிமுகம் செய்வதற்குப் போதிய அடிப்படைகளாக அமைந்துள்ளன. புதிய வர்த்தகத் தொடர்பு வலையமைப்பு உருவாதலும் அதனூடாக வியாபார நடவடிக்கைகள் விரிவடைந்ததும் இக்காலத்தில் ஏற்பட்ட நகரவிருத்தியில் கவனத்தில் கொள்ளப்பட வேண்டிய மற்றுமொரு முக்கிய நோக்கமாகும்.

இரண்டாம் நகரமயமாக்கல் செயற்பாட்டின்போது உருவான நகரங்களை அதற்கு முன்னைய காலத்தில் நிலவிய மகா நகரங்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் தெரியும் வேறுபாடு யாதெனில், இரண்டாம் நகராக்கத்தின்போது வளர்ச்சியடைந்த நகரங்களின் திட்ட வரைபடங்கள், முன்னைய நகரத் திட்ட வரைபடங்களில் காணப்பட்ட கேத்திரகணித பொறிமுறைத் தன்மையின்றிக் காணப்பட்டமையாகும். நகரங்களின் அளவை ஒப்பிடும்போதும் இந்நகரங்கள் அனுராதபுரம், பொலன்னறுவை அளவு பெரியவனவாகக் காணப்படவில்லை. இவ்வேறுபாட்டிற்கான காரணம் இரண்டாம் நகரமயமாக்கல் காலத்தில் இலங்கை அரசியலில் காணப்பட்ட அதிகாரப் பரவலாக்கமாக இருக்கலாம் என்று துறைசார் அறிஞர்கள் சுட்டிக்காட்டுகின்றனர்.

### 7.4.1 **தம்பதெனியா**

கி.பி. 1215 இல் பொலன்னறுவை இராசதானி வீழ்ச்சியடைந்ததில் இருந்து 1232 இல் தம்பதெனியா தலைநகராகும் வரையுமான காலப்பகுதி இலங்கையின் வரலாற்றில் குழப்பகரமானதாகும். நாட்டின் தலைநகரம் எதிரியின் கைகளில் அகப்பட்டிருந்த கஷ்டமான அக்காலகட்டத்தில் சில தேசியத் தலைவர்கள் பாதுகாப்பு அரண்களை அமைத்து அங்கிருந்தவாறு புத்த சாசனத்தையும் நாட்டையும் பாதுகாத்து வந்ததாக மகாவம்சம் கூறுகின்றது. யாப்பகுவ மலைக்குன்றின் உச்சியில் கோட்டை கட்டி அப்பகுதியைப் பாதுகாத்த சுப தளபதி, உருகுணுரட்டையில் கோவிந்த மலையில் பாதுகாப்பு அரணமைத்து எதிரிகள் தென் பகுதியில் பிரவேசிப்பதைத் தடுத்த புவனேகபாகு ஆதிபாதன் (இளவரசன்) மற்றும் மஹியங்கனைக்கு அண்மையில் மினிப்பே எனும் இடத்தில் மகாவலி கங்கைக் கரையிலமைந்த

மலைப் பகுதியில் கோட்டை கட்டியிருந்த சங்க தளபதி என்போர் அவர்களுள் பிரதானமானவர்களாவர். மேற்கூறப்பட்ட இவர்கள் இவ்வாறு நாட்டின் பாதுகாப்புக் கருதி, செயற்பட்ட போதிலும் தமது அதிகாரத்திலுள்ள பிரதேசத்தைப் பாதுகாக்கும் நோக்கத்துடன் செயற்பட்டார்களேயன்றி அதற்கு மேலதிகமாகப் பகைவர்களை அடக்கி, நாட்டை ஒற்றுமைப்படுத்த வேண்டும் என்ற எண்ணம் எவருக்கும் இருக்கவில்லை. அவ்வாறான நோக்கத்தில் செயற்பட்டவன் அக்காலத்தில் தம்பதெனியாவில் வாழ்ந்த மூன்றாம் விஜயபாகு ஆவான். அவன் கி.பி. 1232 - 1236 இற்கும் இடைப்பட்ட காலப்பகுதியில் தம்பதெனியாவைத் தனது நிர்வாக மத்திய நிலையமாகக் கொண்டு ஆட்சி செய்தான். அக்காலத்தில் தம்பதெனியா நகர் ஒன்றுக்குத் தேவையான அம்சங்களுடன் வளர்ச்சியடைந்தது.

கி.பி.1232 ஆம் ஆண்டு மூன்றாம் விஜயபாகு மன்னனே தம்பதெனியாவைத் தலைநகராக மாற்றினான். இராசரட்டையின் அரச குடும்பத்தினருடன் இம்மன்னனுக்கிருந்த உறவு முறையைப் பற்றிய ஆதாரங்கள் இல்லை. இம்மன்னன் ஆரம்ப காலத்தில் வன்னித் தலைவனொருவனாகச் செயற்பட்டு வந்ததாக மூலாதாரங்கள் குறிப்பிடுகின்றன. வன்னி என்பது இராசரட்டையின் வீழ்ச் சிக்குப் பின்னர் உருவான பிரதான பிரதேச ஆட்சி அலகொன்றாகும். எனவே, ஆரம்ப காலத்தில் பிரதேச ஆட்சியாளனாக இருந்த விஜயபாகு மாயரட்டையின் எதிரிகளைத் துரத்தி தம்பதெனியாவைத் தலைநகராக உருவாக்கியமை தெரியவருகின்றது. பொலன்ன றுவை வெளிநாட்டு ஆக்கிரமிப்புக்கு உட்பட்ட போது புத்தரின் புனித தந்ததாது மற்றும் பாத்திர தாதுகளைப் பௌத்த பிக்குகள் பாதுகாப்புக் கருதி கொத்மலையில் ஒழித்து வைத்திருந்தனர். மூன்றாம் விஜயபாகு மன்னன் பெலிகலை யில் தலதா மாளிகை அமைத்து கொத் மலையிலிருந்த புனித சின்னங்களைக் கொண்டு வந்து பிரதிஷ்டை செய்தான். புனித தந்ததாது விஜயபாகுவிற்கு உரிமையானதிலிருந்து பொது மக்கள் அவனை இலங்கையின் அரசனாக ஏற்றுக் கொண்டனர். எனவே தம்பதெனிய நகரமும் முக்கியத்துவம் பெற்றது. களனி விகாரையைப் புனர்நிர்மாணம் செய்தமை, தம்பதெனியாவில்



வரைபடம் 7.3. பழைய யாப்பகுவ நகரத் திட்டம்

விஜயசுந்தாராமய விகாரையைக் கட்டியமை, உப சம்பதா சடங்கை நிகழ்த்திப் புத்த சாசனத்தைத் தூய்மைப்படுத்தியமை, அழிந்து போன பௌத்த சமய நூல்களை மீண்டும் எழுதுவித்தமை, முதலிய பல்வேறு சமய, தேசிய சேவைகளை விஜயபாகு மன்னன் மேற்கொண்டான்.

வயது முதிர்ந்த பருவத்தில் ஆட்சி பீடமேறிய இம்மன்னன் நான்காவது ஆட்சி வருடமான கி.பி. 1236 இல் மரணமடைந்தான்.

### இரண்டாம் பராக்கிரமபாகு மன்னன் (கி.பி. 1236 - 1270)

மூன்றாம் விஜயபாகு மன்னனுக்குப் பராக்கிரம பாகு, புவனேகபாகு எனும் இரு பிள்ளைகள் இருந்தனர். மன்னனின் மறைவுக்குப் பின்னர் மூத்தவனான பராக்கிரமபாகு கி.பி. 1236 ஆம் ஆண்டு இரண்டாம் பராக்கிரமபாகு எனும் பெயரில் அரசனானான். இவன் சிறு பராயத்திலே சிறந்த கல்வியைப் பெற்றிருந்தான். சங்கரக்கித மகாதேரர் தலைமையிலான பௌத்த பிக்குகளிடம்

கல்வியைப் பெற்றிருந்த மன்னன் கல்வியறிவு கொண்ட பண்டிதனாகத் திகழ்ந்தான். எனவே இம் மன்னன் "கலிகால சாகித்ய சர்வக்ஞ பண்டிதன்'' எனும் புகழ் நாமத்தைப் பெற்றான். இரண்டாம் பராக்கிரமபாகு மன்னன் எழுதிய ''கவிசிலுமின'' எனும் காவிய நூல் இன்றும் நிலைத்திருக்கின்றது.

இரண்டாம் பராக்கிரமபாகு ஆட்சிக்கு வரும் போதும் இலங்கை எதிரிகளின் ஆக்கிரமிப்பில் இருந்து விடுபட்டிருக்கவில்லை. அதேபோன்று புதியதொரு வெளிநாட்டு ஆக்கிரமிப்புக்கும் மன்னன் முகங்கொடுக்கவேண்டியிருந்தது. ஆயினும் அவன் ஒரு அறிவாளியாகவும் கல்வி மானாகவும் திகழ்ந்தமையால் அச்சவால்களை வெற்றிகரமாக முறியடித்தான்.

இரண்டாம் பராக்கிரமபாகு மன்னன் கலிங்க மாகனுடன் போர் செய்வதற்குத் தயாராகவிருந்த சந்தர்ப்பத்தில் அவனது பதினோராவது ஆட்சி வருடமான கி.பி. 1247 இல் சந்திரபானு எனும் ஜாவா நாட்டு ஆக்கிரமிப்பாளன் பெரும்படை யுடன் இலங்கைக்கு வந்திறங்கினான். அதுவரை காலமும் இந்தியாவிலிருந்தே இலங்கைக்கு வெளிநாட்டுப் படையெடுப்புகள் நிகழ்ந்ததுண்டு. ஆனால் சந்திரபானு தென்கிழக்காசியாவின் மலாயா குடா நாட்டின் வட பகுதியைச் சேர்ந்தவனாவான். அக்காலப் பகுதியில் அது ஒரு பௌத்த நாடாகத் திகழ்ந்தது.

எனவே சந்திரபானு பௌத்த புனித சின் னங்களைப் பெற்றுக்கொள்ளும் நோக்கிலேயே வந்திருக்கலாம். கி.பி. 1247 ஆம் ஆண்டு இரண்டாம் பராக்கிரமபாகு மன்னனின் படையினர் சந்திரபானுவின் படையினரைத் துரத்தியடித்தனர். இரண்டாம் பராக்கிரமபாகு மன்னன் எதிர் கொண்ட மாபெரும் சவாலாயமைந்தது மாகனின் ஆட்சியில் இருந்து இராசரட்டையை மீட்பதாகும். 40 வருடங்கள் இராசரட்டையை ஆட்சிசெய்த மாகன் கோட்டைகளை அமைத்து பாதுகாப்பைப் பலப்படுத்தியிருந்தான். எனவே மாகனுக்கு எதிராகத் திட்டமிட்ட வகையில் தாக்குதலை மேற்கொள்ளவேண்டியதாயிருந்தது. எனவே மன்னன் தனது படையினர் மூலம் கிழக்காகவும் மேற்காகவும் பொலன்னறுவையைச் சுற்றி வளைத்தான். இதனை முறியடிப்பதற்காக மாகனின் படையினர் தமது கோட்டைகளிலிருந்து பொலன்னறுவையை நோக்கி வந்தனர். இரண்டாம் பராக்கிரமபாகு மன்னனின் படையினரின் தாக்குதலினால் மாகனின் படை படுதோல்வி அடைந்தது. இந்தப் போர் 1255 ஆம் ஆண்டு நடைபெற்றதாகக் கூறப்படுகின்றது. மாகனிடமிருந்து இராச ரட்டையைக் கைப்பற்றியமை 2 ஆம் பராக்கிரமபாகு அடைந்த மாபெரும் வெற்றியாகும்.



*வரைபடம். 7.4. பழைய குருணாகல் நகர அமைப்பு*

முன்னர் தோல்வியடைந்து சென்ற சந்திரபானு இந்தியாவிலிருந்து கூலிப்படை யொன்றுடன் கி.பி. 1261 ஆம் ஆண்டில் மீண்டும் இலங்கை மீது படையெடுத்தான். பாரிய படையுடன் வந்து தம்பதெனியாவை முற்றுகையிட்ட சந்திரபானு புனித தந்த தாது மற்றும் பாத்திர தாதுக்களுடன் ஆட்சி யையும் தன்னிடம் ஒப்படைக்குமாறு அரசனை அச்சுறுத்தினான். எனவே இரண்டு படையினரிடையேயும் பாரிய யுத்தமொன்று மீண்டும் நடைபெற்றது. இப்போரின்போது தென்னிந்தியாவின் பாண்டியப் பேரரசிடமிருந்து இரண்டாம் பராக்கிரமபாகு மன்னனுக்குப் படை உதவி கிடைத்ததாக அறிய முடிகின்றது. இப்போரின்போது எதிரிகளின் படை படு தோல்வி அடைந்ததோடு சந்திரபானுவும்

கொல்லப்பட்டான். இரண்டாம் பராக்கிரமபாகு மன்னன் எதிரிகளிடமிருந்து நாட்டை மீட்கும் நடவடிக்கைகளில் ஈடுபட நேர்ந்தமையால் தேவபதிராஜ எனும் அமைச்சரின் உதவியுடன் பொருளாதார சமய கல்வித் துறைகளில் பாரிய வளர்ச்சி காணும் வகையில் செயற்பட்டான்.

### 7.4.2 யாப்பகுவ

கி.பி.1270 ஆம் ஆண்டு இரண்டாம் பராக்கிரமபாகு மன்னனின் மறைவைத் தொடர்ந்து அவரது மகன் விஜயபாகு அரசனானான். இவன் நான்காம் விஜயபாகு எனப்படுகின்றான். போசத் விஜயபாகு எனும் பெயரில் புகழடைந்த இம்மன்னனின் ஆட்சிக் காலம் இரண்டு வருடங்களாகும். அரச மாளிகையில் ஏற்பட்ட இராணுவ சதியொன்றின் மூலம் இம்மன்னன் கொல்லப்பட்டான். அதனையடுத்து நான்காம் விஜயபாகு மன்னனின் சகோதரனான புவனேகபாகு இளவரசன் சதிகாரர்களை முறியடித்து கி.பி. 1272 இல் ஆட்சியைக் கைப்பற்றினான். இவன் முதலாம் புவனேகபாகு எனும் பெயரில் அழைக்கப்பட்டான். இம்மன்னன் எதிர்கொண்ட பல சவால்களை வெற்றிகரமாக முறியடித்தான். முதலாம் புவனேகபாகு ஆட்சிபீடமேறிய ஆரம்பத்தில் வன்னித் தலைவர்கள் சிலர் மன்னனை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தனர். இதே காலப்பகுதியில் தென்னிந்தியப்படையெடுப்புக்கள்சிலவற்றிற்கும் மன்னன் முகங்கொடுக்க நேரிட்டது. அதில் ஒன்று காலிங்கராயர் எனும் தளபதியின் படையெடுப்பாகும். சோடகங்கன் எனும் தளபதியின் படையெடுப்பும் அடுத்து இடம்பெற்றது. இந்த ஆக்கிரமிப்புகளை வெற்றிகரமாக முறியடித்த இம்மன்னன் தம்பதெனியாவில் சில காலம் இருந்தபின்னர் பாதுகாப்புக் கருதி யாப்பகுவ எனும் கோட்டையைத் தனது தலைநகராக்கிக் கொண்டான்.

முதலாம் புவனேகபாகு மன்னன் வெளிநாடுகளுடன் வர்த்தகத் தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்வதில் அதிக ஆர்வம் காட்டினான். இம்மன்னனால் எகிப்துக்கு அனுப்பப்பட்ட வர்த்தகத் தூதுக் குழுவினர் கி.பி. 1283 ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதம் கெய்ரோ நகரில் வைத்து எகிப்திய சுல்தானால் வரவேற்கப்பட்டதாக அறிக்கைகள் கூறுகின்றன. அடுத்த ஆண்டில் கி.பி. 1284 இல் புவனேபாகு மரணமடைந்தான்.

முதலாம் புவனேகபாகு மன்னனின் மரணத்தைத் தொடர்ந்து போசத் விஜயபாகு மன்னனின் மகன் பராக்கிரமபாகு இளவரசனுக்கும் முதலாம் புவனேகபாகு மன்னனின் மகனான இரண்டாம் புவனேகபாகு இளவரசனுக்குமிடையில் ஆட்சியுரிமை தொடர்பான பிரச்சினை ஏற்பட்டது. இந்தச் சந்தர்ப்பத்தில் தென்னிந்தியாவில் இருந்து ஆரியச் சக்கரவர்த்தி எனும் குறுநில மன்னன் தலைமையில் வந்த பாண்டிய நாட்டுப் படையினர் இலங்கை வந்து யாப்பகுவ கோட்டையைத் தாக்கி அங்கிருந்த புனித தந்ததாதுவைக் கொண்டு சென்று பாண்டிய மன்னனான குலசேகரனிடம் ஒப்படைத்தனர். அதனையடுத்து மேற்கூறிய போசத் விஜயபாகு மன்னனின் மகனான பராக்கிரமபாகு இளவரசன் பாண்டிய நாடு சென்று மன்னனைச் சந்தித்து உரையாடிப் புனித தந்ததாதுவைப் பெற்றுக்கொண்டு இலங்கை வந்து பொலன்னறுவையிலிருந்து ஆட்சி நடவடிக்கைகளை மேற்கொண்டான். மூன்றாம் பராக்கிமபாகு எனும் பெயரில் அழைக்கப்படும் இம்மன்னனின் ஆட்சி கி.பி. 1287 - கி.பி. 1293 வரையான காலப்பகுதியைக் கொண்டிருந்தது. 1293 இல் பொலன்னறுவைமீது படையெடுத்த இரண்டாம் புவனேகபாகு இளவரசன் மூன்றாம் பராக்கிரமபாகுவை வென்று குருணாகலையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிசெய்தான்.

### 7.4.3. குருணாகல்

மேற்கூறிய இரண்டாம் புவனேகபாகு மன்னனே குருணாகலையின் முதலாவது மன்னனாவான். இவன் கி.பி. 1293 ஆம் ஆண்டிலிருந்து சுமார் ஒன்பது ஆண்டுகள் ஆட்சிசெய்தான். இரண்டாம் புவனேபாகு மன்னனின் பின்னர் அவனது மகன் நான்காம் பராக்கிரமபாகு எனும் பெயரில் குருணாகல் இராசதானியின் ஆட்சியாளனானான். இந்நாட்டு வரலாற்றில் நான்காவதாக வரும் பராக்கிரமபாகு என்பதால் நான்காவது பராக்கிரமபாகு எனப்படுகின்றான். சரசோதி மாலை எனும் தமிழ் நூலில் குறிப்பிடப்பட்டுள்ளபடி அவன் கி.பி. 1302 ஆம் ஆண்டு ஆட்சிபீடமேறியதாக அறிய முடிகின்றது.

குருணாகலைக் காலத்தில் பௌத்த சமயத்தின் வளர்ச்சிக்கும் கல்வி மற்றும் கலைகளின் வளர்ச்சிக்கும் நான்காம் பராக்கிரமபாகு மன்னன் பங்களிப்புச் செய்துள்ளான். அதுவரை காலமும் பாளி மொழியிலிருந்த ஜாதகக் கதைப் புத்தகம் '' பன்சிய பனஸ் ஜாதகய '' (550 ஜாதகக் கதைகள்) எனும் பெயரில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளமை இக்காலப் பகுதியில் நிகழ்ந்த சிறப்பான சேவைகளுள் ஒன்றாகும். தலதா சிரித், சிங்கள போதி வம்சம், அனாகத்த வம்சம், தலதா பூஜாவலிய முதலிய நூல்களும் இக்காலப் பகுதியில் எழுதப்பட்டவையாகும். நான்காம் பராக்கிரமபாகு

மன்னனுக்குப் பின்னர் மூன்றாம் புவனேகபாகு அல்லது வன்னி புவனேகபாகு மற்றும் ஐந்தாம் விஜயபாகு அல்லது சவுலு விஜயபாகு எனும் இரு மன்னர்களும் குருணாகலையிலிருந்து ஆட்சிசெய்தனர். இம்மன்னர்களின் ஆட்சி நடவடிக்கைகள் பற்றிய மேலதிக விபரங்கள் கிடைக்கப் பெறவில்லை. ஆயினும் மூன்றாம் புவனேகபாகு மன்னனால் குருணாகலைக் குளம் கட்டப்பட்டதாக நாட்டார் கதைகள் கூறுகின்றன.

### 7.4.4. கம்பளை இராசதானி

1341 ஆம் ஆண்டு நான்காம் புவனேகபாகு மன்னனால் கம்பளை தலைநகரமாக்கப்பட்டது. இம்மன்னன் குருணாகலையின் இறுதி ஆட்சி யாளனான சவுளு விஜயபாகு மன்னனின் மகனாவான். நான்காம் புவனேகபாகு மன்னனின் சகோதரனான ஐந்தாம் பராக்கிரமபாகு என்பவன் சமகாலத்தில் தெடிகமவைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்தான். கம்பளை அரசாட் சிக் காலம் ஆரம்பமாகும்போது தெடிகமவுக்கு மேலதிகமாக இன்னும் இரு இராசதானிகள் உருவாகி இருந்தன. ஆரியச்சக்கரவர்த்தி ஆட்சி யாளர்களின் கீழ் யாழ்ப்பாண இராசதானியும், அழகேஸ்வர பரம்பரையால் றைகம இராச தானியும் ஆட்சி செய்யப்பட்டமையால் கம்பளை இராசதானி பல சவால்களுக்கு முகங்கொடுக்க நேரிட்டது.

கம்பளை இராசதானிக் காலத்தில் விசேடமான சில பண்புகளைக் காணமுடிகின்றது. கம்பளை அரச குடும்பத்துடன் நெருங்கிய உறவு கொண் டிருந்த இரு பிரபுக் குடும்பங்கள் காணப்படுவது அதில் சிறப்பம்சமாகும். சேனாலங்காதிகார செனவிரத் குடும்பம் அதில் ஒன்றாகும். சேனாலங்காதிகார செனவி எனும் தளபதி தெடிகம பராக்கிரமபாகுவின் சகோதரியைத் திருமணம் செய்திருந்தார். இத்தம்பதியினரின் மகனே பிற்காலத்தில் மூன்றாம் விக்கிரமபாகு எனும் பெயரில் கம்பளை அரசனானான். றைகமவில் இருந்த அழகேஸ்வரக் குடும்பம் இரண்டாவதாகும். இக்குடும்பத்தில் நிஸ்ஸங்க அழகேஸ்வர சிறப்பிடம் பெறுகின்றார்.

கம்பளை காலத்தில் தந்தையிடமிருந்து மகனுக் கும் மூத்த சகோதரனிடமிருந்து இளைய சகோ தரனுக்கும் என்றிருந்த மரபு ரீதியான அரச உரிமை முறை மாற்றமடைந்தது. அதாவது மாமனாருக்குப் பின்னர் மருமகனுக்கும் அல்லது அரசனின் சகோதரியின் மகனுக்கு என்று அரச உரிமை மாற்றமடைந்தது. இது தந்தை வழி அரசுரிமைக்கு மாற்றமான தாய்வழி அரசுரிமையாகும்.

கம்பளை காலத்தில் இபின் பதூதா எனும் அராபிய தேசசஞ்சாரி இங்கு வந்ததுடன் இலங்கை பற்றிய குறிப்புகளையும் எழுதி இருப்பதும் முக்கியத் துவம் பெறுகின்றது. கி.பி. 1344 ஆம் ஆண்டு யாழ்ப்பாணம் சென்ற இபின் பதுதா ஆரியச் சக்கரவர்த்தி ஆட்சியாளர்களின் உதவியைப் பெற்று சிவனொளிபாத மலையை தரிசிக்கச் சென்றார். அவரது அறிக்கையில் ஓரிடத்தில் வெள்ளை யானை ஒன்றை வைத்திருந்த அழகக் கோணார் எனும் பிரதேச ஆட்சியாளன் பற்றிக் குறிப்பிடுகின்றார். அவர் அழகக்கோணார் பரம் பரையைச் சேர்ந்தவராவார்.

கம்பளை மூன்றாம் விக்கிரமபாகு மன்னனின் ஆட்சிக் காலப்பகுதியில் வடக்கில் ஆட்சி செய்த ஆரியச்சக்கரவர்த்தியின் அதிகாரிகள் கம்பளை இராசதானிக்குரிய சில பகுதிகளில் திறை பெற்றதாகக் குறிப்பிடப்படுகின்றது. இது கம்பளை இராசதானிக்குக் களங்கமாக அமைந் ததுடன் பொருளாதாரத்தையும் பாதித்தது. எனவே அரசனின் பிரதம அமைச்சரான நிஸ்ஸங்க அழகேஸ்வர ஸ்ரீ ஜயவர்தனபுரவில் கோட்டை கட்டி அதில் படையினரைக் குவித்து ஆரியச் சக்கரவர்த்தியின் அலுவலர்களுக்குத் தடை விதித்தார். ஆரியச்சக்கரவர்த்தி கம்பளையை ஆக்கிரமித்தபோது அழகேஸ்வரரின் படை அதனை முறியடித்தது. நிஸ்ஸங்க அழகேஸ்வரரின் செயற்பாடுகள் காரணமாக கம்பளை இராச தானி பலமடைந்தது. ஆயினும் பிற்காலத்தில் அழகேஸ்வர குடும்பத்தினரிடையே கருத்து வேற்றுமை ஏற்பட்டதாகத் தெரிகின்றது.

கம்பளைக் காலத்தின் இறுதிப்பகுதியில் சீன நாட்டு ஆக்கிரமிப்பொன்று இலங்கைமீது மேற்கொள்ளப்பட்டது. சீனாவில் யுங்லோ எனும் பேரரசனால் அனுப்பப்பட்ட செங்ஹோ எனும் தளபதி 1405, 1409, 1411 ஆகிய வருடங்களில் இலங்கை வந்துள்ளார். அவ்வாறு கி.பி. 1409 ஆம் ஆண்டு வருகை தந்தபோது றைகமவிலிருந்த ஆட்சியாளனான வீர அழகேஸ்வர என்பவன் சீனத் தளபதியை முறைப்படி வரவேற்கத் தவறிவிட்டான். எனவே செங்ஹோ தான்

கொண்டுவந்த காணிக்கைகளைத் தேவேந்திர முனை ஆலயத்துக்கு வழங்கிய பின்னர் சீனம், பாரசீகம், தமிழ் ஆகிய மும்மொழிகளில் கல்வெட்டொன்றை பொறித்துவிட்டு சீனாவுக்குச் சென்றான். இக்கல்வெட்டு காலி மும்மொழிக் கல்வெட்டு எனப்படுகின்றது. மீண்டும் கி.பி. 1411 ஆம் ஆண்டு பாரிய படை யொன்றுடன் இலங்கை வந்த செங்ஹோ தளபதி வீர அழகேஸ்வரனுடன் போரிட்டு அவனையும் இன்னும் சிலரையும் கைதிகளாகச் சீனாவுக்குக் கொண்டு சென்றான்.

கம்பளைக் காலத்தில் அமைக்கப்பட்ட கட்ட டங்கள் சிலவற்றை இன்றும் காணமுடிகின்றது. அவற்றுள் நான்காம் புவனேகபாகு மன்னனால் அமைக்கப்பட்ட லங்காதிலக விகாரையும் கடலா தெனிய விகாரையும் சிறப்பிடம் பெறுகின்றன.

### 7.4.5. கோட்டை இராசதானி

கம்பளைக் காலத்தில் நிஸ்ஸங்க அழகேஸ்வர எனும் அமைச்சர் ஸ்ரீ ஜயவர்த்தனபுரவில் பலம் வாய்ந்த கோட்டை ஒன்றை அமைத்ததாக ஏற்கனவே கூறப்பட்டுள்ளது. எனினும் கோட்டை இராசதானியை நிறுவியவன் ஆறாம் பராக்கிரமபாகு மன்னனாவான். அவனது தந்தையின் பெயர் ஜயமஹலே, தாயின் பெயர் சுனேத்ராதேவி என்பதாகும். கம்பளைக் காலத்தின் இறுதிப் பகுதியில் இடம்பெற்ற எதிரிகளின் செயற்பாடு காரணமாக பராக்கிரமபாகு இளவரசன் தலைமறைவாக வளரவேண்டிய சூழ்நிலை காணப்பட்டது. அச்சமயத்தில் வீதாகம மஹா ஸ்தவீர எனும் பௌத்த பிக்குவினால் இளவரசனுக்குப் பாதுகாப்பு வழங்கப்பட்டது. அத்தேரரின் அனுசரணையுடன் கி.பி. 1412 ஆம் ஆண்டு பராக்கிரமபாகு இளவரசன் றைகமையின் ஆட்சியாளன் ஆனான். மூன்றாண்டுகளின் பின்னர் மன்னன் சிறந்த பாதுகாப்பான இடமாகத் திகழ்ந்த கோட்டையைத் தலைநகராகத் தெரிவுசெய்து 1415 ஆம் ஆண்டு முடிசூட்டு விழாவை நடத்தினான். அன்றிலிருந்து 1467 ஆம் அண்டு வரையில் இம்மன்னன் இலங்கையை ஆட்சிபுரிந்தான். ஆறாம் பராக்கிரமபாகு மன்னன் ஆற்றிய சேவை களுள் முக்கியமானவை வருமாறு:

- வன்னிப் பிரதேசத்தை கோட்டை இராச் சியத்தின் கீழ் கொண்டு வந்தமை.
- சப்புமல் குமாரனின் தலைமையில் படையனுப்பி யாழ்ப்பாண இராச்சியத்தை வெற்றி கொண்டமை.
- மலைநாட்டுப் பிரதேச ஆட்சியாளனான ஜோதிய என்பவனின் கிளர்ச்சியை அம்புலுகல குமாரன் மூலம் அடக் கியமை.
- முழு நாட்டையும் கோட்டை இராச தானியின்கீழ் ஒன்றுபடுத்திப் பொருளாதார ரீதியில் நாட்டை வளப்படுத்தியமை.
- நாட்டின் கல்வி மற்றும் இலக்கிய வளர்ச் சிக்குப் பாரிய சேவையாற்றியமை.

ஆறாம் பராக்கிரமபாகு மன்னனின் பின்னர் ஆட்சி பீடமேறுவதற்கு அவனுக்கு ஒரு மகனில்லாத காரணத்தினால் 1467 இல் மன்ன னின் மறைவையடுத்து மன்னனின் மகளான உலகுடைய தேவியின் மகனான ஜயபாகு ஆட்சி பீடமேற்றப்பட்டான். அவனது ஆட்சிக்காலம் மிகக் குறுகியதாக அமைந்தது. ஏனெனில் யாழ்ப்பாண ஆட்சியாளனாக ஆறாம் பராக்கிரமபாகுவால் அமர்த்தப்பட்ட சப்புமல் குமாரன் படையெடுத்து வந்து ஜயபாகுவை கொலை செய்துவிட்டு ஆறாம் புவனேகபாகு எனும் பெயரில் 1469 ஆம் ஆண்டு ஆட்சி பீடமேறினான். அவனது ஆட்சியின் ஆரம்பத்திலே பஸ்துன் கோறளைப் பகுதியில் சிங்களக் கிளர்ச்சி அல்லது சிங்கள சங் கய எனும் அரசனுக்கு எதிரான அரசியல் கிளர்ச்சி ஒன்று இடம்பெற்றது. இக்கிளர்ச்சியை மன்னனின் சகோதரனான அம்புலுகல குமாரன் வெற்றிகரமாக முறியடித்தான். கைதுசெய்யப்பட்ட கெகுந்தல ஸ்ரீ வர்தன பதிராஜ உள்ளிட்ட கிளர்ச்சித் தலை வர்களுக்கு மன்னன் மன்னிப்பு வழங்கினான். இந்த அபயமளிக்கப்பட்ட சம்பவம் கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளது. அது தெடிகம கல்வெட்டு எனப்படும்.

ஆறாம் புவனேகபாகு மன்னனின் மறைவை யடுத்து அவனது மகனான பண்டித பராக்கிரமபாகு ஆட்சிபீடமேறினான். ஏழாம் பராக்கிரமபாகு என்றழைக்கப்பட்ட அவனது ஆட்சிக் காலமும் மிகக் குறுகியதாகும். ஏனெனில் அச்சமயம் நான்கு கோறளைப் பகுதியின் நிர்வாகியாக இருந்த அம்புலுகல குமாரன், ஏழாம் பராக்கிரமபாகுவை பதவி நீக்கிவிட்டு எட்டாம் வீரபராக்கிரமபாகு எனும் பெயரில் கோட்டை மன்னனாக கி.பி.




*தேசப்படம் 7.1 இராசதானிகள் தலைநகரங்களை மத்திய நிலையமாகக் கொண்டு செயற்பட்ட விதம்.*

1490 இல் முடிசூடினான். இம்மன்னனின் ஆட்சிக் காலமான கி.பி.1505 ஆம் ஆண்டிலே போர்த்துக்கேயர் இலங்கை வந்தனர்.

### 7.4.6 யாழ்ப்பாணமும் வன்னியர்களும்

கி.பி. 13 ஆம் நூற்றாண்டில் இராசரட்டை நாகரிகம் வீழ்ச்சியடைந்த பின்னர் யாழ்ப்பாண பிரதேசத்தில் உருவான நிர்வாக அலகு யாழ்பாண இராசதானி எனப்பட்டது. இவ்விராச்சியத்தின் ஆரம்பம், வரலாறு என்பவற்றை அறிவதற்கான அக்காலப்பகுதிக்குரிய மூலாதாரங்கள் இல்லை. எனினும் யாழ்ப்பாண வைபவமாலை, யாழ்ப் பாண வரலாறு பற்றி அறிவதற்கு உதவும் சிறந்த நூலாகும். எனினும் அது 18 ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டதாகும். இது தவிர கைலாய மாலை, செகராசசேகர மாலை எனும் நூல்களும் இதில் முக்கியத்துவம் பெறுகின்றன.

யாழ்ப்பாண இராச்சியத்தின் முதல் மன்னனாக விஜய கூழங்கை எனும் ஆரியச்சக்கரவர்த்தி கருதப்படுகின்றான். அவனது ஆட்சியில் இருந்து போர்த்துகேயர் வரும் வரையில் யாழ்ப்பாணத்தை ஆட்சி செய்த குலசேகரன், விக்ரமன், வரோதயன், மார்த்தாண்டன் முதலிய பன்னிரண்டு அரசர்கள் பற்றி யாழ்ப்பாண வைபவமாலை என்னும் நூல் விபரிக்கின்றது. இவ்வாறு யாழ்ப்பாணத்தை ஆட்சி செய்த அரசர்கள் ஆரியச்சக்கரவர்த்திகள் என்றே அழைக்கப்பட்டனர். கி.பி. 1344 ஆம் ஆண்டு இலங்கைக்கு இபின் பதூதா வருகை தந்தபோது ஆரியச் சக்கரவர்த்திகள் ஓரளவு பலம் பொருந்திய ஆட்சியை நடத்தியமை தெரிய வருகின்றது. கம்பளை இராசதானிக் காலத்தில் அப்பகுதியில் ஆரியச் சக்கரவர்த்திகள் கப்பம் அறவிட்டமை இதற்கு எடுத்துக் காட்டாகும். இவ்வாறு கம்பளை இராசதானிக் காலத்தில் கப்பம் கருதி அறவிட்ட ஆரியச்சக்கரவர்த்திகளின் அதிகாரிகளை நிஸ்ஸங்க அழகேஸ்வர எனும் அமைச்சர் எதிர்ப்பதற்கு மேற்கொண்ட நடவடிக்கை பற்றி ஏற்கனவே அறிந்தோம். கோட்டை இராசதானிக் காலத்தில் ஆறாம் பராக்கிரமபாகு மன்னன் சப்புமல் குமாரனின் மூலம் யாழ்ப்பாணத்தை கோட்டை இராசதானியின் கீழ்க் கொண்டு வந்தான். ஆறாம் பராக்கிரமபாகுவின் பின்னர் யாழ்ப்பாணம் கோட்டை இராசதானியிடமிருந்து விலகியது. அதிலிருந்து போர்த்துகேயர் யாழ்ப்பாணத்தை கைப்பற்றியது வரையிலான விபரங்களை பத்தாம் அத்தியாயத்தில் கற்கலாம்.

**வன்னியர்.**

இராசரட்டை நாகரிகம் வீழ்ச்சியடைந்த பின்னர் இலங்கையின் வடமத்திய, கிழக்கு, வடமேல் மாகாணங்களில் சனத்தொகை குறைவான பிரதே சங்களில் வன்னி எனப்படும் சிறிய ஆட்சி அலகுகள் தோன்றின. அவற்றின் தலைவர்கள் வன்னியர் எனப்பட்டனர். பூஜாவலிய எனும் நூலின்படி தம்பதெனிய இராசதானியை உருவாக்கிய மூன்றாம் விஜயபாகு மன்னன் ஆரம்பத்தில் வன்னித் தலைவனாக செயற்பட்ட வன் ஆவான். கோட்டை இராசதானியில் ஆறாம் பராக்கிரமபாகு மன்னன் ஆட்சிபீடமேறியபோது இவ்வாறான பதினெட்டு வன்னிகள் காணப் பட்டதாக அக்காலப் பகுதிக்குரிய மூலாதாரங்கள் மூலம் அறிய முடிகின்றது. மத்திய இராச தானிகள் பலவீனமடைந்த சந்தர்ப்பங்களில் வன்னியர்கள் சுதந்திரமாகச் செயற்பட்டுள்ளனர். ஆயினும் இரண்டாம் பராக்கிரமபாகு, ஆறாம் பராக்கிரமபாகு மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் வன்னியர் எனும் பிரதேச ஆட்சியாளர்கள் மத்திய அரசுக்குக் கீழ்ப்படிந்தனர். கண்டி அரசு நிலவிய காலப்பகுதியில் கிழக்குப் பிரதேசத்தில் வன்னியர்கள் இருந்ததாகத் தகவல்கள் கிடைத் துள்ளன. ஆயினும் அவர்கள் கண்டிய அரசனின் அதிகாரத்திற்குக் கட்டுப்பட்டிருந்தனர்.

### 7.5.1. பொருளாதார அமைப்பு

உலர் வலய நீர்வள நாகரிகம் வீழ்ச்சியடைந்த பின்னர் ஈரவலயம் நோக்கிப் புலம்பெயர்ந்த மக்கள் புதிய புவியியல் அமைப்பிற்கு இசை வாக்கம் அடைய நேரிட்டது. மலைப்பாங்கான பிரதேசங்களில் தலைநகரங்கள் உருவானமையும் தலைநகரங்கள் நீண்டகாலம் ஓரிடத்தில் நின்று நிலைக்காமையும் இக்காலப்பகுதியின் விஷேட பண்புகளாகும். ஈரவலயம் அதிக மழைவீழ்ச்சி யைப் பெற்றமையால் அங்கு குளங்கள் கட்டி நீர்ப்பாசனம் செய்யவேண்டிய தேவை இருக்கவில்லை. விவசாயத்திற்கு மழைநீரையே பயன்படுத்தினர். இக்காலப் பகுதியிலும் மக்களின் சீவானோபாயமாக விவசாயமே திகழ்ந்தது. அதி லும் நெல் பிரதான பயிராக இடம்பெற்றது. நீர்ப் பற்றாக்குறையான பகுதிகளில் சேனைப் பயிர்ச் செய்கையும் மேற்கொள்ளப்பட்டது. படிப் படியாக அம்மக்கள் வர்த்தகப் பொருளாதார முறைக்குப் பழக்கப்பட்டனர். உணவுக்காக

பயிரிடப்பட்ட பயிர்ச் செய்கைகளின் மேலதிக விளைச்சலை அவர்கள் விற்பனை செய்தனர். அதற்குக் காரணம் இலங்கை வெளிநாடுகளுடன் ஏற்படுத்திக் கொண்ட வர்த்தகத் தொடர்புகளின் வளர்ச்சியும் அதன் தாக்கமும் ஆகும்.

ஈரவலயக் காடுகளில் இயற்கையாக வளர்ந்த கறுவா இக்காலப்பகுதியில் வெளிநாட்டு வர்த்தகப் பயிராக மாறியது. பாக்கு, மிளகு, ஏலம், சாதிக்காய் முதலிய பயிர்களின் மேலதிக விளைச்சலும் ஏற்றுமதி செய்யப்பட்டன. முத்து, மாணிக்கம், யானை, யானைத் தந்தம் முதலிய வர்த்தகப் பொருள்களும் ஏற்றுமதி செய்யப்பட்டன.

இந்தியா, அரேபியா, சீனா, பாரசீகம், எகிப்து முதலிய நாடுகளுடன் இலங்கை வர்த்தகத் தொடர்புகளை மேற்கொண்டு வந்தது. வெளி நாட்டு வர்த்தகம் முழுமையாக அரசனின் தனி அதிகாரத்தின் கீழே காணப்பட்டது.

அக்காலப் பகுதியில் இலங்கையில் நிலவிய சிறப்பான வெளிநாட்டு வர்த்தகம் பற்றி இலக்கிய மூலாதாரங்கள், தொல்பொருள் மூலாதாரங்கள் போலவே தேசசஞ்சாரிகளின் அறிக்கைகளிலும் குறிப்பிட்டுள்ளன. சீனாவில் இருந்து இலங்கைக் குப் பீங்கான் பொருள்கள் இறக்குமதி செய்யப் பட்டமைக்கு தெடிகம பிரதேசத்தில் கிடைக்கப் பெற்ற தொல்பொருட்கள் சான்று பகிர்கின்றன. உள்நாட்டு வர்த்தகம் தொடர்பாகக் கடை வீதி இருந்தமை பற்றிக் குருநாகல் விபரம் எனும் நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது. இலங்கையின் மேற்குக் கரையின் கப்பல் துறைகளை அடிப்படையாகக் கொண்டு வளமான வெளிநாட்டு வர்த்தகம் நிலவியதாக கி.பி. 1344 ஆம் ஆண்டு இலங்கை வந்த இபின் பதூதா எனும் முஸ்லிம் தேசசஞ் சாரியின் அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

### 7.5.2. சமயம்

இரண்டாம் நகரமயமாக்கத்தின்போதும் பிரதான சமயமாக பௌத்தமே விளங்கியதுடன் அது மேலும் வளர்ச்சி கண்டது. தம்பதெனிய முதல் கோட்டை காலம் வரை தலதா மாளிகை மற்றும் விகாரைகளை அமைப்பதில் மன்னர்கள் ஆர்வம் காட்டியுள்ளனர். அதே போன்று இக்காலப்பகுதியில் வாழ்ந்த அரசர்கள் தெய்வங் கள் மீதும் நம்பிக்கை வைத்து செயற்பட்டுள்ளதை அவதானிக்க முடிகின்றது. விஷ்ணு, விபீஷணன், முருகன், சமன் முதலிய தெய்வங்களுக்கான வழிபாடுகள் நிகழ்த்தப்பட்டுள்ளதுடன் கோயில்களும் கட்டப்பட்டமையையும் காண முடிகின்றது. இக்காலப் பகுதியில் எழுதப்பட்ட தூது காவியங்களில் விஷ்ணு, விபீஷணன் எனும் தெய்வங்கள் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளன.

கி.பி. 15 ஆம் நூற்றாண்டளவில் ஸ்ரீ ஜயவர் தனபுரத்திற்கு அண்மையில் சிவாலயம் இருந் தமைக்கான தகவல்கள் கிடைக்கப் பெற்றுள்ளன. இந்து சமயத்தவர்களுக்காக அது அமைக்கப்பட்டி ருந்ததாக நம்பப்படுகின்றது. சிலாபத்தில் காணப் படும் முன்னேஸ்வரம் கோயில் அக்காலப் பகுதிக்குரிய இந்து சமய வழிபாட்டுத்தலமாகும்.

வெளிநாட்டு வர்த்தகத்தில் ஈடுபட்டிருந்த முஸ்லிம் களும் தாம் வாழ்ந்த கரையோரத் துறைமுக நகரங்களுக்கு அருகே சமய வழிபாட்டுக்கான பள்ளிவாசல்களை அமைத்திருந்தனர்.

### 7.5.3. கலைகளும் கட்டட நிர்மாணங்களும்.

யாப்பகுவ முதல் கோட்டை இராசதானி காலப்பகுதி வரை உருவான நகரங்களில் மேற் கொள்ளப்பட்ட கட்டட நிர்மாணங்களை இன்றும் நாம் காண முடிகின்றது. இக்கட்டட நிர்மாணங் களில் தென்னிந்திய செல்வாக்குப் பிரதிபலிப்பது விசேட பண்பாகும்.

யாப்பகுவ இராசதானியில் காணப்படும் படிவரிசை மற்றும் தூண்களில் பாண்டிய மற்றும் கம்பூச்சிய கலைகளின் செல்வாக்கு இருப்பதாக நம்பப்படுகின்றது. கம்பளை யுகத்தைச் சேர்ந்த கடலாதெனிய விகாரையில் உள்ள சிலைமனை சமகால தென்னிந்திய கட்டடக் கலை முறையைத் தழுவியதாக அமைக்கப்பட்டுள்ளமையைத் தெளிவாக காணக்கூடியதாக உள்ளது. புத்த சிலைமனைகளுடன் இணைந்ததாக கோயில்கள் அமைக்கப்பட்டுள்ளமையும் இக்காலப்பகுதியின் மற்றுமொரு சிறப்பம்சமாகும்.

கடலாதெனிய சிலைமனையுடன் இணைந்ததாக விஷ்ணு கோயிலொன்று அமைக்கப்பட்டிருப்பது இதற்குச் சிறந்த உதாரணமாகும். லங்காதிலக சிலைமனையுடன் இணைந்தவகையில் இது போன்ற கோயில்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவ்வாறு புத்த சிலைமனைகளுடன் கோயில்கள் அமைக்கப்பட்டமைக்கான காரணம் இந்து மற்றும் மகாயான சமயங்களின் செல்வாக்காகும்.

கம்பளைக் காலத்தில் மூன்றாம் விக்கிரமபாகு மன்னனால் அமைக்கப்பட்ட அம்பக்க தேவா லயம் ஒரு முருகன் கோயிலாகும். அது கலைப் பெறுமதிமிக்க மரச் செதுக்கலுக்குப் பெயர் பெற்ற கட்டடமாகும். அதன் மரத்தூண்களும் கூரையும் பல்வேறு செதுக்கல் கலைகளும் அதன் சிறப்பினைக் காட்டுகின்றது.

இரண்டாம் நகரமயமாக்கலின்போது மொழி, இலக்கியம் என்பவற்றில் பாரிய வளர்ச்சி ஏற்பட்டமைக்கான ஆதாரங்கள் அதிகளவில் காணப்படுகின்றன. இக்காலப்பகுதியில் பொது மக்களிலும் பௌத்த பிக்குகளிலும் கல்வி கற்ற பண்டிதர்கள் பலர் காணப்பட்டமை இலக்கிய வளர்ச்சிக்கான காரணமாக அமைந்தது.

தம்பதெனியாவில் இரண்டாம் பராக்கிரமபாகு மன்னனின் காலத்தில் அதிகளவிலான நூல்கள் எழுதப்பட்டன. '' கலிகால சாகித்ய சர்வக்ஞ பண்டித'' என்ற பட்டப் பெயரைக் கொண்ட இம் மன்னனும் சில நூல்களை எழுதியுள்ளான். சிங் கள மொழியில் எழுதப்பட்ட மகா காவியமான ''கவிசிலுமின'' இரண்டாம் பராக்கிரமபாகு மன்னனால் எழுதப்பட்டதாகும். தர்மசேன தேரர் எழுதிய சத்தர்மரத்னாவலிய, மயுரபாத பிரிவெனா அதிபரான புத்த புத்திர தேரர் எழுதிய பூஜாவலிய என்பனவும் தம்பதெனிய காலத்தில் எழுதப்பட்ட சிறந்த உரைநடை நூல்களாகும். சிங்கள இலக்கணம் பற்றி எழுதப்பட்ட சிதத் சங்கராவ காவிய இலக்கண விதிகள் பற்றி எழுதப்பட்ட '' எழுசதஸ் லக்குண'' எனும் நூலும் இக்காலப்பகுதிக்குரியதாகும்.

பௌத்த பிக்குகள் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்க நெறிக் கோவையான தம்பதெனியா ''கதிகாவத்த'' மற்றும் இரண்டாம் பராக்கிரமபாகு மன்னனின் தினசரி நடவடிக்கைகளை உள்ளடக்கிய ''கந்தவுறு சிரித்த'' எனும் நூலும் புத்த புத்திர தேரர் எழுதிய ''யோகர்ணவய'' எனும் சிறந்த வைத்திய நூலும் தம்பதெனிய யுகத்தில் எழுதப்பட்டன. பாளி மொழியில் சில முக்கிய நூல்களும் இக்காலத்தில் எழுதப்பட்டன. விசுத்திமார்க்க சன்னய, சமந்த கூட வர்ணனை, ரசவாஹினி, சார சங்கிரஹய, போசஜ்ஜ மஞ்சுசா எனும் வைத்திய நூல், ஹத்தவனகல்ல விகாரை வம்சம், தூப வம்சம் என்பன பாளி மொழி நூல்களாகும்.

குருணாகலைக் காலப்பகுதியில் சிங்கள உரை நடை இலக்கியம் மேலும் வளர்ச்சி கண்டது. பன்சிய பனஸ் ஜாதகய (550 ஜாதகக் கதைகள்) சிங்களத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளமை, தலதா சிரித, தலதா பூஜாவலிய, சிங்கள போதிவம்சம் என்பன இக்காலப் பகுதியில் எழுதப்பட்ட சிறந்த நூல்களாகும்.

கம்பளைக் காலத்தில் சந்தேசய எனப்படும் தூது காவியங்கள் எழுதப்பட்டன. மயுர சந்தேசய, திசர சந்தேசய என்பன மிகப்பழைய தூது காவியங்களாகக் கருதப்படுகின்றன. பாரமீ சதகய, ஜினபோதாவலி, பாலாவதார எனும் பாளி மொழி நூல்களும் சத்தர்மாலங்காரய எனும் சிங்கள நூலும் இக்காலத்தில் எழுதப்பட்டவையாகும்.

சிங்கள இலக்கியத்தின் பொற்காலமாகக் கோட்டைக் காலம் திகழ்கின்றது. ஆறாம் பராக்கிரமபாகுவின் ஆட்சிக் காலம் இலக்கி யத்திற்கு அருந் தொண்டாற்றப்பட்ட காலமாகும். அம்மன்னன் சிறந்த ஆட்சியாளனாகத் திகழ்ந்தது போலவே சிறந்த கல்விமானாகவும் விளங்கினான். மன்னனைத் தவிர அக்காலப் பகுதியில் இன்னும் பல பண்டிதர்களும் இலக்கிய வளர்ச்சிக்குப் பங்களிப்புச் செய்துள்ளனர்.

தொட்டகமுவ ஸ்ரீ ராகுல தேரர், காரகல வனரத்ன தேரர், இறுகல் குலதிலக பிரிவெனா தேரர் அவ்வாறான பண்டிதர்களாவர். பெரகும்பா சிரித்த, காவிய சேகரய, புதுகுணாலங்காரய, லோவட சங்கராவ, குத்தில காவியம் எனும் நூல்களும் ஹங்ச சந்தேசய , பரவி சந்தேசய, கிராசந்தேசய செலலிஹினி சந்தேசய முதலிய தூது காவியங்களும் மேற்படி பண்டிதர்களால் எழுதப்பட்டவையாகும்.

பக்தி இலக்கியம், போர் இலக்கியம், புகழ் காவியம், போதனா காவியம் விளக்கவுரை நூல்கள் எனும் அடிப்படையில் இலக்கியம் பல்வேறு பண்புகளைக் கொண்டிருந்தமை இக்காலப்பகுதியின் சிறப்பம்சமாகும். இக்காலப் பகுதியில் தமிழ் மொழி நூல்களும் சமஸ்கிருத நூல்களும் எழுதப்பட்டன. சரசோதிமாலை, பக்தி சதகம் என்பன இவற்றுக்குச் சிறந்த உதாரணங் களாகும்.

பௌத்த கல்வி நிலையங்கள் பலவும் கோட்டைக் காலத்தில் தோன்றியுள்ளன. ஆறாம் பராக்கிரம பாகுவின் தாயாரின் நினைவாக பெப்பிலியானே சுனேந்திரா தேவி பிரிவெனா அமைக்கப்பட்டது. காரகல பத்மாவதி பிரிவெனா, தெவிநுவர இருகல்குலதிலக்க பிரிவெனா வீதாகம கணானந்தா பிரிவெனா முதலிய பௌத்த கல்வி நிலையங்கள் இலக்கிய வளர்ச்சிக்குப் பெரும்பங் காற்றியுள்ளன.

### முக்கிய விடயங்கள்

1. பண்டைய இலங்கையின் தலைநகரங்கள் இடம்பெயர்வதற்கான பிரதான கார ணங்களுள் ஒன்றாய் அமைவது நகர மயமாக்கத்தின் மாற்றமாகும். அவ்வாறு நிகழ்வதற்கு உள்நாட்டு அரசியல் பிரச்சி னைகளும் சர்வதேச வர்த்தக வளர்ச்சியும் காரணமாக அமைந்தன.
2. பண்டைய இலங்கையில் நகரங்களின் தோற்றத்தை முதலாம் நகர மயமாக்கம், இரண்டாம் நகரமயமாக்கம் என்று இரண்டு செயற்பாடுகளின் மூலம் விளக்கலாம். இவ்விரு செயற்பாடுகளின் மூலம் கட்டியெழுப்பப்பட்ட நகரங்களுக்கான திட்டமிடலில் தெளிவான வேறுபாடுகள் தெரிகின்றன.
3. எந்தவொரு நகரமயமாக்கல் செயற்பாட்டை யும் நகரங்களை மையமாகக் கொண்டமைந்த செயற்பாடுகளையும் அச்செயற்பாடுகள் உருவான சமூக அரசியல் செயற்பாடுகளின் பின்னணியிலேயே நாம் புரிந்துகொள்ள வேண்டியுள்ளது.
4. பொலன்னறுவை இராசதானி வீழ்ச்சியடைந்த பின்னர் தம்பதெனியா, யாப்பகுவ, குருணா கலை, கம்பளை, கோட்டை என்று சில இராசதானிகள் தோன்றின. யாழ்பாணத்தை மையமாகக் கொண்டு யாழ்பாண இராச்சியம் உருவாகி இருந்தது.
5. கோட்டை இராசதானிக் காலத்தில் கல்வி, இலக்கியத் துறைகளில் பெரும் வளர்ச்சி ஏற்பட்டது.

### செயற்பாடு

1. இலங்கையில் பண்டைய நகரங்கள் உருவாவதிலும் வீழ்ச்சியடைவதிலும் செல்வாக்குச் செலுத்தியுள்ள காரணங் களைக் குறிப்பிடுக.
2. பின்வரும் இடங்களை இலங்கைப் புறவுருவப் படமொன்றில் குறித்துப் பெயரிடுக.

| | |
|---|---|
| அநுராதபுரம் | கம்பளை |
| யாப்பகுவ | கோட்டை |
| பொலன்னறுவை | குருணாகல் |
| தம்பதெனிய | |

# 8 கண்டி இராச்சியம்

## அறிமுகம்

கோட்டை, சீதாவாக்கை இராச்சியங்கள் வீழ்ச்சியுற்றதன் பின்னர், நாட்டின் சுதந்திரத்தைப் பாதுகாக்கும் பொறுப்பு கண்டி இராச்சியத்தையே சார்ந்தது. இந்நாட்டில் நிலவிய எவ்விராச்சியமும் எதிர்கொள்ளாத சவால்கள் பலவற்றிற்கும் முகங்கொடுத்து, அவ்விராச்சிய அரசர்களும் பொதுமக்களும் தமக்கு ஒப்படைக்கப்பட்ட பொறுப்பை கி.பி. 1815 ஆம் ஆண்டுவரை தொடர்ச்சியாக நிறைவேற்றி வந்தனர். இலங்கையின் இறுதி இராச்சியமான கண்டியின் ஆரம்பம், பரவல், நிர்வாக அமைப்பு, சமூக, பொருளாதார நிலைமை பற்றிய விவரங்களை இவ்வலகினூடாகத் தெரிந்து கொள்வதற்கு இயலுமாக இருக்கும்.

## 8.1. ஆரம்பமும் பரவலும்

செங்கடகல நகரம், மலைநாட்டு இராச்சியம், கண்டி இராச்சியம் எனும் பல பெயர்களால் இவ்விராச்சியம் குறிப்பிடப்பட்டு வந்துள்ளது.

இவ்விராச்சியத்தின் தலைநகர் கண்டியாகும். அது இயற்கையால் பாதுகாக்கப்பட்ட ஓரிடமாகும். கண்டி நகருக்கு மகாவலி கங்கை பாதுகாப்பு வழங்கியிருந்தது. பலனை, உன்னஸ் கிரிய, என்னும் கஷ்டமான பாதைகளால் இப்பிரதேசத்திற்குள் நுழைவது வெகு சிரமமாகும். என்றாலும் கண்டி இராச்சியம் இரம்மியமான காலநிலையையும் வளமான பூமியையும் கொண்டுள்ளது.

கண்டி இராச்சியம் ஆறாம் பராக்கிரமபாகு அரசரின் காலத்தில் கோட்டைக்கு அடிமைப்பட்ட பிராந்திய அரசொன்றாகச் செயற்பட்டது. கண்டி இராச்சியத்தை அண்டியுள்ள பிரதேசங்களை ஒன்றுபடுத்தி, முதல் முறையாக அரசொன்றை உருவாக்கியவன் சேனா சம்மத விக்கிரமபாகு மன்னனாவான். இதனால் கண்டி இராச்சியத்தின் முதல் மன்னனாக இவன் கருதப்படுகின்றான்.

சேனா சம்மத விக்கிரமபாகுவின் மகனான ஜயவீர பண்டார அவனை அடுத்து அரசேற்றான். இவன் நீண்டகாலமாக (கி.பி. 1511-1551) இவ்விராச்சியத்தை ஆட்சி செய்தான். அவன் சீதாவாக்கை மன்னனான மாயாதுன்னையின் நண்பனாவான். கோட்டை இராச்சியத்தில் ''விஜயபாகு கொள்ளை'' இடம்பெற்றபோது, ஜயவீர பண்டார அரசன் மாயாதுன்னைக்கு உதவி புரிந்துள்ளான்.

ஜயவீர பண்டாரனின் மரணத்தின் பின்னர் அவனது மகனான கரலியத்த பண்டார கண்டி இராச்சியத்திற்கு மன்னனானான். அவன் போர்த்துக்கேயருடன் உடன்பாடான கொள்கையைக் கடைப்பிடித்தான். கரலியத்த பண்டாரனின் இக்கொள்கையையிட்டு கண்டிப்பிரதானிகள் அதிருப்தியுற்றிருந்தனர். ஆகையால் அவர்கள் சீதாவாக்கை மன்னன் இராஜசிங்கனுக்குத் தமது ஆதரவை வழங்கினர். அக்கால கண்டி இராச்சிய பிரதானியான பேராதனையின் வீரசுந்தர பண்டார, I ஆம் இராஜசிங்க மன்னனுக்கு கண்டி இராச்சியத்தை ஆக்கிரமிப்பதற்கு உதவி புரிந்தான். இவ்வாக்கிரமிப்புக்கு முகங்கொடுக்க இயலாத கரலியத்த பண்டார மன்னன், தனது புதல்வியான குசுமாசனதேவியுடனும் மருமகனான யமசிங்க பண்டாரவுடனும் போர்த்துக்கேயரிடம் தஞ்சமடைந்தான். குசுமாசனதேவி டோனா கத்தரினா என்றும் யமசிங்க பண்டார டொன் பிலிப் என்னும் பெயரிலும் கிறிஸ்தவ சமயத்தைத் தழுவிக் கொண்டனர்.

கி.பி. 1580 ஆம் ஆண்டளவில் கண்டியைக் கைப்பற்றிக் கொண்ட முதலாம் இராஜசிங்க மன்னன் சீதாவாக்கையில் இருந்து கண்டி இராச்சியத்தையும் ஆட்சிசெய்தான். என்றாலும் வீரசுந்தர பண்டாரனின் நடத்தையில் சந்தேகமுற்ற இராஜசிங்க மன்னன் தந்திரமான முறையில் அவனைக் கொன்றான். இச்செயற்பாட்டின் பின்னர் வீரசுந்தர பண்டாரனின் மகனான கோணப்பு பண்டாரவும் போர்த்துக்கேயரிடம் தஞ்சமடைந்து டொன் ஜுவான் எனும் பெயரில் கிறிஸ்தவனானான்.

சீதாவாக்கையின் இராஜசிங்க மன்னன் கண்டி இராச்சியம் தொடர்பாகக் கையாண்ட சில நடவடிக்கைகளால் கண்டி இராச்சியப்




*உரு 8.1. பழைய கண்டி நகரின் அமைப்பைக் காண்பிக்கும் படமொன்று.T தலதா மாளிகை, A மங்குல் மடுவ, KP அரச மாளிகை, N நாத தேவாலயம், P பத்தினி தேவாலயம், S தூபி, B வெள்ளரசு மரம், V விஸ்ணு தேவாலயம், BR மன்னரின் படையினரின் முகாம், K கதிர்காமத் தேவாலயம், AV மல்வத்தை விகாரை, AV - அஸ்கிரிய விகாரை, KV - குமாருப்பே வீதி E....*

பிரதானிகளில் ஒருசாராரிடையே அதிருப்தி நிலவியது. இச்சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்ட போர்த்துக்கேயர், தமது பொறுப்பில் இருந்த யமசிங்க பண்டாரவைக் கண்டி இராச்சியத்திற்கு அனுப்பி, பிரதானிகள் சிலரின் ஆதரவுடன் தமக்குச் சார்பான அரசு ஒன்றை உருவாக்கிக் கொண்டனர். யமசிங்க பண்டார கண்டி இராச்சியத்திற்கு அனுப்பப் பட்டபோது, அவனது பாதுகாப்பிற்காக உடன் அனுப்பப்பட்ட குழுவில் கோணப்பு பண்டாரவும் இடம்பெற்றிருந்தான்.

போர்த்துக்கேயரின் பொம்மையாகச் செயற்பட்ட யமசிங்க பண்டார, சிறிது காலத்தில் மரண முற்றான். இதனால் இவனது இளம் புதல்வனை அரசுகட்டில் ஏற்றி, போர்த்துக்கேயர் ஆட்சியை முன்னெடுக்க முயன்றனர் என்றாலும் கோணப்பு பண்டாரவால் அம்முயற்சி வெற்றிபெறவில்லை மலைநாட்டவரின் ஆதரவைப் பெற்றுக் கொண்ட கோணப்பு பண்டார, போர்த்துக்கேயருக்கு எதிராகப் பதவியைப் பறித்துக் கொண்டு முதலாம் விமலதர்மசூரிய என்ற பெயருடன் மன்னனா னான். இவனது இத்துணிவான நடத்தையால் போர்த்துக்கேயரின் ஆட்சியில் இருந்து கண்டி இராச்சியத்தைக் காப்பாற்றிக் கொள்ள முடிந்தது.

## முதலாம் விமலதர்மசூரிய மன்னன் (1592 - 1604)

யமசிங்க பண்டாரவின் பின்னர் மலைநாட்டு மன்னனான இவன் கண்டி இராச்சியத்தில் புதிய தோர் அரச வம்சத்தை ஆரம்பித்து வைத்தான். இவன் மன்னனானபோது எதிர்கொண்ட சவால்கள் பலவாகும். அவையாவன :

1. சட்ட பூர்வ ஆட்சி உரிமை இல்லாமை.
2. கண்டி இராச்சியத்தைப் போர்த்துக்கேயரின் ஆதிக்கத்தில் இருந்து பாதுகாக்க வேண்டி யிருந்தமை.
3. கண்டி இராச்சியத்தை சீதாவாக்கை ஆதிக்கத்தில் இருந்து காப்பாற்ற வேண்டியி ருந்தமை.
4. வீழ்ச்சியுற்றிருந்த பௌத்த சமயத்தை மீளவும் எழுச்சியுறச்செய்ய வேண்டியிருந்தமை.
5. கண்டி இராச்சியத்தின் பொருளாதாரத்தைக் கட்டியெழுப்ப வேண்டியிருந்தமை.

**விமலதர்மசூரிய மன்னன் கண்டி இராச்சியத்தின் ஆட்சியின் சட்டபூர்வத் தன்மையை நிலைநாட்டிக் கொள்வதற்காகக் கீழ்வரும் நடவடிக்கைகளை மேற்கொண்டான் :**

1. கண்டி இராச்சியத்தின் அரசுரித்தாளியான குசுமாசன தேவியைத் திருமணம் செய்து கொண்டதன் மூலம் தனது ஆட்சி உரிமையை நிலைநாட்டிக் கொண்டமை.

2. றோமன் கத்தோலிக்க சமயத்தைக் கை விட்டுப் பௌத்த சமயத்தைத் தழுவிக் கொண்டமை.

3. விமலதர்மசூரிய என்ற பௌத்த நாமத்தை சூடிக் கொண்டமை.

4. சீதாவாக்கையின் தெல்கமு விகாரையில் இருந்த புனித தந்தத்தை கண்டியில் பிரதிஷ்டை செய்தமை.

சீதாவாக்கை இராச்சியத்தின் ஆதிக்கத்தில் இருந்து கண்டி இராச்சியத்தை சுதந்திர மடையச் செய்வதற்காக மக்களின் ஒத்துழைப்புடன் இராஜசிங்கனைத் தோற்கடித்தான்.

இவ்வரசன் கண்டி இராச்சியத்தைப் போர்த்துக்கேய ஆதிக்கத்திலிருந்து மீட்பதற்குக் கையாண்ட நடவடிக்கைகள் வருமாறு :

1. கி.பி.1594 ஆம் ஆண்டில் தந்துரை போரில் போர்த்துக்கேயரைப் படுதோல்வி அடையச்செய்தமை.

2. போர்த்துக்கேயருக்கு எதிராகத் தாழ் நாட்டில் ஏற்படும் கலவரங்களுக்கு உதவியளித்தமை.

3. போர்த்துக்கேயரை வெளியேற்றுவதற்கு ஒல்லாந்தரின் உதவியைப் பெற்றுக்கொள்ள முற்பட்டமை.



*உரு 8.1. இரண்டாம் இராஜசிங்க மன்னரின் தோற்றத்தைக் காட்டும் சித்திரம். இது கண்டி இராச்சியக் காலத்தில் இங்கு சிறைப்பட்டிருந்த ரொபட் நொக்ஸ் என்ற ஆங்கிலேயரால் வரையப்பட்டதாகும்.*

**பொலிவற்றிருந்த பௌத்த சமயத்தை எழுச்சியுறச் செய்வதற்கு விமலதர்ம சூரிய மன்னன் கையாண்ட நடவடிக்கைகள் வருமாறு :**

1. பர்மாவிலிருந்து உபசம்பதாவைக் கொண்டு வந்தமை.

2. பழைய விகாரைகளைப் புனரமைப்புச் செய்தல்.

உதாரணமாக : லங்காதிலக, கடலாதெனிய, ரிதி விகாரை

★ **இம்மன்னன் கண்டி இராச்சியத்தின் பொருளாதாரத்தைக் கட்டியெழுப்ப மேற்கொண்ட நடவடிக்கைகளாவன :**

1. விவசாயத்தை விருத்தியடையச் செய்தல்.

2. பருத்திப் பயிர்ச்செய்கைக்கு உதவி புரிதல்.

3. கொத்மலையிலும் வலப்பனையிலும் இரும்புருக்குக் கைத்தொழிலை முன்னேற்ற நடவடிக்கை எடுத்தல்.

4. வெடிமருந்திற்குத் தேவையான உப்பு உற்பத்திக் கைத்தொழிலை வளர்த்தல்.

இவ்வாறு பல்வேறு வழிமுறைகளின் மூலமும் கண்டி இராச்சியத்தைப் பாதுகாத்துக்கொள்ள முயன்ற இம்மன்னன் கடுமையான காய்ச்சல் ஒன்றினால் பீடிக்கப்பட்டு கி.பி.1604 ஆம் ஆண்டில் மரணமானான்.

## செனரத் மன்னன் (கி.பி. 1604 - 1635)

விமலதர்மசூரிய மன்னன் மரணிக்கையில் அவனது குழந்தைகள் இளம் பராயத்தவர்களாக இருந்தபடியால், அவனது ஒன்றுவிட்ட சகோதரனான செனரத் கி.பி. 1604 ஆம் ஆண்டு கண்டி இராச்சியத்திற்கு மன்னனானான். இவன் முகங்கொடுக்க வேண்டியிருந்த சவால்களாவன :

1. கண்டி இராச்சியத்தின் ஆட்சி உரிமையை உறுதிப்படுத்திக்கொள்ள வேண்டியிருந்தமை.

2. போர்த்துக்கேயரால் கண்டி இராச்சியத்திற்கு இருந்த அச்சுறுத்தலைத் தவிர்த்துக் கொள்ள வேண்டியிருந்தமை.

செனரத் மன்னன் அரசனான சிறிது காலத்தினுள் குசுமாசனதேவியை மணந்து தனது அரசுரிமையை உறுதிப்படுத்திக் கொண்டான்.

குசுமாசனதேவிக்கு விமலதர்மசூரிய மன்னன் மூலம் இரு மகன்மாரும் செனரத் மன்னன் மூலம் ஒரு மகனும் பிறந்தனர். ஆட்சி தொடர்பாக பிள்ளைகளிடையே ஏற்படும் அதிகாரப் போராட்டத்தைத் தவிர்ப்பதற்காக செனரத் நடவடிக்கைகளை மேற்கொண்டான். கண்டி இராச்சியத்தினை முப்பிரிவாகப் பிரித்து அதனை இளவரசர்கள் மூவரிடையேயும் பகிர்ந்தளித்தான். ஊவா பிரதேசம் குமாரசிங்க இளவரசனுக்கும் மாத்தளைப் பிரதேசம் விஜேபால இளவரசனுக்கும் கண்டிப் பிரதேசம் இராஜசிங்க இளவரசனுக்கும் வழங்கப்பட்டன.

அவர்களுள் மிகவும் பலம்வாய்ந்தவன் இளையவனான மகா ஆஸ்தான குமாரன் எனப்பட்ட இரண்டாம் இராஜசிங்கனாவான். இவன் இளம் வயதிலிருந்தே கண்டி இராச்சியத்தை போர்த்துக்கேயரின் ஆக்கிரமிப்பிலிருந்து பாது காத்துக் கொள்வதற்கு தந்தைக்கு உதவி புரிந்து வந்தான். வீரத்தில் முன்னணியில் இருந்த அவன், கி.பி. 1630 ஆம் ஆண்டில் ரந்தெனிவெலப் போரில் போர்த்துக்கேயரைப் படுதோல்வியடையச் செய்தான். அத்தோடு எல்லையில் இருந்த போர்த்துக்கேயப் பிரதேசங்களைத் தாக்கி, அவர்களை முடக்கி வைத்தான்.

## II ஆம் இராஜசிங்க மன்னன் (கி.பி.1635 - 1687)

கி.பி. 1635 ஆம் ஆண்டில் செனரத் மன்னன் மரணித்ததுடன் இரண்டாம் இராஜசிங்கன் கண்டி இராச்சியத்தின் மன்னனானான். இவன் தனது ஆட்சியின்போது எதிர்நோக்கிய சவால்களாவன :

1. கண்டி இராச்சியத்தின் மீதான போர்த்துக்கேயரின் தாக்குதல்களை அடக்குதல்.

2. போர்த்துக்கேயரை இந்நாட்டிலிருந்து வெளியேற்றுதல்.

3. கண்டி இராச்சியப் பிரபுக்களிடமிருந்து ஏற்பட்ட எதிர்ப்புகளைக் கட்டுப்படுத்தல்.

4. ஒல்லாந்தரின் ஆக்கிரமிப்பில் இருந்து கண்டி இராச்சியத்தை காத்துக் கொள்ளல்.

போர்த்துக்கேயரிடமிருந்து கண்டி இராச்சியத்துக்கு ஏற்படும் தாக்குதல்களை எதிர்கொள்வதற்கு தனது தந்தையின் காலத்தில் இருந்தே செயற்பட்டு வந்துள்ளான். 1630 இல் இடம்பெற்ற ஊவாவின் ரந்தெனிவெல யுத்தம், 1638 இல் இடம்பெற்ற கன்னொறுவ யுத்தம் ஆகியவற்றில் போர்த்துக்கேயரைப் படுதோல்வியடையச் செய்தான்.

போர்த்துக்கேயரை இந்நாட்டிலிருந்து வெளியேற்றுவதற்குக் கடற்படைப் பலமுள்ள அந்நியரின் உதவி தேவைப்பட்டது. அதற்காக ஒல்லாந்தரின் உதவியைப் பெற்றுக் கொள்வதற்காக II ஆம் இராஜசிங்க மன்னன் செயற்பட்டான். கி.பி. 1638 - 1658 ஆண்டுகளுக்கிடையே ஒல்லாந்தரின்



*உரு. 8.2. பத்தொன்பதாம் நூற்றாண்டில் கண்டி தலதா மாளிகையின் பெரஹரவையும் (ஊர்வலமும்)கண்டி நகரின் வீதிகளின் தோற்றத்தையும் காண்பிக்கும் அபூர்வமான படம். (இப்படத்தின் உரிமை டைம்ஸ் சித்திரக் கூடத்திற்குரியது.)*

உதவியுடன் போர்த்துக்கேயரை இந்நாட்டின் கரையோரத்திலிருந்து முற்றாக வெளியேற்றினான். ஆனால் போர்த்துக்கேயரை இந்நாட்டில் இருந்து வெளியேற்றினாலும் அரசன் எதிர்பார்த்திராத விதமாக ஒல்லாந்தர் அப்பிரதேசங்களில் தமது ஆட்சியை ஸ்தாபித்துக் கொண்டனர். 1658 ஆம் ஆண்டு தொடக்கம் தமது ஆட்சிப் பரப்பை விஸ்தரித்துக் கொள்வதில் ஒல்லாந்தர் கவனஞ் செலுத்தினர். கி.பி. 1665 - 1668 ஆம் ஆண்டுகளில் ஒல்லாந்தர் கண்டி இராச்சியத்தின் சில பிரதேசங் களைக் கைப்பற்றிக் கொண்டனர். அப்போது அமைதியாக இருந்த இராஜசிங்கன், கி.பி. 1670 - 1675 ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் ஒல்லாந்தருக்கு எதிராகப் பல தாக்குதல்களை மேற்கொண்டு, அவர்கள் வசமிருந்த பல பிரதேசங்களை மீட்டுக் கொண்டான். இதன் மூலம் கண்டி இராச்சியத்தின் பலத்தைப் புரிந்து கொண்ட ஒல்லாந்தர், அதிலிருந்து மன்னருடன் ஒற்றுமையாகச் செயற்பட ஆரம்பித்தனர்.

ஒல்லாந்தர் கரையோரப் பிரதேசங்களில் தமது ஆட்சியை நிலைநிறுத்திக்கொண்டமையால், முழுநாட்டிற்கும் மன்னனாகும் ஆசை கைகூடி வரவில்லை. என்றாலும் போர்த்துக்கேயரை இந்நாட்டில் இருந்து வெளியேற்றியபோது அவர்களிடமிருந்த கணிசமான பிரதேசங்களைத் தனது ஆட்சிக்கு உட்படுத்திக் கொள்ள மன்னனால் இயலுமாயிருந்தது. கற்பிட்டி, சிலாபம், திருகோணமலை, மட்டக்களப்பு முதலிய துறை முகங்கள் இக்காலத்தில் கண்டி இராச்சியத்திற்கு உரித்தாயின.

இவ்வாறாக கண்டி இராச்சியத்தின் ஆட்சிப் பரம்பலுக்கு வழிவகுத்த இம்மன்னன், ஐம்பது ஆண்டுகளுக்கு மேற்பட்ட ஆட்சிக்கால முடிவில் 1687 இல் காலமானான்.

### II ஆம் விமலதர்மசூரிய மன்னன்

(கி.பி.1687- 1707)

II ஆம் இராஜசிங்கனின் மரணத்தின் பின்னர் அவனது மகனான II ஆம் விமலதர்மசூரியன் மன்னனானான். இவன் தந்தையைப்போல ஆற்றல் வாய்ந்தவனாக இருக்கவில்லை. இதனால் கண்டி இராச்சியப் பிரதானிகள் இக்காலத்தில் தமது அதிகாரத்தைப் பலப்படுத்திக் கொண்டனர். இவன் மன்னனான பின்னர் ஒல்லாந்தருடன் சமாதானமாக நடந்துகொண்டான். திறமை வாய்ந்த அரசனாக இல்லாவிடினும் தனது தந்தையின் காலத்தில் விரிவடைந்திருந்த கண்டி இராச்சியப் பிரதேசங்களைப் பாதுகாத்துக் கொள்ள இவனால் இயலுமாயிருந்தது.

இம்மன்னன் ஆட்சிக்கு வரும்போது கண்டி இராச்சியத்தில் உபசம்பதா தளர்ச்சியுற்றிருந்தது. எனவே அதனைப் புத்தெழுச்சி அடையச் செய்வதற்காக பர்மாவில் இருந்து உபசம்பதாவைத் தருவித்து, உபசம்பதா சடங்கை நடத்துவித்தான். அதற்கு மன்னனுக்கு ஒல்லாந்தர் உதவியளித்தனர். அவன் தலதா மாளிகையை புனர்நிர்மாணம் செய்தான். 1707 ஆம் ஆண்டில் அவன் காலமானான்.

### ஸ்ரீ வீர பராக்கிரம நரேந்திரசிங்க மன்னன் (கி.பி. 1707 - 1739)

இரண்டாம் விமலதர்மசூரிய மன்னனின் மகனான ஸ்ரீ வீர பராக்கிரம நரேந்திரசிங்க, கி.பி. 1707 ஆம் ஆண்டில் கண்டி இராச்சியத்திற்கு மன்னனானான். இவனுக்கு ஆட்சித் துறையில் போதிய அனுபவம் இல்லாமல் இருந்தமை பெரும் பலவீனமாக அமைந்தது. இதனால் கண்டி இராச்சியத்தின் பிரதானிகள் தமது அதிகாரத்தை மேலும் வளர்த்துக் கொண்டனர்.

இவன் தனது தந்தையைப் போல தென்னிந்திய இளவரசி ஒருத்தியை மணந்து கொண்டான். இத்திருமண மூலம் மன்னனுக்கு குழந்தைப் பேறு கிட்டவில்லை. அதனால் தென்னிந்தியர்களின் வழக்கப்படி, அரசியின் சகோதரனுக்கு அரசு உரிமையானது.

## நாயக்க அரச வம்ச ஆட்சி

## (கி.பி.1739 - 1815)

### ஸ்ரீ விஜய இராஜசிங்க மன்னன்

(கி.பி.1739 - 1747)

ஸ்ரீ வீரபராக்கிரம நரேந்திரசிங்க மன்னன் வாரிசு இன்றி 1739 இல் இறந்தான். அப்போது தென்னிந்திய வழக்கப்படி மகாராணியின் சகோதரனான ஸ்ரீ விஜய இராஜசிங்க கண்டி இராச்சியத்திற்கு மன்னனானான். இவனில் இருந்தே நாயக்க வம்ச ஆட்சி ஆரம்பித்தது. ஸ்ரீ விஜய இராஜசிங்க மன்னன் எதிர்நோக்கிய பிரதான சவால் அரச சபை பிரதானிகளுக்கு இருந்த அதிக அதிகாரப் பலமாகும். இதனை சமநிலைப்படுத்துவதற்காக அவன் தனது உறவினர்களான நாயக்கர்களுக்கு அரச சபையில் பதவிகளை வழங்கினான்.

புத்த சமயத்தைத் தழுவிக் கொண்டு நீண்ட காலமாக பிக்குகளுடனே வாழ்ந்த இவன், வெலிவிட்ட சரணங்கர தேரரின் ஆலோசனைக்கு அமைய பர்மாவிலிருந்து குருமாரைத் தருவித்து, உபசம்பதாவை நடத்த முற்பட்டாலும் அது வெற்றிபெறவில்லை.

இம்மன்னன் தென்னிந்திய இளவரசியை திருமணம் செய்திருந்த போதிலும் வாரிசு இன்றி 1747 இல் இறந்தான்.

### கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்க மன்னன்

(கி.பி.1747-1781)

ஸ்ரீ விஜய இராஜசிங்கன் மன்னனின் மரணத்தின் பின்னர் அவனுடைய மனைவியின் சகோதரனான கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்க கி.பி. 1747 இல் கண்டி இராச்சியத்திற்கு மன்னனானான். பதவிக்கு வரும்போது பதினாறே வயதானபடியால் அவனுடைய தந்தையான நரேனப்பா நாயக்கன் ஆட்சியில் தலையிட்டு வந்ததாகக் கூறப்படுகின்றது.

கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்கன் மன்னனாகும்போது இந்நாட்டில் பௌத்த சமயம் பொலிவற்றுக் காணப்பட்டது. ஆகையால் வெலிவிட்ட சரணங்கர பிக்குவின் ஆலோசனைப்படி நாடெங்கும் பௌத்த சமய மறுமலர்ச்சியை ஏற்படுத்துவதற்கான நடவடிக்கைகளை இம்

மன்னன் மேற்கொண்டான். அதன் பொருட்டு அவன் மேற்கொண்ட நடவடிக்கைகள் வருமாறு :

- மன்னன் சீய நாட்டிற்கு தூதுக் குழுவொன்றை அனுப்பி உபாலி தேரர் உட்பட இன்னும் பல பிக்குகளை அழைத்து 1753 ஆம் ஆண்டில் உபசம்பதாவை நடத்தினான். அதன் மூலம் இன்றைய சியம் நிக்காய இங்கு ஆரம்பிக்கப்பட்டது.

- கண்டி இராச்சியத்திலும் தாழ் நாட்டிலும் காணப்பட்ட விகாரைகளைப் புனரமைத்தமை.

- வெலிவிட்ட ஸ்ரீ சரணங்கர பிக்குவிற்கு ''சங்க ராஜா'' பதவியை வழங்கி, பௌத்த மறுமலர்ச்சியை ஏற்படுத்த அவருக்கு ஒத்துழைப்பை வழங்கியமை.

- 1760 - 1765 காலகட்டத்தில் கண்டி இராச்சியத்திற்கும் ஒல்லாந்தருக்கும் இடையே நல்லுறவு முறிவடைந்தது. இதனால் இருசாராருக்கும் இடையே பல மோதல்கள் ஏற்பட்டன. 1766 இல் அரசனுக்கும் ஒல்லாந்தருக்கும் இடையே சமாதான ஒப்பந்தம் கைச்சாத்திட்ட பின்னரே அந்த மோதல்கள் முடிவடைந்தன. இம்மன்னன் 1781 ஆம் ஆண்டு வாரிசு உரிமையின்றி மரணமடைந்தான்.

### இராஜாதி இராஜசிங்க மன்னன்

### (கி.பி.1781- 1798)

கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்கனின் பின்னர் அவனுடைய சகோதரன் இராஜாதி இராஜசிங்கன் என்னும் பெயருடன் கண்டிக்கு மன்னனானான். இதுவரை கண்டி இராச்சியப் பிரதானிகளுக்கும் நாயக்க மன்னருக்கும் இடையிலான அபிப்பிராயபேதம் வளர்ந்து கொண்டிருந்தது.

இவனது ஆட்சியின்போது முக்கியமான சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. கி.பி. 1796 இல் ஆங்கிலேயர் கரையோரத்தை ஒல்லாந்தரிடம் இருந்து கைப்பற்றிக் கொண்டதே அதுவாகும். இம்மன்னனும் வாரிசின்றி கி.பி. 1798 இல் காலமானான்

### ஸ்ரீ விக்கிரம இராஜசிங்க மன்னன் (1798 - 1815)

இராஜசிங்க மன்னனின் மரணத்தின் பின்னர் அப்போது பிரதம பிரதானியாக இருந்த பிலிமத்தலாவையின் தேவைக்காக, கண்ண சாமி எனும் இளவரசன், ஸ்ரீ விக்கிரம இராஜ சிங்கன் எனும் பெயருடன் 1798 இல் சிம்மாசனம் ஏற்றப்பட்டான். இம்மன்னன் தனது நாயக்க உறவினரின் வார்த்தைகளுக்குக் கட்டுப்பட்டவனாய் இருந்தபடியால், கண்டி இராச்சியப் பிரதானிகளுக்கும் மன்னருக்கும் இடையிலான உறவு சீர்க்கெடத் தொடங்கியது.

கி.பி. 1803 ஆம் ஆண்டில் ஆங்கிலேயர் கண்டி இராச்சியத்தை ஆக்கிரமித்தபோதும் மக்களின் ஒத்துழைப்புடன் மன்னன் அவர்களை வெற்றி கொண்டான். என்றாலும் இம்மன்னனின் இறுதிக்கால ஆட்சியின்போது அவன் கொடூரமானவனாக நடந்து கொண்டபடியால், மன்னனுக்கும் மக்களுக்கும் இடையிலான உறவும் சீர்கெட்டுச் சென்றது. இச்சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி ஆங்கிலேயர் கி.பி. 1815 பெப்ரவரி மாதத்தில் கண்டி இராச்சியத்திற்குப் படையை அனுப்பி மன்னனைக் கைதுசெய்தனர். கி.பி. 1815 மார்ச் 2 ஆம் திகதி கண்டி இராச்சியப் பிரதானிகளுக்கும் ஆங்கிலேயருக்கும் இடையே இடம்பெற்ற கண்டிய ஒப்பந்தப்படி இவ்விராச்சியம் ஆங்கிலேயருக்கு அடிமைப்பட்டது. ஆங்கிலேயரிடம் கைதியாக இருந்த மன்னன், ஆங்கிலேயரால் வேலூருக்கு நாடு கடத்தப்பட்டான்.

## 8.2. கண்டி இராச்சியத்தின் நிர்வாகக் கட்டமைப்பு

கண்டி இராச்சியத்தின் நிர்வாக அமைப்பில் முதன்மை நபராக விளங்கியவன் மன்னனாவான். மன்னனுக்கு உதவுவதற்காகப் பிரதானிகள் இருவர் இருந்தனர். அவர்கள் இருவரும் மன்னனுக்கு அடுத்தபடி அரசில் அந்தஸ்துப் பெற்றிருந்தனர். அரசின் முக்கிய விடயங்களைக் கலந்துரையாடுவதற்கு அரச சபை ஒன்று இருந்தது. அரசரின் தலைமையில்கூடும் அச்சபைக்கு பிரதானிகள், திசாவைகள், தலைமைச் செயலாளர், பிரதேச செயலாளர்கள் என்போர் சமுகமளித்தனர். நிர்வாகம் பல்வேறு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அரசனின் நேரடி நிர்வாகத்திற்கு அரச மாளிகைச் சேவைகள் உட்பட்டிருந்தன. அரசனின் மேற்பார்வையில் ரட்டவசம எனும் பிரதேசங்கள் பிரதம பிரதானி மூலம் நிர்வகிக்கப்பட்டது. பெருவரி அல்லது அந்தந்தப் பிரதானிகளின் கீழ் இயங்கிய வரி வசூலிக்கும் பிரிவு விகாரை, தேவாலயங்களின் நிர்வாகம் என்பன பிரதான அங்கங்களாயிருந்தன.

## அரசனின் அதிகாரங்கள்

- நாட்டின் உயர் அதிகாரம் இவனுக்கே உரியது.
- நாட்டின் அமைதியைப் பேணுவதும் பாது காப்பை வழங்குவதும் அரசனின் பிரதான செயற்பாடுகளாகும்.
- சம்பிரதாய பூர்வமான, முன்னைய நடை முறைகளுக்கமைய மன்னன் செயற்பட வேண்டி இருந்தது.
- நாட்டின் உயர் நீதித்துறை அதிகாரம் மன்னனிடமே இருந்தது. குற்றவாளிகளுக்கு மரணதண்டனை வழங்கும் அதிகாரம் மன்னனுக்கு மட்டுமே இருந்தது
- நாட்டின் அனைத்து அரசியல் கருமங்களும் பொருளாதார செயற்பாடுகளும் நிர்வாகப் பணிகளும் அரசனைத் தலைமையாகக் கொண்டே செயற்பட்டன.

## பிரதானிகள்

பிரதம பிரதானி, இரண்டாவது பிரதம பிரதானி என இரு பதவிகள் இருந்துவந்தன. பிரதம பிரதானி பல்லேகம்பா பிரதானி என்றும் இராண்டாவது பிரதம பிரதானி உடகம்பா பிரதானி என்றும் அழைக்கப்பட்டனர்.

கீழ்வரும் பிரதேசங்கள் அந்தந்த நிர்வாகிகளால் நிர்வகிக்கப்பட்டன.

| மகா அதிகாரம் | இரண்டாவது அதிகாரம் |
|---|---|
| ஏழு கோறளை | நான்கு கோறளைகள் |
| ஊவா | மூன்று கோறளைகள் |
| மாத்தளை | சப்ரகமுவ |
| வலப்பனை | ஊவா பிரதேசம் |
| பிந்தென்ன | உடுநுவர, யட்டிநுவர |
| வெல்லஸ்ஸ | தும்பனே |
| நுவர கலாவிய | புலத்கம, கொத்மலை |

பிரதானிகளின் கட்டளைகளை, செய்திகளை பிராந்திய அதிகாரிகளுக்குக் கொண்டு சென்ற வர்கள் கடுபுள்ளே எனக் குறிப்பிடப்பட்டனர். வெள்ளி பூண் இடப்பட்ட, முனை வளைந்த பிரம்பு ஒன்று அவர்களது பதவியின் அடை யாளமாக இருந்தது.

## மாளிகை (மஹவாசலை)க்குப் பொறுப்பான அதிகாரிகள்

அரச பதவியின் கம்பீரத்தைப் பேணிக் கொண்டு அரசமாளிகைச் செயற்பாடுகளை நடத்திச் செல் வதற்கு இவ்வதிகாரிகளிடம் பொறுப்பளிக்கப் பட்டிருந்தது. அரச மாளிகையினருக்கு உணவு, குடிபானம், உடை, ஆபரணம், பாவனைப் பொருள்கள் என்பவற்றை வழங்குவது இவர்களது பொறுப்பாகும் மன்னரின் நேரடிக் கட்டுப்பாட்டின் கீழ் இவர்கள் இயங்கினர். மாளிகையின் அந்தந்தப் பொறுப்புக்களுக்கு நிலமே என்போர் மற்றும் முகாந்திரங்கள் இருந்து வந்தனர். யானைகளுக்குப் பொறுப்பான (கஜநாயக்க) நிலமே பிரதம செயலாளர், களஞ்சியப் பொறுப்பாளர் புனித தந்ததாதுவிற்குப் பொறுப்பான தியவடன நிலமே, ஆடையணிகளுக்குப் பொறுப்பான சலுவடன நிலமே, உணவு வழங்கலுக்குப் பொறுப்பான பத்வடன நிலமே, குதிரைலாய முகாந்திரம், கவியரங்கிற்குப் பொறுப்பான முகாந்திரம் போன்றவர்கள் மாளிகை நிர்வாகத்தினராவர்.

## 8.3. ரட்டவசம எனும் பிரதேச நிர்வாகம்.

கண்டி இராச்சியம் ரட்ட, திஸாவை என்று 21 பிரிவுகளால் ஆனதாகும். கண்டி நகருக்கு அருகாமையில் இருந்த உடுநுவர, யடிநுவர, தும்பனை, ஹரிஸ்பத்துவ, தும்பர, ஹேவாஹெட்ட, கொத்மல, உடபுலத்கம, பாத புலத்கம என்பவை ரட்ட என அழைக்கப்பட்ட பிரதேசங்களாகும். நான்கு கோறளை, மூன்று கோறளை, ஊவா, சப்ரகமுவை, மாத்தளை, வலப்பனை என்பவற்றுடன் 12 திஸாவைகள் இருந்தன. ரட்ட எனும் பிரதேசங்களுக்குப் பொறுப்பான அதிகாரிகள் ரட்டே ரால அல்லது ரட்டே மஹத்தயா எனப்பட்டனர். அவர்களுக்குக் கீழ் லியனரால, உண்டிய ரால ஆகியோருடன் மற்றும் சிறு அதிகாரிகள் பலரும் இருந்துள்ளனர். திசாவைகளுக்குப் பொறுப்பானவர்கள் திஸா வைகள் எனப்பட்டனர்.

திசாவைகள் கோறளைகளாகவும், கோறளைகள் பற்று என்றும் பிரிக்கப்பட்டிருந்தன. கோற ளைக்குப் பொறுப்பான அதிகாரி கோறளை

எனப்பட்டார். கோறளையில் ஒவ்வொரு குலத்தவருக்கும் முகாந்திரங்கள் இருந்ததோடு அவர்களுக்குக் கீழ் ஒவ்வொரு கிராமத்தின் ஒழுங்குக்குப் பொறுப்பாக விதானைகளும் இருந்தனர்.

### வரி (பத்தே) வசூலிப்பு

அரசியல் ரீதியாக அமைந்த பிராந்திய நிர்வாகங்களுக்கு மேலதிகமாக திசாவைகளில் வாழ்ந்துவந்த தொழில் அல்லது குலத்தின் அடிப்படையிலான தனியான அமைப்புகளும் காணப்பட்டன. ஆரம்ப காலத்தில் வரி அமைப்பு தனியாகச் செயற்பட்டாலும் கண்டி இராச்சியத்தின் இறுதிக் காலத்தில் அது திசாவைமாரின் கீழ் செயற்பட்டது. இவ்வமைப்பு கீழ்வரும் ஐந்து பிரிவுகளைக் கொண்டிருந்தது.

மடிகே பத்த (போக்குவரத்திற்கான வரி)

குருவே பத்த (யானை பிடித்தலுக்கான வரி)

படஹெல பத்த (வனைதலுக்கான வரி)

ரதா பத்த (சலவைக்கான வரி)

ஹெந்த பத்த (நெசவுக்கான வரி)

### விகாரைகள், தேவாலயங்களின் நிர்வாகம்

விகாரைகளின் நிர்வாகம் மஹாநாயக்க, அனு நாயக்க என்போரின் கீழ் செயற்பட்டது. தலதா மாளிகையின் நிர்வாகம் தியவடன நிலமேயின் கீழ் இருந்தது. விகாரைகள், தேவாலயங்கள் என்பவற்றைப் பரிபாலித்தல், பூஜைகள், பெரஹராக்கள் நடாத்துதல் என்பவற்றிற்கு கிராமத் தவர்கள் ராஜகாரிய முறையில் தமது சேவைகளை வழங்கினர்.

### நீதிமன்றச் செயற்பாடுகள்

உயர் நீதி அதிகாரம் மன்னனுக்கே உரியது.

ஒவ்வொரு உத்தியோகத்தருக்கும் அவரவர் உத்தியோகத்திற்கு அமைவாக நீதி அதிகாரம் இருந்தது. சில வழக்குகளை விசாரிக்கும் அதிகாரம் மன்னனுக்கு மட்டுமே உரியது.

**மன்னனால் மட்டுமே தீர்ப்பு வழங்கப்பட்ட வழக்குகள்**

- முக்கிய தலைவர் தொடர்பான வழக்குகள்
- கிளர்ச்சிகள், குழப்பங்கள் தொடர்பான வழக்குகள்.
- சூழ்ச்சி தொடர்பான வழக்குகள்
- இராச துரோகத்துடன் தொடர்புபட்ட வழக்குகள்.
- விகாரைகள், பிக்குகள் தொடர்பான வழக்குகள்.

**அக்காலத்தில் தவறு செய்தோருக்கு வழங்கப் பட்ட தண்டனைகள்**

- கன்னத்தில் அறைதல்.
- விலங்கிடுதல்.
- முழந்தாழிடச் செய்தல்.
- முடியைக் கத்தரித்தல்.
- தென்னை மட்டையால் அடித்தல்.
- துர்நாற்றத்தின் மத்தியில் வைத்தல்.
- கசையால் அடித்தல்.
- கீழ் குலத்தவராக்குதல்.
- நாடு கடத்துதல்.
- நீரில் மூழ்கடித்துக் கொல்லுதல்.
- யானையால் மிதித்துக் கொல்லுதல்.

### பொருளாதார அமைப்பு

கண்டி இராச்சிய காலத்தில் விவசாயப் பொருளா தாரமே நிலவியது.

- அது நுகர்வை அடிப்படையாகக் கொண்ட தாகும்
- பொருளாதாரம் சுயதேவையை அடிப்படை யாகக் கொண்டிருந்தது.
- பெருமளவிற்கு மலைப்பாங்கான நிலமான படியால் நெற்செய்கைக்கான பிரதேசம் வரை யறுக்கப்பட்டிருந்தது.
- இராசரட்டை, உருகுணுரட்டையின் பிர தேசங்கள் கண்டி இராச்சியத்திற்கு உட் பட்டிருந்தாலும் அங்கு இருந்த நீர்ப்பாசன அமைப்புக்கள் சீர்க்குலைந்து போயிருந்த மையால் நெற்செய்கைக்கான வசதிகள் வரை யறுக்கப்பட்டிருந்தன.
- மலைப்பிரதேசங்களின் பள்ளத்தாக்குகளில் படிமுறையிலும் சம நிலங்களில் வயல் வெளிகளிலும் நெற்பயிர்ச் செய்கை மேற் கொள்ளப்பட்டது.



*உரு 8.3. கண்டி இராச்சியக்காலத்தில் பாய் இழைத்தல் கைத்தொழிலில் ஈடுபட்டுள்ள விதத்தைக் காட்டும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொழிலாளர் குடும்பம் ஒன்று.(இப்படத்தின் உரிமை டைம்ஸ் சித்திரக் கூடத்திற்குரியது.)*

- கண்டி இராச்சியத்தில் அதிகளவான நிலம் சேனைச் செய்கைக்கே பயன்படுத்தப்பட்டது.
- குரக்கன், சோளம், தினை, சாமை போன்ற தானிய வகைகளும் கிழங்கு வகைகளும் பயிரிடப்பட்டன.
- வீட்டுத் தோட்டங்களில் பலாக்காய், ஈரப் பலாக்காய், மிளகு, சாதிக்காய், கராம்பு, பாக்கு, மரக்கறி, பழவகை என்பன செய்கை பண்ணப்பட்டன.
- மேலதிக பயிர்கள் மூலமும் உணவுத் தேவைகள் பூர்த்திசெய்துகொள்ளப்பட்டன.
- இரும்பு உலோகம், மரம், அரக்கு, பன்புல் கைத் தொழில்கள் முன்னேற்றமடைந்திருந்தன.
- விவசாயத் தேவைகளுக்காகவும் பால் பெறுவதற்காகவும் மிருக வளர்ப்பு இடம் பெற்றது.

## 8.4. சமூக அமைப்பு

- நாட்டின் நிலம் அனைத்தும் அரசனுக்கே உரியது என்று ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தது.
- உரிமையையும் அனுபவித்தலையும் அடிப் படையாகக் கொண்டு நிலம் பல்வேறு வகைப் படுத்தப்பட்டிருந்தது;

| | | |
|---|---|---|
| **கபடாகம்** | - | அரச மாளிகையின் தேவைக்காகப் பயன்படுத் தப்பட்டவை. |
| **நிந்தகம்** | - | பிரதானிகளின் சேவைக் காக வழங்கப்பட்டவை. |
| **தேவாலயம்** | - | தேவாலயங்களுக்கு தானமளிக்கப்பட்டவை. |
| **விகாரகம்** | - | விகாரைகளுக்கு தானமளிக்கப்பட்டவை |

பரவேனிகம் - கிராமத்தவர்கள் பரம்பரையாக அனுபவித்தவை.

நாட்டு மக்கள் தாம் அனுபவிக்கும் நிலத்திற்காக ஏதாவது ஒரு சேவையை அல்லது குறிப்பிட்ட தொகைப் பொருள்களை மன்னருக்கு வழங்க வேண்டியிருந்தது.

பொதுமக்களினால் வழங்கப்படும் சேவை ராஜகாரியம் எனப்பட்டது.

- **கண்டி இராச்சியத்தில்**

கிராமிய சமூகமே காணப்பட்டது.

கிராமங்கள் சுயதேவைப் பூர்த்தி அடைந்திருந்தன.

சமூகம் குலத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தது.

ஒவ்வொரு குலத்தவருக்கும் உரித்தான பொருளாதார நடவடிக்கைகள் காணப்பட்டன.

திருமணங்கள் தத்தமது குலத்தவரிடையே இடம்பெற்றன.

தீக, பின்ன, ஒரே வீட்டில் சாப்பிடுதல் என்றவாறு மூன்று வகைத் திருமணங்கள் இடம்பெற்றன.

கிராமிய சமூகத்தில் அனைத்து நடவடிக்கைகளும் உழைப்புப் பரிமாற்று முறையில் (அத்தம்) இடம்பெற்றன.

குடும்பம் பிரதான சமூக அலகாகும்.

நற்பண்புகளைக் கைக்கொள்ளல் சமூகத்தின் பிரதான இலட்சணமாயிருந்தது.

கிராமிய வாழ்க்கையின் பிரிக்க முடியாத அம்சமாக விகாரைகள் காணப்பட்டன.

**கண்டி இராச்சிய மன்னர்கள்**

| | |
|---|---|
| சேனா சம்மத விக்கிரமபாகு | (1469-1511) |
| ஜயவீர பண்டாரன் | (1511-1551) |
| கரலியத்த பண்டாரன் | (1551-1581) |
| Iஆம் இராஜசிங்கன் | (1581-1591) |
| Iஆம் விமலதர்ம சூரியன் | (1592-1604) |
| செனரத் | (1604-1635) |
| II ஆம் இராஜசிங்கன் | (1635-1687) |
| II ஆம் விமலதர்ம சூரியன் | (1687-1707) |
| ஸ்ரீ வீர பராக்கிரம நரேந்திர சிங்கன் | (1707-1739) |
| ஸ்ரீ விஜய இராஜசிங்கன் | (1739-1747) |
| கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்கன் | (1747-1781) |
| இராஜாதி இராஜசிங்கன் | (1781-1798) |
| ஸ்ரீ விக்ரம இராஜசிங்கன் | (1798-1815) |

**முக்கியமான விடயங்கள்**

1. கண்டி இலங்கையின் இறுதி இராச்சியமாகும். அக்காலகட்டத்தில் ஐரோப்பியர்களான போர்த்துக்கேய, ஒல்லாந்த, ஆங்கிலேயர் ஆகிய மூவினத்தவருடன் செயற்பட நேர்ந்தது.
2. இக்காலத்தில் எங்களது மன்னர்கள் நாட்டின் ஒருமைப்பாட்டைக் காப்பாற்றுவதற்கு மிகவும் பிரயத்தனப்பட்டு பொருத்தமான முறையில் செயற்பட்டனர்.
3. அக்கால சமூகத்தில் பல்வேறுபட்ட தொழில் குழுவினர் ஒரமைப்பாகச் செயற்பட்டனர்.
4. கண்டி இராச்சியத்தை ஆண்ட மன்னர்களில் சிலர் தென்னிந்திய நாயக்க வம்சத்தைச் சேர்ந்தோராவர்.
5. கி.பி.1815 ஆம் ஆண்டில் அப்போதைய பிரித்தானிய ஆளுநரான றொபட் பிரௌன்றிக் உட்பட ஆங்கிலேய அதிகாரிகளுக்கும் கண்டி இராச்சிய சிங்கள பிரதானிகள் சிலருக்கும் இடையே கைச்சாத்தான கண்டிய உடன்படிக்கை என்று குறிப்பிடப்படும் ஆவணத்தின் மூலம் கண்டி இராச்சியம் இங்கிலாந்தின் மன்னரிடம் கையளிக்கப்பட்டது. இது கண்டி இராச்சியத்திற்கு முடிவுகட்டிய முக்கிய காரணமாக அமைந்தது.

## செயற்பாடு

1. கண்டி இராச்சிய மன்னர்கள் எவரேனும் இருவரது முக்கியத்துவத்தை உதாரணங்கள் தந்து விளக்குக.
2. கண்டி இராச்சிய நிர்வாகக் கட்டமைப்பு, சமூக பொருளாதார செயற்பாட்டிற்கு பங்களித்த விதத்தைக் குறிப்பிடுக.
3. கண்டி இராச்சிய சமூக அமைப்புப் பற்றி பத்திரிகைக்குக் கடிதம் ஒன்றைத் தயாரிக்க.

# 9 மறுமலர்ச்சி

## அறிமுகம்

மறுமலர்ச்சி என்ற சொல்லின் கருத்து மீண்டும் மலர்தல் என்பதாகும். கி.பி. 14 ஆம் நூற்றாண்டு முதல் 16 ஆம் நூற்றாண்டு வரை ஐரோப்பாவின் கலை, விஞ்ஞானம் ஆகிய துறைகளில் ஏற்பட்ட பாரிய மாற்றத்தை வெளிப்படுத்த வரலாற்றாளர்கள் மறுமலர்ச்சி என்ற சொல்லைப் பயன்படுத்தினர்.

பழைய கிரேக்க, உரோமப் பண்பாடுகள் நிலவிய காலகட்டம் ஐரோப்பிய வரலாற்றில் பழைய யுகமாகக் கணிக்கப்படுகின்றது. கி.பி. 5 ஆம் நூற்றாண்டில் உரோமப் பண்பாடு வீழ்ச்சி அடைந்த பின்னர் உள்ள ஆயிரம் ஆண்டுகள் ஐரோப்பிய வரலாற்றில் மத்திய யுகம் எனப்படுகின்றது. மத்திய யுகத்தின் இறுதிப் பகுதியில் பழைய கிரேக்க, உரோமப் பண்பாடுகளில் நிலவிய இலக்கியம், கலை, மெய்யியல் தொடர்பாக மீளாய்வு செய்தலில் ஐரோப்பியர் மிகுந்த ஆர்வம் காட்டினர். அதன் விளைவாக கிரேக்க, உரோமப் பண்பாடுகளி லுள்ள பண்புகளை மீண்டும் பயன்படுத்தவும் இலக்கியம், மெய்யியல் என்பவற்றை ஆழ மாகக் கற்பதிலும் ஐரோப்பியர் ஆர்வம் காட்டியதால் ஐரோப்பிய சமுதாயத்தில் பாரிய மாற்றம் ஏற்பட்டது. இதன்மூலம் மேற் கூறப்பட்ட பழைய நாகரிகம் மீண்டும் மலர்தல் என்ற கருத்துடைய மறுமலர்ச்சி என்ற சொல் பயன்படுத்தப்பட்டது. மறுமலர்ச்சிக் காலத்தில் ஐரோப்பாவில் அனைத்துத் துறைகளிலும் ஏற்பட்ட வேறுபாடுகள் காரணமாக மத்திய யுகம் மறைந்து, நவீன யுகம் ஆரம்பமானது.

## 9.1 மறுமலர்ச்சி தோன்றுவதற்கான காரணங்கள்

- **கொன்ஸ்தாந்திநோபிள் துருக்கியர் வசமாதல்**

மத்திய காலத்தின் இறுதிப் பகுதியில் நன்கு முன்னேற்றமடைந்த வர்த்தக நகரான கொன்ஸ் தாந்திநோபிள், ஐரோப்பிய கல்விமான்களைக் கவர்ந்த ஓரிடமாக விளங்கியது. கொன்ஸ் தாந்திநோபிள் நகரிலிருந்த நூலகங்களில் கிரேக்க, உரோம இலக்கிய நூல்கள் வைக்கப் பட்டிருந்ததுடன் அறிஞர்கள் அவற்றைக் கற்பதில் ஈடுபட்டிருந்தனர். எனினும் கி.பி. 1453 ஆம் ஆண்டு இந்நகர் இஸ்லாமியர் ஆன துருக்கியரின் கைகளுக்கு வந்ததால் கத்தோலிக்க சமயத்தைப் பின்பற்றிய அறிஞர்களால் தொடர்ந்து அந்நகரில் வாழ முடியாது போனது. இதனால் அவர்கள் கிரேக்க, உரோம நூல்களுடன் ஐரோப்பாவின் ஏனைய நாடுகளுக்குச் சென்று அங்கு கிரேக்க, இலத்தீன் மொழிகளைப் பரப்பினர். இதனால் கிரேக்க, உரோமப் பண்பாடுகளில் மறுமலர்ச்சி ஏற்பட்டது.

- **வர்த்தக முன்னேற்றமும் புதிய செல்வந்த வர்க்கத்தினரின் தோற்றமும்.**

கி.பி. 12 ஆம் நூற்றாண்டு தொடக்கம் மேற்கு, கிழக்கு நாடுகளுக்கிடையே வர்த்தகத் தொடர்பு ஏற்பட்டது. இதனால் வெனிஸ், ஜெனோவா போன்ற வர்த்தக நகரங்களையுடைய இத்தாலியில் வர்த்தகத்தின் மூலமும் வங்கிகளின் மூலமும் பணம் சேகரித்த புதிய செல்வந்தர்கள் உருவா கினர். இந்தச் செல்வந்தர்கள் பழைய மானிய முறைப் பிரபுக்களில் தங்கியிருப்போராக இல்லாதிருந்தமையால், இவர்கள் கலைகளில் அவதானம் செலுத்தக்கூடிய சுதந்திர மனநிலையை உடையோராக இருந்ததுடன் கலைகளை ஆதரிக்கக்கூடிய பணபலமும் அவர்களிடம் இருந்தது. இத்தாலியில் அக்காலத்தில் பல சிறிய இராச்சியங்கள் இருந்ததால் அவற்றில் தோன்றிய செல்வந்தர்கள் கலைகளுக்கு அனுச ரணை வழங்க முன்வந்தனர். மறுமலர்ச்சி முதலில் இத்தாலியில் தோன்றுவதற்கு இது முக்கிய காரணமாக அமைந்தது. இத்தாலியில் புளோரன்ஸ் நகரில் வாழ்ந்த மெடிசி(medici) என்ற செல்வந்தக் குடும்பத்தினர் கலைகளுக்கு அனுசரணை வழங்கிய செல்வந்தர்களுக்கு எடுத்துக்காட்டாகும்.

- **அறிவு வளர்ச்சி**

உரோமப் பண்பாடு வீழ்ச்சியடைந்த பின்னர் சமய நிறுவனங்களை மையமாகக் கொண்ட கல்வி முறையில் முக்கிய பாடங்களாக இறையியல், மெய்யியல், சட்டம் என்பன விளங்கின. எனினும் 12ஆம் நூற்றாண்டின் பின்னர் தோன்றிய புதிய



*உரு. 9.1 மைக்கல் ஆஞ்சலோவால் சிஸ்டைன் தேவாலயத்தில் வரையப்பட்டடுள்ள தேவ தூதர்கள் இருவரின் சித்திரமாகும்.*

கல்வி நிறுவனங்களில் பழைய இலக்கியம், நாடகம், இலக்கணம், வரலாறு போன்ற பாடங்கள் கற்பிக்கப்பட்டதால் மறுமலர்ச்சி காலத்தில் புதிய கல்விமான்கள் தோன்றினர். அச்சியந்திரமும் ஐரோப்பியரின் அறிவு வளர்ச் சிக்குக் காரணமாக அமைந்தது. 1454 ஆம் ஆண்டு கூடன்பேர்க் அச்சியந்திரத்தைக் கண்டுபிடித்ததும் இத்தாலியில் பல்வேறு பிரதேசங்களில் அச்சுக் கூடங்கள் ஆரம்பமாகின. இதன் மூலம் பல நூல்கள் வெளியிடப்பட்டமை கிரேக்க, உரோம நூல்கள் அச்சிடப்பட்டமை போன்ற காரணங்களால் இலக்கியம், நாடகம் என்பனவற்றில் அதிக அக்கறை காட்டப்பட்டது.

### சமயச் சீர்த்திருத்தம்

மத்திய காலத்தில் திருச்சபையிடம் அதிகாரங்கள் குவிந்து காணப்பட்டன. இதனால் சமயம் மனித வாழ்வின் பல துறைகளிலும் தாக்கம் செலுத்தியது. சில குருமார் சமய விடயங்களைவிட லௌகீக விடயங்களில் அதிக ஈடுபாடு கொண்டிருந்தனர். மறுமலர்ச்சிக் காலத்தில் ஏற்பட்ட அறிவு வளர்ச்சியின் விளைவாகத் திருச்சபையில் இருந்த குறைபாடுகள் விமர்சனத்துக்கு உள்ளாகின. இங்கிலாந்தின் ஜோன் வைக்கிளிப், பொஹேமி யாவில் ஜோன் ஹஸ், பிரான்சில் இராஸ்மஸ், ஜேர்மனியில் மார்ட்டின் லூதர் என்போர் திருச்ச பையை விமர்சித்தவர்களில் முக்கியமானவர்கள்.

### ஐரோப்பாவின் மாற்றத்திற்கு மறுமலர்ச்சியின் செல்வாக்கு

ஐரோப்பா அதுவரை மேற்கொண்ட பிரயாண வழியை மாற்றியமைக்க மறுமலர்ச்சி பெரும் பாலும் உதவியது. கல்வி, அரசியல், பொருளா தாரம், விஞ்ஞானம் ஆகிய துறைகளை மாற்றி யமைப்பதில் அது வெற்றி கண்டது.

### கல்வி மறுமலர்ச்சி

பதினைந்தாம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் இருந்த மொழி, இலக்கியம், சிற்பம், சித்திரம், கட்டடக் கலை ஆகிய துறைகளில் ஏற்பட்ட மாற்றம் கல்வி மறு மலர்ச்சி எனப்படும்.

### மொழி, இலக்கிய மறுமலர்ச்சி

மத்திய காலத்தில் ஐரோப்பிய நாடுகளில் கோத்திர மொழிகளே நடைமுறையில் இருந்தன. சமய செயற்பாடுகளிலும் சட்டக் கல்வி பயிலும்போதும் ஓரளவு இலத்தின் மொழி பயன்படுத்தப்பட்டது.

கிரேக்க மொழி வழக்கில் இல்லாத மொழி என்ற நிலையை அடைந்திருந்தது எனினும் மறு மலர்ச்சிக் காலத்தில் கிரேக்க, இலத்தின் மொழிகளில் எழுதப் பட்ட நூல்களின் பாவனை அதிகரித்ததால் அந்த மொழிகளில் மலர்ச்சி ஏற்பட்டது. இது கல்வி மறுமலர்ச்சியில் ஏற்பட்ட முக்கிய விளைவாகும். அவ்வாறே இலத் தின், கிரேக்கம் ஆகிய மொழி களைக் கற்றல் நாகரிகம் என்ற நிலையும் ஏற்பட்டது. இதனால் அதுவரை பேசப்பட்ட பிரதேச மொழிகள் வீழ்ச்சியடையத் தொடங்கின.



*உரு 9.2 கலிலியோகலிலி தொலைநோக்கியால் விண்வெளியைப் பரீட்சிக்கும் விதத்தைக் காட்டும் சித்திரம். விஞ்ஞானக் கண்டுப்பிடிப்புக்கள் ஐரோப்பாவில் மறுமலர்ச்சியின்போது காணப்பட்ட சிறப்பம்சமாகும்.*

கிரேக்க, இலத்தின் மொழிகளைக் கற்ற பின்னர் அந்த மொழிகளில் எழுதப்பட்ட நூல்களை வாசித் ததன் மூலம் இலக்கியத்திலும் புத்துணர்வு ஏற்பட்டது. குறிப்பாக கிரேக்க நாடகம் தொடர்பாக அதிக ஆர்வம் ஏற்பட்டது. இலக்கியத் துறைக்குப் பணி யாற்றிய பல்வேறு எழுத்தாளர்கள் இக்காலத்தில் உருவாகினர். இத்தாலியில் தாந்தே, பெற்ராக், பொக்காஷியோ, இங்கிலாந்தில் சேர் தோமஸ்மூர், பிரான்சிஸ் பேக்கன், வில்லியம் ஷேக்ஸ்பியர், பிரான்சில் இராஸ்மஸ் ஆகியோர் இவர்களில் முக்கியமானவர்கள். இவர்கள் பல நூல்களை எழுதினர். தாந்தே எழுதிய டிவினா கொமிடியா என்ற காவியத்தையும் பெற்ராக் லோராட்டாவுக்கு எழுதிய கவிதையையும் உதாரணங்களாகக் குறிப்பிடலாம்.

- **மானிடவாதம்**

மானிடவாதம் எனும் மனிதன் மேன்மையானவன் என்ற கொள்கை மறுமலர்ச்சியின் விசேட இயல்பாகும். மத்திய காலத்தில் அனைத்தும் சமயத்தை மையமாகக்கொண்டே நிகழ்ந்தன. எனினும் மானிடவாதம் முதன்மை பெற்றதால் அனைத்தையும் தர்க்கரீதியாகப் பார்க்கும் நிலை ஏற்பட்டது. இறையியல் பாடங்களுக்குப் பதிலாக மானிடவாதப் பாடங்களைக் கற்பிப்பது ஆரம் பமாகியது. உதாரணமாக இலக்கியம், வரலாறு, கலை, சட்டம், ஒழுக்கவியல் என்பனவற்றைக் குறிப்பிடலாம். இதனால் கிரேக்க, உரோம செல் வாக்கிற்கு உட்பட்டு, மானிடவாதம் சார்ந்த பல



*உரு 9.3 ஐரோப்பாவில் ஏற்பட்ட மறுமலர்ச்சி பல துறைகளிலும் தாக்கத்தை ஏற்படுத்தியது. கட்டடக்கலை, சிற்பக் கலை என்பனவும் அவற்றில் அடங்கும். மறுமலர்ச்சிக் கால கட்டடக் கலைக்கு அமைய பிரான்சில் அமைக்கப்பட்ட கட்டடமே இப்படத்தில் காணப்படுகின்றது.*

எழுத்தாளர்கள் பலர் இக்காலத்தில் தோற்றம் பெற்றனர்.

## மறுமலர்ச்சிக் காலத்தில் கலைத்துறையில் ஏற்பட்ட மாற்றங்கள்.

மத்திய காலத்தில் கலைஞர்கள் வகுப்புகளின் அடிப்படையிலேயே ஒழுங்கமைக்கப்பட்டனர். இதனால் அக்காலத்தில் தோற்றம் பெற்ற படைப்புகள் வகுப்பின் பெயரால் அறிமுகமாயின. அவ்வாறே கலைப் படைப்புகள் சமய சார்பாக அமைந்தமை சிறப்பம்சமாகும். கலைகளுக்கு அனுசரணை வழங்குவது திருச்சபைக்கு மட்டும் உரித்தாக இருந்தமையும் மத்தியகால சிந்தனை சமயப் படிப்பினைகளை அடிப்படையாகக் கொண்டு கட்டியெழுப்பப்பட்டமையும் இதற்கான காரணங்களாகும். இதனால் கலைஞர்கள் சுயாதீனமாக தமது படைப்புகளை நிர்மாணிக்கச் சந்தர்ப்பம் இருக்கவில்லை. எனினும் மறுமலர்ச்சி காலத்தில் இவை அனைத்தும் மாற்றமடைந்தன. கலைஞர்களை ஆதரிக்க உலகியலைப் போற்றும் செல்வந்தர்கள் முன்வந்தனர். மறுமலர்ச்சிக் காலத்தில் சிறப்பிடம் பெற்ற மானிடவாதத்தின் விளைவாகக் கலைஞர்கள் சுயமாகச் செயற்பட்டுத் தமது படைப்பினை வெளிக்கொணரத் தொடங்கினர். அதுவரை வகுப்பு ரீதியான பெயரில் அறிமுகமான கலைப்படைப்புகள் அவைகளை ஆக்கியோரின் பெயரில் வெளிவர நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. இதனால் சமயக் கருத்துக்களுக்கு முதலிடம் கொடுப்பதற்குப் பதிலாக தனியார்மயத்திற்கு இடமளிக்கும் உலகியலை இரசனைக்கு முதலிடம் வழங்கும் கலைப்படைப்புக்கள் பல தோன்றின.

### சித்திரக்கலை

கலைகளில் சித்திரக் கலையே மறுமலர்ச்சிக் காலத்தில் பெரும் மாற்றத்திற்கு உள்ளாகியது. இத்தாலியில் புளோரன்ஸ் நகரில் புதிய சித்திரக் கலைகளை உருவாக்கிய மத்திய நிலையம் ஒன்று இருந்தது. உலகியல் இரசனையின் பொருட்டு இயற்கைக்கு முதலிடமளித்து சித்திரம்,சிற்பம், என்பன நிர்மாணிக்கப்பட்டன. அதுவரை சமய சார்பாக முக்கிய இடம் வகித்த இயேசுநாதர், கன்னிமரியாள் என்போரின் உருவங்கள் வரையப் பட்டன. எனினும் மறுமலர்ச்சிக் காலத்தில் செல்வந்தர்களின் உருவங்கள் சித்திரமாக வரையப்படுவதைக் காணக்கூடியதாக உள்ளது. இக்காலத்தில் இருந்த சித்திரக் கலைஞர்களுள் லியானாடோ டாவின்சி, மைக்கல் ஆஞ்சலோ, ரபாயல், மெசெக்ஷியோ, பொட்டி ஷெல்லி என்போர் முக்கியமானவர்களாவர்.

லியானாடோ டாவின்சி சித்திரக் கலைஞராக மட்டுமன்றி, வேறுபல துறைகளிலும் சிறந்து விளங்கினார். அவர் கவிஞராகவும் பாடகராகவும் விஞ்ஞானியாகவும் பொறியியலாளராகவும் இருந் தார். அவரது கலைப்படைப்புகளான மோனலீசா, இயேசுநாதரின் இறுதி இராப்போசனம் போன்ற சித்திரங்கள் இன்றும் உலகப்புகழ் பெற்றவையாக திகழ்கின்றன.

மைக்கல் ஆஞ்சலோவும் அக்காலத்திலிருந்த சிறந்த சித்திரக் கலைஞராவார். அவர் சிற்பக் கலை யிலும் கட்டடக்கலையிலும் சிறந்து விளங்கினார். சிஸ்டைன் ஆலயத்தின் பாவுகையில் அவரால் வரையப்பட்ட சித்திரங்கள் சிறப்பிடம் பெறு கின்றன. இறுதித் தீர்ப்பு, சிஸ்டைன் ஆலயத்தில் ஆதாமின் சித்திரம் என்பன அவரின் படைப்புகளில் குறிப்பிடத்தக்கவையாகும்.

### சிற்பக்கலை

சிற்பக்கலையும் மறுமலர்ச்சிக் காலத்தில் சிறப்பிடம் பெற்றது. பளிங்குக் கற்களில் சிற்பங்கள் செய்தல் இக்காலத்தில் காணப்பட்ட சிறப்பம்சமாகும். மைக்கல் ஆஞ்சலோ மறுமலர்ச்சிக் காலத்தில் இருந்த சிறந்த சிற்பக் கலைஞராவார். மெடிசி குடும்பத்தில் லோரேன்சோ மெடிசியின் உருவத்தை இவர் பளிங்குக் கல்லில் வடிவமைத்தார். பியெட்டா, மோயிசன், தாவீது போன்ற உருவச் சிலைகள் இவரது படைப்பில் சிறப்பிடம் பெறுகின்றன.

### கட்டடக் கலை

மறுமலர்ச்சிக் காலத்தில் கட்டடக் கலையிலும் முக்கிய மாறுதல்கள் ஏற்பட்டன. மத்திய காலத்தில் நுனிக் கோபுரங்கள், வில்வளையக் கூரை, பிரமிட் வடிவிலான தூண்கள் என்பன கட்டடக்கலையின் சிறப்பம்சங்களாக விளங்கின. அதற்குப்பதிலாக மறுமலர்ச்சிக் காலத்தில் உரோமக் கட்டடக் கலைக்கு அமைய வட்ட வடிவிலான வில்வளையம், உயர்ந்த தூண், அரைவட்ட சிகரம் என்பன கட்டடக் கலையில் முக்கியத்துவம் பெற்றன. உரோமர்களைப் பின்பற்றி இக்காலத்தில் சொகுசான மாளிகை களும் அமைக்கப்பட்டன. மறுமலர்ச்சிக் காலக் கட்டடக் கலையின் சிறப்பினை எடுத்துக் காட்டும் கட்டடங்களாகப் புனித பேதுருவின் பெசிலிக்காவும்(ஆலயம்), புளோரன்சிலுள்ள பேராலயமும் விளங்கின. பிரமத்தே, மைக்கல் ஆஞ்சலோ, லியானடோ டாவின்சி, ரபாயல் ஆகியோர் மறுமலர்ச்சிக் காலத்தில் இருந்த சிறந்த கட்டடக் கலைஞர்களாவர்.

### விஞ்ஞான வளர்ச்சி

மறுமலர்ச்சிக் காலத்தின் முக்கிய நிகழ்வுகளில் விஞ்ஞான முன்னேற்றமே சிறந்த இடத்தினைப் பெறுகின்றது. கிரேக்க, உரோமனிய நூல்களில் இருந்து முன்மாதிரிகைகளை பெற்ற அறிஞர்கள், ஒரு விடயத்திற்கு மட்டும் கட்டுப்படாமல் பல விடயங்களையும் விஞ்ஞான ரீதியாக ஆராய முற்பட்டனர். புவி, சூரியன், சந்திரன், நட்சத் திரங்கள் போன்ற அனைத்தையும் அவர்கள் ஆராய்ந்தனர். இதன் விளைவாகப் புவி தொடர்பாகப் புதிய கருத்து முன்வைக்கப்பட்டது. அவ்வாறே விஞ்ஞானத் துறையிலும் முன்னேற்றம் ஏற்பட்டது.

### புவி தொடர்பாக முன்வைக்கப்பட்ட புதிய கருத்து

#### போலந்தரான நிக்கலஸ் கொபர்னிகஸ்

புவி கோள வடிவமானது எனவும் ஏனைய கோள்கள் சூரியனைச் சுற்றி வருவதாகவும் அவர் கண்டுபிடித்தார். விஞ்ஞானத்துறைக்குப் பாரிய பங்களிப்பினைச் செய்த இவர், நவீன வானியல் விஞ்ஞானத்தின் தந்தை எனப் போற்றப் படுகின்றார்.

### ஜேர்மனியரான ஜொஹென்ஸ் கெப்லர்

கெப்லர், கொபர்னிகஸ் கூறிய கருத்துக்களை உறுதிசெய்து அதனை முன்னெடுத்துச் சென்றதுடன், ஞாயிற்றுத் தொகுதிக் கோள்கள் அனைத்தும் சூரியனை நீள்வட்டப் பாதையில் சுற்றி வருவதாகவும் கூறினார்.

### இத்தாலியரான கலிலியோ கலிலி

தொலைநோக்கியைக் கண்டுபிடித்தார். இதன் மூலம் வானியல் ஆராய்ச்சியில் ஈடுபட்டு வியாழனைச் சூழ உபகோள்கள் உள்ளன எனக் கண்டுபிடித்தார். அவர் எதையும் செய்துப் பார்க்கும் முறையைப் பின்பற்றியதால் செயற்பாட்டு விஞ்ஞானத்தின் தந்தை எனப்படுகின்றார்.

### இங்கிலாந்தைச் சேர்ந்த ஐசக் நியுட்டன்

புவியீர்ப்புச் சக்தியைக் கண்டுபிடித்தார்.

### வைத்தியத்துறையின் முன்னேற்றம்

மறுமலர்ச்சிக் காலத்தில் வைத்தியத்துறையில் பல புதிய கண்டுபிடிப்புக்கள் ஏற்பட்டமையால் அத்துறையிலும் பெரும் முன்னேற்றம் ஏற்பட்டது.

### ஆங்கிலேயரான வில்லியம் ஹாவே

மனித உடலின் குருதிச் சுற்றோட்டம் தொடர்பான முக்கிய தகவல்களை முன்வைத்தார்.

### சுவிஸ் இனத்தவரான பெரசல்சஸ்

நோய்கள் ஏற்படுவதற்கான காரணங்களையும் அதற்கான சிகிச்சைகளையும் பரிசோதனை மூலம் கண்டறிந்தார். நவீன மருந்து தொடர்பாகவும் நோய்களைக் குணமாக்குதல் தொடர்பாகவும் பாரிய தாக்கத்தை ஏற்படுத்தினார்.

### சுவிஸ் இனத்தவரான மைக்கல் சர்வேட்ஸ்

மனித உடலின் குருதி, இதயத்தின் வலது பக்கத்திலிருந்து புறப்பட்டு சுவாசப்பையில் சுத்திகரிக்கப்பட்டு மீண்டும் இதயத்தை அடைந்து உடல் முழுவதும் பரவிச் செல்கின்றது என்பதனைக் கண்டறிந்தார்.

### ஜேர்மனியரான ஜொஹேன்ஸ் கூடன் பேர்க்

அச்சியந்திரத்தைக் கண்டுபிடித்தார்.

## அரசியல் மறுமலர்ச்சி

நிலமானிய காலத்தில் ஒவ்வொரு பிரதேசங்களையும் ஆட்சிசெய்யும் அதிகாரம் பிரதேச ஆட்சியாளர்களிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. பிரதேச ஆட்சியாளராக பரம்பரையான நிலப் பிரபுக்கள் செயற்பட்டனர். அவர்கள் சுதந்திரமாக இயங்கியதால் அரசனைவிட அதிகாரம் உடையவர்களாக இருந்தனர். அக்கால மக்கள் பிரதேச ஆட்சியாளர் களின் கீழ் இருந்ததால் தமது பிரதேசம் என்ற நிலையில் அவர்கள் வாழ்ந்தார்களேயன்றி ஒரு நாட்டின் மக்கள் என்ற ரீதியில் அவர்கள் செயற்படவில்லை.

மறுமலர்ச்சிக் காலத்தில் தேசிய அரசுகள் தோன்றியமையானது அரசியல் துறையில் ஏற்பட்ட முக்கிய மாற்றமாகும். பல பிரதேசங்களை ஒன்றிணைத்து ஒரு அரசனின் கீழ் ஆட்சிசெய்யும் முறை இதன் மூலம் உருவாகியது. இதனால் அரசியலில் அரசன் முக்கியத்துவம் பெற்றதுடன் அனைத்து அதிகாரங்களும் அரசனை மையமாகக் கொண்டு விளங்கின.

12 ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட வர்த்தக முன்னேற்றத்துடன் மத்திய வகுப்பு ஒன்றும் தோன்றியது. மத்திய வகுப்பினர் என்போர் வர்த்தகத்தின் மூலம் பணத்தைச் சேகரித்த செல்வந்தர்களாவர். இந்த வகுப்பினரில் வர்த்தகர்கள், வங்கியாளர்கள், கப்பல் உரிமையாளர்கள், போக்குவரத்து வண்டிகளின் உரிமையாளர்கள் போன்றோர் அடங்குவர். மத்திய வகுப்பினர் சமூகத்தில் வலிமை பெற்றதுடன் அதுவரை நில உரிமையாளர்களாக இருந்த பிரபுக்களின் அதிகாரங்களும் உரிமைகளும் நலிவுறத் தொடங்கின. தேசிய அரசுகளின் அரசர்கள் தமது நிர்வாக செயற்பாடுகளில் புதிதாகத் தோன்றிய மத்திய வகுப்பினரின் உதவியைப் பெற்றுக் கொண்டனர். அவர்களின் வர்த்தக நடவடிக்கைகளுக்கு அரச அனுசரணை கிடைத்தது.

### பொருளாதார மறுமலர்ச்சி

மறுமலர்ச்சிக் காலத்தில் ஐரோப்பாவில் பொருளாதாரத் துறையில் பாரிய மாற்றங்கள் ஏற்படலாயின. மத்திய காலத்தில் நிலமானிய முறையை மையமாகக் கொண்ட சுயதேவைப் பூர்த்தியான பொருளாதார முறை நலிவடைந்து

வர்த்தக முன்னேற்றம் ஏற்பட்டது. ஐரோப்பாவில் தேசிய அரசுகள் தோன்றிய பின்னர் வர்த்தகத்தை விரிவடையச்செய்யும் பொருட்டு அரச அனுசரணை நேரடியாகக் கிடைத்தது. அதன் பொருட்டு ஐரோப்பிய நாடுகளில் தேசிய வர்த்தகக் கொள்கை, தேசிய வரிக் கொள்கை என்பன செயற்படத் தொடங்கின. அவ்வாறே நாடுகாண் பயணங்களின் விளைவாகப் புதிய கடல் வழிகள் கண்டுபிடிக்கப்பட்டமையானது ஐரோப்பிய இனத்தவர் கீழைத்தேசங்களுக்கும், அமெரிக்காவுக்கும் செல்லக்கூடியதாக இருந்தது. அதனால் அப்பிரதேசங்களில் இருந்து வர்த்தகப் பொருள்களான வாசனைப் பொருள்கள், தங்கம், வெள்ளி, முத்து, இரத்தினக்கற்கள், யானைத்தந்தம் போன்றவற்றை ஐரோப்பாவிற்குக் கொண்டு வரக்கூடியதாக இருந்தது. இதன் மூலம் வர்த்தக வளர்ச்சி ஏற்பட்டது.

வர்த்தக வளர்ச்சியின் காரணமாகப் பணப்புழக்கம் அதிகரித்தது. நாணயத்தாள்கள், நாணயக்குற்றிகள், என்பன பணப்புழக்கத்திற்கு வந்தன. பணத்தைத் தூர இடங்களுக்குக் கொண்டு செல்லுதல் சிரமமாகவும் பாதுகாப்பு அற்றதாகவும் இருந்ததால், காசோலை முறையும் வங்கி முறையும் ஆரம்பமாகின. வர்த்தகர்கள் தமது வர்த்தகத்திற்குத் தேவையான பணத்தை வங்கி மூலம் கடனாகப் பெறக்கூடியதாக இருந்தது.

### புதிய வர்த்தகப் பாதைகள் கண்டுபிடிக்கப் படல்

கி.பி. 1453 ஆம் ஆண்டு கொன்ஸ்தாந்திநோபிள் நகர் துருக்கியரால் கைப்பற்றப்பட்டதுடன் மேற்கு, கிழக்கு நாடுகளுக்கிடையிலான வர்த்தகம் தடைப்பட்டது. கடல், தரை வழிகள் அனைத்தும் பெரும்பாலும் துருக்கிய பேரரசின் கீழ் வந்தன. இதனால் ஆசியாவிலுள்ள பொருள்களைப் பெற்றுக்கொள்ளும் பொருட்டு கிழக்கு நாடுகளுக்குச் செல்லக்கூடிய கடல் வழியைக் கண்டுபிடிக்க ஐரோப்பியர் முனைந்தனர். புதிய கடல் வழியைக் கண்டுபிடிக்கக்கூடிய சாதகமான சூழலும் அக்காலத்தில் ஐரோப்பாவில் நிலவியது.

- பாதுகாப்பாக கடற்பிரயாணம் செய்யக்கூடிய திசையறி கருவி, வட நட்சத்திரமானி என்பன கண்டுபிடிக்கப்பட்டமை.
- மறுமலர்ச்சிக் காலத்தில் புவி கோள வடிவானது என்பது அறியப்பட்டமை.
- தொலமியின் உலகப்படத்தின் மூலம் உலகம் பற்றிய தெளிவான விளக்கம் கிடைத்தமை.
- தேசிய அரசுகள் நாடுகாண் பயணங்களுக்கு அனுசரணை வழங்கியமை.

நாடுகாண் பயணங்களின் ஆரம்பத்தில் அதில் ஆர்வம் காட்டிய நாடுகளாகக் கடலை அண்டிய போர்த்துக்கலும் ஸ்பானியாவும் விளங்கின. போர்த்துக்கல் இளவரசனான ஹென்றி (கடலோடி ஹென்றி) நாடுகாண் பயணத்திற்குப் பூரண ஒத்துழைப்பை நல்கினான்.

போர்த்துக்கலிலிருந்து கீழைத் தேசங்களை அடைய கடல் வழியைக் கண்டுபிடிக்க முற்பட்ட பர்த்தலோமேயு டயஸ் ஆபிரிக்காவின் தென் முனையை அடைந்ததும், அங்கு புயலால் சிக்குண்டு அப்பிரதேசத்திற்கு புயல்முனை என்று பெயரிட்டு மீண்டும் தன் தாய் நாட்டுக்குத் திரும்பினான். பின்னர் போர்த்துக்கல் மன்னனால் நன்னம்பிக்கை முனை என அதற்குப் பெயரிடப் பட்டது.

பர்த்தலோமேயு டயஸ் சென்ற வழியாகத் தன் பயணத்தை மேற்கொண்ட வாஸ்கொடகாமா இந்தியாவின் கள்ளிக்கோட்டையை அடைந்தான். இது ஐரோப்பியர்களால் ஆசியாவுக்கு வருவதற்கு முதன்முதலாகக் கண்டுபிடிக்கப்பட்ட கடற்ப் பாதையாகும்.

ஸ்பானிய மன்னனான பேர்டினன்ட், அவனது மனைவி இசபெலா ஆகியோரின் அனுசரணையுடன் கிறிஸ்டோபர் கொலம்பஸ் மேற்கிந்திய தீவுகளைக் கண்டுபிடித்தான். அமெரிக்கோ வெஸ்புஷி அமெரிக்காவை (புதிய உலகம்) கண்டுப்பிடித்தான்.

பெர்டினன்ட் மகலன் - பிலிப்பைன்சையும் கபொட் சகோதரர்கள் - கனடாவையும் கண்டு பிடித்தனர்.

### மறுமலர்ச்சிக் காலத்தில் உலகமயமாதல்

மறுமலர்ச்சி முதன் முதலில் இத்தாலியில் புளோரன்ஸ் நகரில் ஆரம்பமானது. பின்னர் அது இத்தாலியின் ஏனைய பிரதேசங்களுக்குப் பரவிய பின்னர் ஐரோப்பா முழுவதும் பரவியது. மறுமலர்ச்சிக் காலத்தில் மேற்கொள்ளப்பட்ட நாடுகாண் பயணங்களினால் ஐரோப்பியர்

புதிய நாடுகளைக் கண்டுபிடித்ததுடன் அங்கு செல்லவும் தொடங்கினர். இதன் விளைவாக ஆசியா, ஆபிரிக்கா, அமெரிக்கா போன்ற கண்டங்களில் பல நாடுகள் பல்வேறு ஐரோப்பிய இனத்தவர்களின் ஆதிக்கம் பரவியது. 16 ஆம் நூற்றாண்டில் இருந்து நான்கரை நூற்றாண்டுகள் வரை இக்கண்டங்களிலுள்ள சில நாடுகள் ஐரோப்பிய இனத்தவரின் குடியேற்ற நாடுகளாக விளங்கின. இதனால் அரசியல் மட்டுமன்றி வர்த்தக, பொருளாதாரப், பண்பாட்டு ரீதியாகவும் ஐரோப்பாவுக்கும், உலகின் ஏனைய பகுதிகளுக்குமிடையே தொடர்புகள் ஏற்பட்டன. இந்தத் தொடர்புகள் காரணமாக அச்சுத் தொழில் உலகெங்கும் பரவியது. இதன் மூலம் ஐரோப்பிய சிந்தனைகள், இலக்கியம் என்பன ஏனைய நாடுகளையும் சென்றடைந்தன. குடியேற்ற நாடுகளில் செல்வந்தர்களின் பிள்ளைகள் கல்வியின் பொருட்டு ஐரோப்பாவிற்கு சென்றனர். ஐரோப்பியர் தமது குடியேற்ற நாடுகளில் தாம் பின்பற்றிய சமயங்களைப் பரப்பினர். அவ்வாறே ஆலயங்கள், கட்டடங்கள் என்பன அமைத்ததன் மூலம் ஐரோப்பாவில் அக்காலத்தில் சிறப்பிடம் பெற்ற கட்டடமுறை, கலைகள் என்பன ஏனைய நாடுகளையும் சென்றடைந்தன. ஐரோப்பாவுக்கும் உலகில் ஏனைய நாடுகளுக்கும் இடையிலான தொடர்பு காரணமாக ஐரோப்பிய விஞ்ஞானத் தொழினுட்ப அறிவு உலகம் முழுவதும் பரவியது. இதனால் மறுமலர்ச்சி உலகமயமாகியது.

## 9.2 மறுமலர்ச்சி இலங்கைமீது செலுத்திய தாக்கம்

போர்த்துக்கேயர், ஒல்லாந்தர், ஆங்கிலேயர் ஆகியோர் இலங்கைக்கு வந்தமையால் ஐரோப்பாவில் ஏற்பட்ட மறுமலர்ச்சி இலங்கையிலும் தாக்கத்தை ஏற்படுத்தியது. ஐரோப்பிய இனத்தவர் இலங்கையின் கரையோரப் பிரதேசங்களில் ஆதிக்கம் செலுத்திய காலத்தில் கண்டி இராச்சியம் சுயாதீன அரசாகச் செயற்பட்டமையால் இந்நாட்டின் சமூகத்தில் பாரிய மாற்றத்தை ஏற்படுத்த அவர்களால் முடியவில்லை. எனினும் 1815ஆம் ஆண்டு கண்டி இராச்சியம் ஆங்கிலேயரின் கீழ் வந்தது. 1948 ஆம் ஆண்டு வரை அது அவர்களின் நிர்வாகத்தின் கீழ் இருந்ததால் அக்காலத்தில் இந்நாட்டின் அரசியலில் மட்டுமன்றி, பொருளாதார, சமூக, பண்பாட்டிலும் பல மாற்றங்கள் ஏற்பட்டன.

### அரசியல் மாற்றங்கள்

19 ஆம் நூற்றாண்டாகும்போது மறுமலர்ச்சி யானது மதச் சீர்திருத்தம், அச்சுக்கலையின் முன்னேற்றம், முதலாளித்துவ எழுச்சி, கைத்தொழில் புரட்சி என்பன காரணமாக ஐரோப்பாவில் பாரிய சிந்தனை மாற்றங்களை ஏற்படுத்தியிருந்தது. இதன்படி பிரித்தானியரது ஆட்சிக் காலத்தில் இந்நாட்டில் ஏற்பட்ட மாற்றங்கள் புதிய சிந்தனையின் தாக்கத்தால் நிகழ்ந்தவை எனக் கொள்ளலாம். கண்டி இராச்சியம் பிரித்தானியரின் ஆட்சியின் கீழ் வரும்வரை மரபு ரீதியான முடியாட்சி முறை இங்கு நிலவிய போதிலும் இலங்கை குடியேற்ற நாடாகியதும் அந்த முறை முடிவுக்கு வந்தது. ஆங்கிலேயரால் அறிமுகம் செய்து வைக்கப்பட்ட அரசியல் சீர்திருத்தங்கள் காரணமாகப் பிற்காலத்தில் பாராளுமன்ற ஆட்சி முறை இந்நாட்டில் ஏற்பட்டது. அதுவரை நிலவிய பிரதேச ஆட்சிமுறையும் பிரித்தானியரது ஆட்சி காலத்தில் மாற்றமடைந்தது. கண்டி இராச்சியக் காலத்தில் இருந்த அதிகாரம், திஸாவை, மொஹொட்டால, கோறளை போன்ற மரபு ரீதியான அலுவலர்கள் வகுப்புகளுக்குப் பதிலாக புதிய ஆட்சி முறைக்குப் பொருத்தமான புதிய அலுவலர்கள் நியமனம் பெற்றதோடு நிருவாகப்பிரிவும் தோன்றியது. அவ்வாறே நாட்டில் நிலவிய பழைய சட்டதிட்டங்கள் மறைந்தன. ஒல்லாந்தரது காலத்தில் உரோம டச்சுச் சட்டம் இந்நாட்டிற்கு அறிமுகம் செய்யப்பட்டது. பிரித்தானியரது ஆட்சிக் காலத்தில் அக்கால ஐரோப்பிய சட்ட அடிப்படைகளுக்கு ஏற்ப சட்டத் தொகுதியும் நீதியை நிலைநாட்டும் நீதிமன்றத் தொகுதியும் இங்கு நிறுவப்பட்டன.

### பொருளாதார மாற்றங்கள்

மத்திய காலத்தில் ஐரோப்பாவில் வர்த்தக நடவடிக்கைகளின்போது முன்னிலையில் காணப்பட்ட வெனிஸ், ஜெனோவா, கொன்ஸ்தாந்திநோபிள் போன்ற மத்திய தரைக்கடலை அண்மித்த நகரங்களுக்குப் பதிலாக மறுமலர்ச்சிக் காலத்தின் பின்னர் போர்த்துக்கல், ஸ்பானியா, பிரான்ஸ், ஒல்லாந்து, இங்கிலாந்து போன்ற அத்திலாந்திக்குச் சமுத்திரத்தை அண்மித்த நாடுகள் முக்கியத்துவம் பெற்றன.

ஐரோப்பியர் இலங்கைக்கு வந்ததோடு இலங்கைக்கும் ஐரோப்பாவுக்கும் இடையில் நேரடி வர்த்தகத் தொடர்பு ஆரம்பமாகியது. வர்த்தக நோக்கத்துடன் ஒல்லாந்தர் இந்நாட்டில் கறுவாவைப் பயிரிட்டதுடன் பிரித்தானியர் கோப்பி, கொக்கோ, சிங்கோனா, தேயிலை, இறப்பர் போன்ற வர்த்தகப் பயிர்களைப் பயிரிட்டனர். ஐரோப்பியரின் கீழ் இலங்கையர் வர்த்தகப் பொருளாதாரத்திற்குப் பழக்கப் பட்டதால் அதுவரை இருந்த கிராம தன்னிறைவுப் பொருளாதார முறை வீழ்ச்சியுற்றது. ஆங்கிலேயரால் நடைமுறைப்படுத்தப்பட்ட பொருளாதார சீர்திருத்தத்தினால் இலங்கையில் ஏற்றுமதி, இறக்குமதிப் பொருளாதாரம் தோன்றியது. இதனால் உணவுப் பொருள்களைக் கூட இலங்கை இறக்குமதி செய்தது. இது தவிர பணப்புழக்கம் அதிகரித்தல், புகையிரதப் பாதைகள், பெருந்தெருக்கள் என்பன அமைக்கப் பட்டமை கொழும்பு,காலி, திருகோண மலை போன்ற வர்த்தக நகர்கள் தோன்றியமை, மத்திய வகுப்பினர் தோன்றியமை என்பன பொருளாதாரத் துறையில் இந்நாட்டில் ஏற்பட்ட மாற்றங்களுக்கு எடுத்துக்காட்டுகளாகும்.

### சமூகப் பண்பாட்டு மாற்றங்கள்

அச்சியந்திரம் இலங்கையில் அறிமுகம் செய்யப் பட்டமையானது மறுமலர்ச்சியின் தாக்கத்தினை இந்நாடு பெற்றதன் மற்றுமொரு சந்தர்ப்பமாகும். அச்சியந்திரம் ஒல்லாந்தரால் இங்கு அறிமுகம் செய்து வைக்கப்பட்ட போதிலும் அது ஆங்கிலேயர் காலத்திலேயே பிரபல்யம் அடைந்தது. அச்சுத் துறையின் முன்னேற்றத்துடன் நூல்கள், சஞ்சிகைகள், பத்திரிகைகள் என்பன அச்சிடப்பட்டதால் சமூகம் அறிவுத்துறையில் உயர் நிலை அடைந்தது. இதன் மூலம் ஐரோப்பிய சிந்தனையும் இலக்கியமும் இந்நாட்டிற்குக் கிடைத்தது. பிரித்தானியரது ஆட்சிக் காலத்தில் இலங்கையர் சிலர் ஐரோப்பிய நாடுகளுக்குச் சென்று கல்வி கற்று இங்கு வந்தமை மேற்கத்தைய சிந்தனைகள் இந்நாட்டில் நுழைய வழியாக அமைந்தது.

ஐரோப்பாவில் கிறிஸ்தவ சமயம் பிளவுற்ற காலப்பகுதியிலே ஐரோப்பியர் இலங்கைக்கு வந்தனர். 1517ஆம் ஆண்டு ஐரோப்பாவில் ஏற்பட்ட சமயப் புரட்சியே இந்தப் பிளவுக்குக் காரணமாகியது. போர்த்துக்கேயர் இலங்கையின் கரையோரப் பகுதியில் கத்தோலிக்க சமயத்தைப் பரப்பியதுடன் ஒல்லாந்தர் தாம் பின்பற்றிய புரட்டஸ்தாந்து சமயத்தை இங்கு பரப்பினர். இதனால் ஐரோப்பாவில் நிலவிய சமயப் பிரிவுகள் இங்கும் தோன்றின. ஒல்லாந்தரது காலத்தைப் போன்றே ஆங்கிலேயர் காலத்திலும் இங்கு நடைமுறைப்படுத்தப்பட்ட கல்வி செயற்பாட்டினால் மேற்கு நாடுகளின் கல்வி முறை இங்கு பரவியது. அவ்வாறே ஐரோப்பியர் இலங்கையில் நிறுவிய தேவாலயங்கள் மற்றும் கட்டடங்களின் மூலம் ஐரோப்பிய கட்டடக் கலை இந்நாட்டில் புகுந்தது.

**முக்கிய விடயங்கள்**

1. ஐரோப்பாவில் கி.பி. 14 ஆம் நூற்றாண்டிற்கும், 16 ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலப் பகுதியில் கலை, விஞ்ஞானத் துறைகளில் ஏற்பட்ட பாரிய மாற்றங்கள் மறுமலர்ச்சி எனப்படும்.
2. ஐரோப்பாவில் மறுமலர்ச்சி ஏற்படுவதற்குப் பல காரணங்கள் இருந்தன.
3. மறுமலர்ச்சி முதன்முதலில் இத்தாலியில் புளோரன்ஸ் நகரில் ஆரம்பமானது.
4. மறுமலர்ச்சிக் காலத்தில் கலை,விஞ்ஞானத் துறைகளில் ஏற்பட்ட மாற்றங்களின் காரண மாக மனிதனது சிந்தனையிலும் மாற்றங்கள் ஏற்பட்டன.
5. மறுமலர்ச்சிக் காலத்தில் புதிய வர்த்தகப் பாதைகள் கண்டுபிடிக்கப்பட்டதால் ஐரோப்பாவுக்கும் உலகின் ஏனைய பகுதி களுக்கும் இடையே புதிய தொடர்புகள் கட்டியெழுப்பப்பட்டன.

**செயற்பாடு**

ஐரோப்பாவில் ஏற்பட்ட மறுமலர்ச்சி இலங்கையின் அரசியல், பொருளாதாரம், பண்பாடு ஆகிய துறைகளில் ஏற்படுத்திய தாக்கத்தினை விளக்குக.

# 10 இலங்கையும் மேற்குலகும்

**அறிமுகம்**

கி.பி. இரண்டாம் புத்தாயிரம் ஆண்டின் முற் பகுதி முதல் தெற்கு ஐரோப்பாவை மையமாகக் கொண்ட புதிய வர்த்தக எழுச்சியின் விளைவாக ஐரோப்பியர், குறிப்பாகக் கிழக்கு நாடுகள் மீது தமது கவனத்தைச் செலுத்தினர். அந்த நாடுகளில் காணப்பட்ட பல்வேறு செல்வங்களை வர்த்தகத் தின் பொருட்டுப் பெற்றுக்கொள்தலே அதற்குக் காரணமாகியது.

இந்து சமுத்திர வர்த்தகத்தில் நீண்ட வரலாற்றையு டைய இலங்கை ஐரோப்பிய இனத்தவர்களுடன் வர்த்தகத்தில் ஈடுபட்டமையில் பல சிறப்புக் களைக் காணக்கூடியதாக உள்ளது. வர்த்தக நோக்கிற்கு மேலாக அரசியல் நோக்கம் இருந்த மையால் இக்காலத்தில் இலங்கைக்கும் மேற்கு நாடுகளுக்கும் இடையில் நிலவிய தொடர்பில் பல எதிர் விளைவுகளைக் காணக்கூடியதாக உள்ளது. வெளிநாட்டவரின் ஆதிக்கமும் அதற்கு எதிராகச் சுதேசிகளின் செயற்பாடுகளும் இந்த யுகத்தில் காணப்படுகின்றன. இந்தப் பாடத்தில் இது பற்றி நீங்கள் கற்கக்கூடியதாக இருக்கும்.

## 10.1 போர்த்துக்கேயர் ஆசியாவுக்கு வருதல்

நீண்ட காலத்திற்கு முன்பிருந்தே ஆசியாவுக்கும் ஐரோப்பாவுக்கும் இடையே வர்த்தகத் தொடர்பிற் கான மூன்று முக்கிய பாதைகள் இருந்தன :

1. கொன்ஸ்தாந்திநோபிள் நகரிலிருந்து பாரசீகம், மத்திய ஆசியா வழியாக சீனா வரையிலான பட்டுப்பாதை.

2. கொன்ஸ்தாந்திநோபிளிலிருந்து மத்திய தரைக் கடல் வழியாக எகிப்து, செங்கடல் ஊடாக இந்து சமுத்திரத்திற்கு வந்த பாதை.

3. கொன்ஸ்தாந்திநோபிளிலிருந்து பக்தாத், பாரசீகக்குடா வழியாக இந்தியாவின் மேற்குக் கரைக்கு வந்த பாதை.

இந்த பாதைகளினூடாக வர்த்தகத்தொடர்பு இடம் பெற்றபோது, தரைமார்க்கமாகப் பொருள்களை எடுத்துச்செல்லும் பொருட்டு மிருகங்கள் பயன் படுத்தப்பட்டன; கடல் வழியாகப் பொருள் களை எடுத்துச் செல்லும்போது கப்பல்கள் பயன் படுத்தப்பட்டன. முஸ்லிம்கள் ஆசியாவில் வாச னைப் பொருள்களைச் சேகரித்து ஐரோப்பாவுக் குக் கொண்டுசென்று விற்றதன் மூலம் அதிக இலாபத்தைப் பெற்றனர். மேற்கூறப்பட்ட பாதைகள் மூன்றும் கொன்ஸ்தாந்திநோபிளுடன் தொடர்புடையதாக இருந்தன. ஐரோப்பிய கிறிஸ் தவர்களின் கையிலிருந்த இந்நகர் இஸ்லாம் மதத்தைச் சேர்ந்த துருக்கியரால் 1453 ஆம் ஆண்டு கைப்பற்றப்பட்டமையானது ஆசிய, ஐரோப்பிய மரபு ரீதியான வர்த்தகத்தில் பாரிய தாக்கத்தை ஏற்படுத்தியது.

கொன்ஸ்தாந்திநோபிள் நகர் (தற்கால இஸ்தான்புல்) இஸ்லாமியரின் கையில் வந்தமை கிறிஸ்தவர்களுக்குப் பெரும் இழப்பாகியது. இந்நகரைக் கைப்பற்றிய முஸ்லிம்கள் ஆசியாவின் வாசனைப் பொருள்களின் விலையை உயர்த்தியதோடு, பொருள்கள் தட்டுப் பாட்டை ஏற்படுத்தியமை, உரிய வேளையில் பொருள்களை வழங்காமை என்பனவற்றால் ஐரோப்பியருக்கு இன்னல்கள் விளைவித்தனர். ஐரோப்பியர் நீண்ட காலமாக ஆசிய வாசனைப் பொருள்களுக்குப் பழக்கப்பட்டிருந்ததால் கறுவா, மிளகு உட்பட வாசனைப் பொருள்களுக்கு ஐரோப்பிய சந்தையில் நல்ல கேள்வி இருந்தது. வழமையான வர்த்தகப் பாதை இஸ்லாமியரின் வசம் வந்ததால் ஆசியாவுக்கு வருவதற்குப் புதிய வழியைக் கண்டுபிடிக்க வேண்டிய தேவை ஏற்பட்டது. புதிய வழியைக் கண்டுபிடிப்பதில் போர்த்துகேயர் முதலிடம் வகித்தனர்.

போர்த்துக்கேயர், தமது தாய் நாடான போர்த்துக்கலிலிருந்து இலங்கைக்கு வந்தனர். போர்த்துக்கல் தென்மேற்கு ஐரோப்பாவில் ஐபீரியன் தீபகற்பத்தில் அமைந்துள்ள நாடாகும். அது அத்திலாந்திக் சமுத்திரத்தை




*உரு 10.1 கொழும்பிலுள்ள பழைய கட்டடமொன்றில் செதுக்கப்பட்டுள்ள ஒல்லாந்தரின் இலச்சினை*

நோக்கி அமைந்துள்ளது. இதனால் கடல் வழியாகவே அவர்கள் வெளிநாடுகளுடன் தொடர்பு கொண்டனர். எனவே அவர்கள் கடல் செயற்பாடுகளில் நிபுணத்துவம் பெற்றிருந்தனர். 15 ஆம் நூற்றாண்டில் போர்த்துக்கலின் அரசனாக இருந்த நான்காம் ஹென்றி அல்லது கடலோடி ஹென்றி என்பவன் நாடுகாண் பயணத்தில் அதிக ஆர்வம் செலுத்தினான். போர்த்துக்கலில் கப்பல் கட்டும் தொழில் தொடர்பாகப் பாடசாலை ஒன்றை நடாத்தியதுடன் அங்கு தேசப்படம், நட்சத்திரம் தொடர்பான பாடங்கள் கற்பிக்கப்பட்டன. இதனால் ஆசியாவுக்குச் செல்வதற்குப் புதிய கடல் வழியைக் கண்டுபிடிப்பதில் ஏனைய ஐரோப்பிய நாடுகளைவிடப் போர்த்துக்கல் முன்னணியில் இருந்தது. போர்த்துக்கேயனான வஸ்கொடகாமா ஆபிரிக்காவைச் சுற்றி 1498 ஆம் ஆண்டு இந்தியாவின் கள்ளிக்கோட்டையை அடைந்ததும் ஆசியாவில் ஐரோப்பியரின் ஆதிக்கம் செயற்படத்தொடங்கியது. போர்த்துக்கேயர் ஆசியாவுக்கு வருகைதந்த பின்னர் ஒல்லாந்தர், ஆங்கிலேயர், பிரான்சியர் போன்ற ஏனைய ஐரோப்பியர்களும் ஆசியாவுக்கு வந்து பல்வேறு இடங்களில் தமது ஆதிக்கத்தைப் பரப்பினர்.

இவ்வாறு 16 ஆம் நூற்றாண்டின் ஆரம்பம் முதற்கொண்டு 450 ஆண்டுகள் வரை ஆசியாவில் ஐரோப்பியரின் ஆதிக்கம் நிலைபெற்றது.

ஐரோப்பியர் பல நோக்கங்களுடனேயே ஆசியாவுக்கு வந்தனர். பொருளாதார ரீதியாக இலாபம் பெறல், கிறிஸ்தவ சமயத்தைப் பரப்புதல், உலக ரீதியாகப் புகழ் பெறல் என்பன அவற்றில் முக்கியமானவையாகும். 16 ஆம் நூற்றாண்டு முதல் 20 ஆம் நூற்றாண்டு வரையிலான காலப்பகுதியில் ஐரோப்பாவில் ஏற்பட்ட அரசியல் பொருளாதார மாற்றங்களுக்கு அமைய ஐரோப்பியரின் ஆசிய வருகையின் நோக்கத்திலும் மாற்றங்கள் ஏற்படலாயின.

போர்த்துக்கேயர் ஆசியாவுக்கு வந்ததன் அடிப்படை நோக்கம் பொருளாதார ரீதியாக இலாபம் பெறுதல், கத்தோலிக்க சமயத்தைப் பரப்புதல் என்பனவாகும். போர்த்துக்கேயர் ஆசியாவுக்கு வரும்போது ஆசியாவில் வர்த்தக ஏகபோக உரிமை முஸ்லிம்களின் கையில் இருந்ததால் அவர்களைத் தோற்கடித்து வர்த்தக ஏகபோக உரிமையைத் தமதாக்கிக் கொள்வது போர்த்துக்கேயரின் குறிக்கோளாக இருந்தது. இதன் மூலம் நல்ல இலாபத்தைப் பெற முடியும் என்பதை அவர்கள் அறிந்திருந்தனர். நாங்கள் கிறிஸ்தவர்களையும் வாசனைப் பொருள்களையும் தேடி இங்கு வந்துள்ளோம் எனக் கள்ளிக்கோட்டையை வந்தடைந்ததும் வாஸ்கொடகாமா கூறியதிலிருந்து இது தெளிவாகிறது. வர்த்தகக் களஞ்சியம் ஒன்றை அமைக்கவும் ஐந்து குருமார் சமயம் போதிக்கவும் கள்ளிக்கோட்டை மன்னனிடமிருந்து அனுமதி பெறும்படி வாஸ்கொடகாமாவிற்குப் பின் இந்தியாவுக்கு வந்த இரண்டாவது கடற்படைக் குழுவினருக்குப் போர்த்துக்கலிலிருந்து அறிவுரை வழங்கப்பட்டது. தமது அதிகாரம் பரவும் பிரதேசங்களில் தமது சமயத்தைப் பரப்புதல் ஆரம்பத்தில் இருந்தே போர்த்துக்கேயரின் நோக்கமாக இருந்தமை இதிலிருந்து தெளிவாகிறது.

## 10.2 போர்த்துக்கேயர் இலங்கைக்கு வரும் போது இலங்கையின் அரசியல் நிலைமை

இலங்கை இந்து சமுத்திரத்தின் கடல் வழியில் முக்கிய மத்திய நிலையமாக அமைந்துள்ளதால் ஐரோப்பியரின் ஆசிய செயற்பாடுகளின் வர்த்தக, யுத்த நடவடிக்கைகளில் இலங்கை முக்கிய இடம் பெற்றிருந்தது. ஆரம்பத்தில் போர்த்துக்கேயரால் செய்லோன் என அறிமுகமான இலங்கையில் உயர் ரகக் கறுவா உற்பத்திசெய்யப்படுவதாக அவர்கள் அறிந்திருந்தனர். இதனால் இந்தியாவுக்கு வந்து சிறிது காலத்தில் போர்த்துக்கேயர் இலங்கை மீது கவனம் செலுத்தினர். 1505 ஆம் ஆண்டு மார்ச் மாதம் போர்த்துக்கேய மன்னனால் கிழக்கு நாடுகளின் இராசப்பிரதிநிதியாகப் பிரான்சிஸ்கோ டி அல்மேடா என்பவன் நியமிக்கப்பட்டான். போர்த்துக்கேய மன்னனால் இராசப் பிரதிநிதிக்கு வழங்கப்பட்ட அறிவுரைகளில் இலங்கையைக் கண்டுபிடிக்க வேண்டும் என்பதும் ஒன்றாகும். பிரான்ஸிஸ் டி அல்மேடாவின் மகனான லோரேன்சோ டி அல்மேடா பயணித்த கப்பல் புயல் காற்றினால் தாக்குண்டு எதிர்பாராதவிதமாக இலங்கையை அடைந்தது. இதன் மூலம் போர்த்துக்கேய மன்னனின் குறிக்கோள் நிறைவேறியது.

1505 ஆம் ஆண்டு லோரேன்சோ டி அல்மேடா உள்ளிட்ட போர்த்துக்கேயக் குழுவினர் இலங்கைக்கு வரும்போது இலங்கையில் அரசியல் ஒற்றுமை காணப்படாமையானது வெளிநாட்டினர் இந்நாட்டில் தம் ஆதிக்கத்தை நிலைநாட்டிட வாய்ப்பாக அமைந்தது. 6 ஆம் பராக்கிரமபாகு மன்னன் கோட்டை இராச்சியத்தைத் தோற்றுவித்து, நாட்டை ஒன்றிணைத்து அரசியல் உறுதிப்பாட்டை ஏற்படுத்தி இருந்தபோதிலும், அவனது மரணத்தின் பின்னர் அந்த நிலை மாற்றமடைந்திருந்தது. இதனால் போர்த்துக்கேயர் இலங்கைக்கு வந்தபோது கோட்டை இராச்சியம் தவிர்ந்த கண்டி, யாழ்ப்பாணம் என்ற மேலும் இரண்டு இராச்சியங்கள் இருந்தன. இலங்கைக்கு வந்த போர்த்துக்கேயர் முதலில் கோட்டை இராச்சியத்துடன் தொடர்பை ஏற்படுத்தினர். கோட்டை அரசனைச் சந்திக்கப் போர்த்துக்கேயக் குழுவினர் சுற்றி வளைத்துக் கோட்டைக்கு அழைத்துச் செல்லப்பட்டதாகக் கூறப்படுகிறது.

கொழும்புக்கும் கோட்டைப் பிரதேசத்திற்கும் இடையே நீண்ட தூரம் இருப்பதாகக் காட்டுவதற்காகவே இந்த உபாயம் மேற்கொள்ளப்பட்டதால் "பறங்கியர் கோட்டைக்குப் போனது போல்" என்ற பிரயோகம் ஏற்படலாயிற்று.

போர்த்துக்கேயர் இலங்கைக்கு வந்தபோது பரந்த இராச்சியமாக இருந்த கோட்டை, 1521 ஆம் ஆண்டு நிகழ்ந்த விஜயபாகு கொலையினால் மூன்று பிரிவுகளாகப் பிளவுண்டமை, போர்த்துக்கேயர் தமது ஆதிக்கத்தை இந்நாட்டில் நிலைநாட்ட மேலும் இலகுவாக அமைந்தது. கோட்டை ஆட்சியாளனாக இருந்த 8ஆம் வீரபராக்கிரமபாகு மன்னனின் பின்னர் அவனது மகனான 6 ஆம் விஜயபாகு அரசனானான். விஜயபாகுவின் முதலாவது திருமணத்தின் மூலம் பிறந்த புவனேகபாகு, மாயாதுன்னை, றைகம்பண்டார என்ற மூன்று புதல்வர்களுக்கும் எதிர்காலத்தில் அரசுரிமையை வழங்காது, தேவராஜ என்ற வேறொரு இளவரசனுக்கு அந்த உரிமையை வழங்கும் முயற்சியின் காரணமாக மோதல் ஏற்பட்டது. தமக்கு அரசுரிமை கிடைக்காது போவதை அறிந்த புவனேகபாகு, மாயாதுன்னை, றைகம் பண்டார ஆகிய மூவரும், அக்காலத்தில் கண்டி இராச்சிய

மன்னனாக இருந்த ஜயவீர பண்டாரவின் உதவி பெற்றுக் கோட்டைக்கு வந்து அரசைப் பெற முயன்றபோது, சலமான் என்பவனால் விஜயபாகு கொலை செய்யப்பட்டான். 6 ஆம் விஜயபாகு மன்னனிடமிருந்து 1521 ஆம் ஆண்டு அதிகாரத்தைப் பெறும் பொருட்டு நிகழ்ந்த இந்தச் சம்பவம் (விஜயபாகு கொள்ளை) விஜயபாகு கொலை எனப்படும். இச்சம்பவத்தின் பின்னர் கோட்டை இராச்சியம் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு இளவரசர்கள் மூவருக்கிடையே பகிரப்பட்டன. இதற்கமைய கோட்டையின் ஆட்சியாளனாக 7 ஆம் புவனேகபாகுவும் சீதாவாக்கையின் ஆட்சி யாளனாக மாயாதுன்னையும் றைகம பகுதியின் ஆட்சியாளனாக றைகம் பண்டாரவும் விளங்கினர். இவ்வாறு கோட்டை இராச்சியம் மூன்று பிரிவு களாகப் பிளவுற்றமையானது அதிகாரத்தைக் கைப்பற்ற ஆவலுடன் இருந்த போர்த்துக்கேயருக்கு சிறந்த வாய்ப்பாக அமைந்தது.

## இலங்கையின் கரையோரப் பகுதியில் போர்த்துக்கேயரின் ஆதிக்கம்.

கோட்டை இராச்சியம் மூன்றாகப் பிளவுபட்டு சிறிது காலத்தில் ஏழாம் புவனேகபாகுவிற்கும் மாயாதுன்னைக்கும் இடையில் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. கோட்டை இராச்சியத்தின் எதிர்கால ஆட்சியுரிமை பற்றிய சிக்கலும், மாயாதுன்னை கோட்டை இராச்சியத்திற்குரிய சில பிரதேசங் களைக் கைப்பற்ற முயன்றமையும் இக்கருத்து வேறுபாடுகளுக்கான காரணங்களாகும். மன்னன் புவனேகபாகுவுக்கு சமுத்ராதேவி என்ற மகள் இருந்தபோதிலும் கோட்டை இராச்சியத்தின் எதிர்கால அரச உரிமையை வழங்க மகன் ஒருவன் இருக்கவில்லை. அக்காலத்தில் சிறந்த வீரனெனப் பிரபலம் அடைந்திருந்த விதியபண்டாரன் சமுத்ராதேவியைத் திருமணம் செய்திருந்ததோடு, அவர்களுக்குத் தர்மபாலன், விஜயபாலன் என்ற புதல்வர்கள் இருவர் இருந்தனர். இவர்களில் தர்மபாலனுக்குக் கோட்டை இராச்சியத்தை ஒப்படைக்கப் புவனேகபாகு விரும்பினான். கோட்டை இராச்சியம் தொடர்பான எதிர்பார்ப்புடன் இருந்த மாயாதுன்னை இதனை விரும்பவில்லை. விஜயபாகு கொலையில் முக்கிய பங்கினை வகித்த மாயாதுன்னை சிறந்த வீரனாக இருந்ததுடன், கண்டி இராச்சிய மன்னனான ஜயவீர பண்டாரவின் உதவியையும் பெறக்கூடியவனாக இருந்தான். மாயாதுன்னையால் கோட்டை இராச்சியத்திற்கு இன்னல்கள் ஏற்படலாம் எனப் பயந்த புவனேக பாகு தனது பாதுகாப்பின் பொருட்டுப் போர்த்துக்கேயரை அழைத்தான். கோட்டை இராச்சியத்துக்கும் சீதாவாக்கை இராச்சியத்துக்கும் இடையே நிலவிய கருத்து வேறுபாடு காரணமாக கோட்டை இராச்சியத்தின் பாதுகாவலராகத் தலைநகரினுள் நுழைந்த போர்த்துக்கேயர், அதன் சகல செயற்பாடுகளிலும் தலையிட்டுத் தமது அதிகாரத்தைப் பரப்ப முயன்றனர்.

போர்த்துக்கேயருக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே வர்த்தகப் போட்டி நிலவியதால் இலங்கையின் கரை யோரப் பிரதேசங்களில் போர்த்துக்கேயர் கோட்டை களை அமைப்பதை முஸ்லிம்கள் விரும்பவில்லை. இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திய போர்த்துக் கேயர், கோட்டை இராச்சியத்தில் இருந்த முஸ்லிம்களுக்கு எதிராக நடவடிக்கை எடுக்கும்படி புவனேகபாகு மன்னனைத் தூண்டினர். இதனால் கரையோரப் பகுதியில் இருந்த முஸ்லிம்களின் உதவி சீதாவாக்கை மன்னனுக்குக் கிடைத் தது. இலங்கையில் இருந்த முஸ்லிம்களின் வேண்டுகோளின் பேரில் இந்தியாவில் கள்ளிக் கோட்டையின் அரசனாக இருந்த சமோரின் போர்த்துக்கேயரைத் தாக்குவதற்கு சீதாவாக்கை மன்னனான மாயாதுன்னைக்குக் கடற்படை உதவி வழங்க முன்வந்தான். சமோரினினது உதவியுடன் மாயாதுன்னை போர்த்துக்கேயரைப் பலமுறை தாக்கியபோதிலும் போர்த்துக்கேயரிடமிருந்த கடற்படைப் பலத்தினதும் ஆயுதப் பலத்தினதும் முன்னால் இது வெற்றி பெறவில்லை.

புவனேகபாகு உயிரோடு இருந்த காலத்தில் சீதாவாக்கை இராசதானிக்கும் கோட்டை இராச தானிக்கும் இடையே சில மோதல்கள் ஏற் பட்டன. இந்த மோதல்களின்போது போர்த்துக் கேயர் கோட்டை இராச்சியத்தின் சார்பாகப் போரிட்டதுடன் போர்ச்செலவை மன்னன் கொடுக்கவேண்டியிருந்தது. புவனேகபாகு போர்த்துக்கேயரின் உதவியைப் பெற்றானேயன்றி அவர்களின் கீழ் இருக்கவில்லை. மன்னனைக் கத்தோலிக்க மதத்திற்கு மாற்ற போர்த்துக்கேயர் முயன்றபோதிலும் அவன் மதம் மாறவில்லை. இதனால் காலஞ் செல்ல போர்த்துக்கேயருக்கும் புவனேகபாகுவுக்கும் இடையே கருத்து முரண்பாடுகள் ஏற்படலாயின. சமயக் காரணங்கள் தவிர போர்த்துக்கேயர் தமது பொருள்களைக் கோட்டை இராச்சிய மக்க ளுக்கு அதிக விலைக்கு விற்றமையும் மக்களின் பொருள்களைக் குறைந்த விலைக்கு

வாங்கியமையும் கருத்து வேறுபாடுகளுக்குக் காரணங்களாக அமைந்தன. இந்த முரண்பாடுகள் புவனேகபாகு மன்னன் சுடப்பட்டு மரணமடைந்ததில் முடிவடைந்தது. குதோ என்ற போர்த்துக்கேய எழுத்தாளனின் கருத்துப்படி 1550 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 29 ஆந் திகதி அரசன் கொல்லப்பட்டான்.

புவனேகபாகு மன்னன் உயிரோடு இருக்கும் போது தனது பேரனான தர்மபாலனின் உருவச் சிலையொன்றைப் போர்த்துக்கலுக்கு அனுப்பி, அதற்கு முடிசூட்டுவித்ததன் மூலம் தர்ம பாலனுக்குப் போர்த்துக்கேயரின் பாதுகாப்புக் கிடைக்கும்படி செய்திருந்தான். இதனால் புவனேகபாகுவின் மரணத்தின் பின்னர் போர்த்துக் கேயரின் பாதுகாப்பின் மத்தியில் தர்மபாலன் கோட்டை இராச்சியத்தின் அரசனானான். தர்மபாலன் போர்த்துக்கேயரின் கைப்பொம்மை யாக விளங்கியமை, கத்தோலிக்க சமயத்தைத் தழுவியமை, தமது அரசில் கத்தோலிக்க சமயம் பரவிட அனுமதித்தமை கோட்டை இராச்சிய மக்களுக்குப் போர்த்துக்கேயரால் விளைந்த அநீதிகளைத் தடுப்பதற்கு நடவடிக்கை எடுக்காமை போன்ற காரணங்களால் தர்மபாலனுக்கு மக் களின் ஆதரவை இழக்கவேண்டிய நிலை ஏற்பட் டது. இதனால் புத்த பெருமானின் பற்சின்னத்தை பாதுகாப்பிற்காக சீதாவாக்கைக்குக் கொண்டு செல்லவேண்டிய நிலை உருவானது. 1551 - 1597 வரை தர்மபால மன்னன் பெயரளவில் அரசனாக இருந்தபோதிலும் கோட்டை இராச்சியத்தின் உண்மையான ஆட்சியாளர்களாகப் போர்த்துக் கேயரே இருந்தனர். தர்மபால மன்னன் தனக்குப் பின் கோட்டை இராச்சியம் போர்த்துக்கேயருக்கு சொந்தம் என மரணசாசனம் எழுதி வைத்ததால் அம்மன்னனின் மரணத்தின் பின்னர் கோட்டை இராச்சியம் சட்டரீதியான அதிகாரத்தின் மூலம் போர்த்துக்கேயருக்குச் சொந்தமானது.

### விதிய பண்டாரன்

புவனேகபாகுவின் மகளான சமுத்ராதேவியைத் திருமணம் செய்திருந்த விதியபண்டாரன் சிறந்த போர் வீரனாவான். தனது மகன் தர்மபாலனின் ஆட்சியின் ஆரம்பத்திலேயே போர்த்துக்கேயர் கோட்டையின் அரசமாளிகையைச் சூறை யாடியமை, பொதுமக்களுக்குப் பல்வேறு இன்னல்கள் விளைவித்தமை போன்ற காரணங்களால் விதியபண்டாரன் போர்த்துக் கேயருக்கு எதிராகக் கிளர்ந்தெழுந்தான், இதனால் போர்த்துக்கேயர் அவனைக் கைது செய்து கொழும்புக் கோட்டையினுள் சிறை வைத்தனர். எனினும் விதிய பண்டாரனின் மனைவி அவன் சிறை வைக்கப்பட்டிருந்த இடத் திற்கு இரகசியமாக சுரங்கப்பாதை அமைத்து அவனை விடுவித்தாள். பஸ்துன் கோறளையில் பெலந்த பிரதேசத்திற்குத் தப்பியோடிய விதியபண்டாரன், அங்கு கோட்டையொன்றை அமைத்துப் போர்த்துக்கேயருக்கு எதிராகப் போர் தொடுத்தான். போர்த்துக்கேயர் மீது வெறுப்புக் கொண்டிருந்த கோட்டை மக்க ளின் உதவியும் விதிய பண்டாரனுக்குக் கிடைத்தது. விதியபண்டாரனின் செயலால் போர்ததுக்கேயருக்குப் பலவித நட்டங்கள் ஏற்பட்டன. அவ்வாறே விதியபண்டாரனின் செயல் சீதாவாக்கை மன்னனுக்கும் பெரும் சிக் கலாக அமைந்தது. இதனால் மாயாதுன்னையும் போர்த்துக்கேயரும் இணைந்து பெலந்த கோட் டையை ஆக்கிரமித்து விதியபண்டாரனைத் தோற்கடித்தனர். கண்டி இராச்சியத்திற்குத் தப்பிச் சென்ற விதியபண்டாரன் பின்னர் யாழ்ப்பாணத் தில் இருக்கும்போது ஏற்பட்ட மோதலொன்றில் உயிரிழந்தான்.

### சீதாவாக்கை இராசதானி

சீதாவாக்கை மன்னனான மாயாதுன்னை, அந்த இராச்சியம் ஆரம்பமான காலந்தொடங்கி போர்த்துக்கேயருக்கு எதிரான கொள்கையையே பின்பற்றினான். கோட்டை இராச்சியத்தில் போர்த்துக்கேயரின் ஆதிக்கம் வலுவடைந்து வரும்போதே மாயாதுன்னை கோட்டை இராச்சிய மன்னர்களுக்கும் போர்த்துக்கேயருக்கும் எதி ராகப் போரிடத் தொடங்கினான். தர்மபாலன் கோட்டையின் அரசனானதும் மாயாதுன்னையின் தாக்குதல் அதிகமானது. 1555 ஆம் ஆண்டளவில் மாயாதுன்னையின் மகனும் சிறந்த வீரனுமான டிக்கிரி பண்டார சீதாவாக்கைப் படையின் தலைமைத்துவப் பதவியை வகித்ததால் அப்படை மேலும் வலிமை பெற்றது. 1557 ஆம் ஆண்டு மாயாதுன்னை தனது பலத்தைப் பயன்படுத்திக் கோட்டை நகரைத் தாக்கினான். எனினும் போர்த்துக்கேயரின் பீரங்கித் தாக்குதலால் சீதாவாக்கைப் படையினரால் நகரின் உள்ளே செல்ல முடியவில்லை. எனினும் மாயாதுன்னை



உரு. 10.2. கண்டி இராச்சியத் தலைவர்கள் கொழும்பில் ஒல்லாந்த ஆட்சியாளர்களைச் சந்தித்தல்

கோட்டை நகருக்கு வெளியேயுள்ள பிரதேசங்களை இடையிடையே தாக்கும் நடவடிக்கையை மேற்கொண்டான்.

கோட்டை நகரைத் தாக்கும் முயற்சி தோல்வியடைந்த பின்னர் சிறிதுகாலம் பாரிய தாக்குதல்களை மேற்கொள்வதைத் தவிர்த்துக் கொண்ட சீதாவாக்கை ஆட்சியாளர்கள், கோட்டையையும் கொழும்பையும் ஒரே வேளையில் தாக்க முயன்றனர். இதில் சீதாவக்கை இராஜசிங்கனால் முன்னெடுத்துச் செல்லப்பட்ட சீதாவாக்கைப் படைக்கும் போர்த்துக்கேயப் படைக்கும் இடையே முல்லேரியா என்ற இடத்தில் கடுஞ்சமர் நடைபெற்றது. ஒரு நாள் முழுவதும் நடைபெற்ற இப்போரில் போர்த்துக்கேயர் படுதோல்வி அடைந்தனர். இதில் இறந்த போர்த்துக்கேயரது எண்ணிக்கை 1600 எனக் கூறப்படுகிறது. இது ஆசிய நாடொன்றில் போர்த்துக்கேயர் அடைந்த மிக மோசமான தோல்வியாகும்.

கோட்டை நகர் இடையிடையே சீதாவாக்கையின் தாக்குதலுக்கு உள்ளானதால் 1565ஆம் ஆண்டு தர்மபாலன் கோட்டை நகரை விட்டுக் கொழும்புக் கோட்டையில் குடியேறினான். மாயாதுன்னை 1581 ஆம் ஆண்டு இறந்ததும், டிகிரி பண்டார இராஜசிங்கன் என்ற பெயரில் சீதாவாக்கையின் அரசனானான். அரசனாகி சிறிது காலத்தில் அவன், அக்காலத்தில் கண்டி இராச்சிய அரசனாக இருந்த கரலியத்த பண்டாரவைத் துரத்திவிட்டு அந்த இராச்சியத்தையும் சீதாவாக்கையுடன் இணைத்துக் கொண்டான். இதன்படி 1582 ஆம் ஆண்டாகும் போது இந்நாட்டில் போர்த்துக்கேயரின் அதிகாரத்தைக் கொழும்பு கோட்டையைச் சுற்றியுள்ள பிதேசங்களுக்கு மட்டும் மட்டுப்படுத்த சீதாவாக்கை மன்னன் இராஜசிங்கனால் முடியுமாக இருந்தது. இதனால் கோட்டை இராச்சியத்தின் பெரும்பகுதியும் றைகமையும் கண்டி இராச்சியமும் சீதாவாக்கையின் கீழ் வந்தன.

இராஜசிங்கன் இரண்டு சந்தர்ப்பங்களில் கொழும்புக் கோட்டையைத் தாக்கிப் போர்த்துகேயரை இந்நாட்டிலிருந்து துரத்த முயன்றான். எனினும் போர்த்துக்கேயரின் ஆயுத பலமும் போர்த்துகேயரின் கீழைத்தேய தலைமை நிலையமாக விளங்கிய கோவாவிலிருந்து அவர்களுக்குக் கிடைத்த உதவியும் இரண்டு சந்தர்ப்பங்களிலும் இராஜசிங்கனின் முயற்சி வெற்றியளிக்காமைக்கான காரணங்களாயின. இராஜசிங்கன் 1587 ஆம் ஆண்டு இரண்டாம் முறையாகக் கோட்டையைத் தாக்கும்போது வாவியின் நீரை வாய்க்கால் மூலம் கடலுக்கு அனுப்பி, கோட்டையுள் நுழைய முயன்ற போதிலும் அந்த முயற்சியும் தோல்வியில் முடிவடைந்தது. சீதாவாக்கை இராசதானியிடம் தேவையான கடற்படை வலிமை இன்மை இந்தத் தோல்விக்கு மற்றுமொரு காரணமாகும். போர்த்துக்கேயருக்கு எதிராக அடிக்கடி போரில் ஈடுப்பட்ட இராஜசிங்கன் கண்டி இராசதானியின் மன்னனான விமலதர்மசூரியனுடன் செய்த போரில் தோல்வியுற்றுத் திரும்புகையில் பெத்தங்

கொடயில் மூங்கில் சிராய் குத்தியதால் ஏற்பட்ட காயம் காரணமாக மரணமானான். அத்துடன் சீதாவாக்கை இராசதானி வீழ்ச்சியடைந்தது. இவ்வாறு போர்த்துக்கேயருக்கு எதிராக அடிக் கடி போரில் ஈடுபட்டமை, இராஜசிங்க மன்னன் தனது இறுதிக்காலத்தில் மேற்கொண்ட பௌத்த எதிர்ப்புக் கொள்கை, கண்டி இராச்சியத்தை கைப்பற்ற இராஜசிங்கனுக்கு உதவிய வீர சுந்தர பண்டாரவைக் கொன்றமையால் கண்டி இராச்சிய மக்களின் ஆதரவு குறைந்தமை, வீர சுந்தர பண்டாரவின் மகன் கோணப்பு பண்டாரன் கண்டி இராச்சியத்தின் அரசனாதல், இராஜசிங்கனுக்குப் பின்னர் ஆட்சிக்கு உரிமை கோர சரியான உரிமையாளன் இன்மை என்பன சீதாவாக்கை இராச்சியத்தின் வீழ்ச்சிக்கான காரணங்களாகும். சீதாவாக்கை மன்னர்கள் முன்னெடுத்துச் சென்ற போர்த்துக்கேயருக்கு எதிரான நாட்டுப் பற்றான போர்களினால் இந்நாட்டில் போர்த்துக்கேயரின் ஆட்சி பரவுதல் பெரும்பாலும் மட்டுப்படுத்தப் பட்டது.

சீதாவாக்கையின் வீழ்ச்சிக் காலத்தில் பலம் பெற்ற போர்த்துக்கேயர், அந்த இராச்சியம் வீழ்ச்சியுற்றதும் கோட்டை, றைகம ஆகிய பிரதே சங்களுக்குச் சொந்தமான பிரதேசங்களையும் சீதாவாக்கையின் கீழிருந்த பிரதேசங்களில் சிலவற் றையும் தமது ஆட்சிக்கு உட்படுத்திக் கரையோரப் பிரதேசத்தின் பெரும் பகுதியில் தமது ஆட்சியை நிலைநாட்டினர்.

### யாழ்ப்பாண இராச்சியம்

இராசரட்டை நாகரிகத்தின் வீழ்ச்சியின் பின்னர் தோற்றம்பெற்ற யாழ்ப்பாண இராச்சியத்தை ஆட்சி செய்தோர் ஆரியச் சக்கரவர்த்திகள் ஆவர். போர்த்துக்கேயர் இலங்கைக்கு வந்தபோது அப்பரம் பரையைச் சேர்ந்த பரராசசேகரம் யாழ்ப்பாண அரச னாக இருந்தான். கறுவா, மிளகு போன்ற வர்த்தகப் பயிர்கள் யாழ்ப்பாணப் பகுதியில் கிடைக்காததால் இலங்கைக்கு வந்த ஆரம்ப காலத்தில் போர்த் துக்கேயர் யாழ்ப்பாணத்தின்மீது அதிக கவனம் செலுத்தவில்லை. 1519 ஆம் ஆண்டு சங்கிலி யாழ்ப்பாணத்தின் ஆட்சியாளனாகி 1561 ஆம் ஆண்டு வரை அப்பிரதேசத்தை ஆட்சி செய்தான். சங்கிலி மன்னனின் ஆட்சிக் காலத்தில் போர்த்துக் கேயரின் வர்த்தகக் கப்பல்களுக்குத் தடை ஏற்பட்ட மையாலும் யாழ்ப்பாண இராச்சியத்திற்கு உரிய பிரதேசங்களில் கத்தோலிக்க சமயத்தைப் பரப்புவதற்கு எதிராகச் சங்கிலி அரசன் செயற்பட்டமையாலும் இரு தரப்பினருக்குமிடையே மோதல்கள் ஏற்பட்டன. 1543 ஆம் ஆண்டு போர்த்துகேயர் யாழ்ப்பாணத்தை ஆக்கிரமித்தனர். எனினும் சங்கிலி அரசன் போர்த்துக்கேயருடன் போர் செய்யாது கப்பம் செலுத்துவதற்கு உடன்பட்டதால் மோதல் தவிர்க் கப்பட்டது.

யாழ்ப்பாண மன்னருடன் சமாதானம் செய்த பின்னர் போர்த்துக்கேயக் குருமார் யாழ்ப்பாணப் பிரதேசத்தில் கத்தோலிக்க சமயத்தைப் பரப்புவதில் ஈடுப்பட்டனர். சைவக் குருக்கள் இதனை எதிர்த்ததால் சங்கிலி அரசன் மன்னார் பிரதேசத்தில் கத்தோலிக்க சமயப் பரப்புதலுக்கு தடை விதித் தான். மன்னாருக்கு மன்னன் படையுடன் சென்று கத்தோலிக்க சமயத்தைத் தழுவியோரைத் தமது பழைய சமயத்திற்கு மாறுமாறு கட்டளையிட் டான். அதனை மீறியோர் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர். மன்னார் பிரதேசத்தில் சமயப் பரப்புதலுக்கு அவன் பெரும் தடையாக இருந்ததால் யாழ்ப்பாண அரசனை ஆட்சியிலிருந்து நீக்குமாறு கத்தோலிக்க மறைபரப்புக் குருமார் போர்த்துக்கேயரிடம் வேண்டினர். இதனால் 1548 ஆம் ஆண்டு சங்கிலி அரசன் சீதாவாக்கை அரசனான மாயாதுன்னையுடன் கூட்டுச் சேர்ந்தான். போர்த்துக்கேயரின் பகைவனான விதிய பண்டாரன் யாழ்பாணத்திற்கு தப்பிச் சென்றபோது அவனை வரவேற்றான். எனினும் இவற்றினால் சாதகமான விளைவுகள் எவையும் ஏற்படவில்லை.

1560 ஆம் ஆண்டு போர்த்துக்கேயர் மீண்டும் யாழ்ப்பாணத்தை ஆக்கிரமித்தபோது அரசன் தலைநகரை விட்டுத் தப்பிச் சென்றான். பின்னர் அவன் போர்த்துக்கேயர் முன்வைத்த கடுமையான நிபந்தனைகளின் பேரில் அதிகாரத்தைத் தக்க வைத்துக் கொண்டான். இச்சந்தர்ப்பத்தில் மன்னாரைக் கைப்பற்றிய போர்த்துக்கேயர் அங்கு காவல்அரண் ஒன்றைக் கட்டினர். மன்னாரை இழந்தமை யாழ்ப்பாண அரசனுக்கு பெரும் நட்டமாகும். இதன் மூலம் குறிப்பிடத்தக்க அளவு நிலத்தை அவன் இழந்ததுடன் மன்னாரைச் சூழ முத்துக் குளித்தல் மூலம் பெற்ற வருமானத்தையும் இழக்க வேண்டிய நிலை ஏற்பட்டது.மேலும் மன்னாரிலிருந்து யாழ்ப்பாண அரசியலில் தலை யிடுவதற்குப் போர்த்துக்கேயருக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது.

1561 ஆம் ஆண்டு புவிராஜ பண்டாரம் என்பவன் சங்கிலி அரசனை ஆட்சியிலிருந்து நீக்கிவிட்டுத் தான் அதிகாரத்தைக் கைப்பற்றினான். இதன் பின்னர் யாழ்ப்பாண சிம்மாசனம் தொடர்பாக உரிமையுடையவர்களிடையே மோதல்கள் ஆரம்ப மாகின. இவ்வேளையில் சிலர் போர்த்துக்கேயரின் உதவியை நாடியதால் போர்த்துக்கேயர் தாம் விரும்பியவர்களை ஆட்சியில் அமர்த்துவதற்கு அவர்களுக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. அவ்வாறு ஆட்சியில் அமர்த்தப்பட்டவர்களும் சந்தர்ப்பம் வாய்க்கும்போது போர்த்துக்கேயருக்கு எதிராகச் செயற்பட்டமையால் 1591ஆம் ஆண்டு போர்த்துக் கேயர் மீண்டும் யாழ்ப்பாணத்தை ஆக்கிரமித்து எதிர்மன்னசிங்கம் என்பவனைத் தமக்குச் சார்பான ஆட்சியாளனாக சிங்காசனத்தில் அமர்த்தினர். அவன் போர்த்துக்கேயரின் சொற்படி செயற்பட்ட போதிலும், பல சந்தர்ப்பங்களில் கண்டி இராச்சிய அரசனான செனரத்திற்கு யாழ்ப்பாணக் கடல் எல்லையூடாக தென்னிந்தியாவுடன் வர்த்தகத் தொடர்புவைத்துக்கொள்ள இடமளித்தான். 1617ஆம் ஆண்டு அவன் இறந்ததும் மீண்டும் அங்கு ஆட்சி தொடர்பான மோதல்கள் ஏற்பட்டன. அதன் விளைவாக சங்கிலி அரசனின் பரம்பரையில் ஒருவன் யாழ்ப்பாண ஆட்சியைக் கைப்பற்றினான். யாழ்ப்பாண அரசர்கள் சிலர் சில சந்தர்ப்பங்களில் கண்டி அரசர்களுக்கு வர்த்தகம் தொடர்பாக துணை புரிந்தமையையும் தென்னிந்தியாவுடன் தொடர்பு வைத்திருந்தமையையும் போர்த்துக்கேயர் விரும்ப வில்லை. இதனால் 1619 ஆம் ஆண்டு பிலிப் த ஒலிவேரா தலைமையில் போர்த்துக்கேயரால் அனுப்பப்பட்ட படையினர் யாழ்ப்பாணத்தைக் கைப்பற்றினர். போர்த்துக்கேயருக்கு எதிராகச் சில கிளர்ச்சிகள் எழுந்தபோதிலும் அவற்றை அடக்கி 1621 ஆம் ஆண்டு யாழ்ப்பாண இராச்சியத்தை அவர்கள் கைப்பற்றினர். அரச உரிமை தொடர்பான மோதல்களால் மக்கள் பிளவுபட்டிருந்தமையும் சிறந் ததும் நிரந்தரமானதுமான படைப்பலம், யாழ்ப்பாண ஆட்சியாளர்களிடம் இல்லாதிருந்தமையும் கண்டி இராச்சியத்தைப்போன்று இயற்கை அரண்கள் இல்லாதிருந்தமையும் யாழ்ப்பாண இராச்சியத்தின் வீழ்ச்சிக்குக் காரணங்களாயின.

### கண்டி இராச்சியத்தில் போர்த்துக்கேயர் அதிகாரத்தை நிலைநாட்ட மேற்கொண்ட முயற்சி

சீதாவாக்கை இராசதானியின் வீழ்ச்சியுடன் கரையோரப் பிரதேசங்களின் பெரும்பகுதியில் போர்த்துக்கேயர் தமது அதிகாரத்தை நிலை நாட்டியதால் நாட்டின் சுயாதீனத்தைப் பாது காக்கும் பொறுப்பு கண்டி இராச்சியத்திற்கு ஏற்பட்டது. போர்த்துக்கேயர், ஒல்லாந்தர், ஆங்கிலேயர் ஆகியோரின் தாக்குதல்களுக்கு முகங்கொடுத்து 1815 ஆம் ஆண்டு வரை தமது பொறுப்பை நிறைவேற்றக்கூடுமானதாக கண்டி இராச்சியத்தினால் இருந்தது. கண்டி இராச்சியத்தில் போர்த்துக்கேயர் தமது அதிகாரத்தை நிலைநாட்ட முயன்றமையையும் அதற்கு எதிராகக் கண்டி இராச்சியத்தின் செயற்பாடுகளையும் இப்போது பார்ப்போம்.

போர்த்துக்கேயர் கோட்டை இராச்சியத்தின் அரசியலில் தலையிடும் காலகட்டத்திலேயே கண்டி இராச்சியத்தில் தமது அதிகாரத்தை நிலை நாட்டும் முயற்சியில் அவர்கள் ஈடுபட்டனர். 1 ஆம் விமலதர்மசூரியன் கண்டி இராச்சியத்தின் அரசனாவதற்கு முன்னர் கண்டி இராச்சியத்தைக் கைப்பற்றப் போர்த்துக்கேயர் மேற்கொண்ட முயற்சிகள் பற்றி 8 ஆம் பாடத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது.

### தந்துறைப் போர்

போர்த்துக்கேயரின் கீழ் சிறிது காலம் இருந்து, அவர்களது யுத்த முறைகளையும் ஏனைய உபாயங்களையும் நன்கு அறிந்து கொண்ட கோணப்பு பண்டாரன் விமலதர்மசூரியன் என்ற பெயரில் கண்டி இராச்சியத்தின் அரசனாகியதைப் போர்த்துக்கேயர் விரும்பவில்லை. இதனால் போர்த்துக்கேயரின் பாதுகாவலை நாடியிருந்த கரலியத்த பண்டாரவின் மகளான குசுமாசன தேவியைக் (தோனா கதரீனா) கண்டி இராச்சிய சிம்மாசனத்தில் அமர்த்தித் தாம் விரும்பியபடி ஆட்சிசெய்ய போர்த்துக்கேயர் விரும்பினர். 1594 ஆம் ஆண்டு போர்த்துக்கேயத் தளபதியான (கப்பித்தான் ஜெனரல்) பெரோ லோபேஸ்த சூசா தலைமையில் மேற்கொள்ளப்பட்ட ஆக்கிரமிப்பில் அவர்களால் குசுமாசன தேவியைக் கண்டி இராச்சிய அரசியாக நியமிக்கக்கூடியதாக இருந்தது. எனினும் வெளிநாட்டவரால் நியமிக்கப் பட்ட அரசியை ஏற்றுக்கொள்ள மறுத்த கண்டி இராச்சிய மக்கள், 1 ஆம் விமலதர்மசூரியனுக்கு ஆதரவு வழங்கினர். இதனால் பெரோ லோபேஸ் த சூசா தனது படையுடன் பின்வாங்க வேண்டிய

நிலை ஏற்பட்டது. 1594 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் தந்துறையில் போர்த்துக்கேயப் படைக்கும், கண்டி இராச்சியப் படைக்கும் இடையில் பெரும் போர் ஏற்பட்டது. இந்தப் போரில் போர்த்துக் கேயப் படை படுதோல்வியடைந்ததுடன் பெரோ லோபேஸ் த சூசாவும் கொல்லப் பட்டான். குசுமாசனதேவி கண்டி மக்களால் சிறைப்பிடிக்கப்பட்டதுடன், விமலதர்ம சூரியன் அவளைத் திருமணம் செய்து கொண்டான். இந்த விவாகத்தினால் கண்டி இராச்சியத்தில் புதிய அரச வம்சம் தோன்றியது. கண்டி இராச்சி யத்தில் தமக்குச் சாதகமான ஆட்சியை நிறுவ வேண்டுமென்ற போர்த்துக்கேயரது முயற்சி தோல்வியில் முடிவடைந்தது. விமலதர்ம சூரியனின் போர்த்தந்திரங்களும் கண்டி இராச்சிய மக்களின் ஆதரவு மன்னனுக்குக் கிடைத்தமையும், போர்த்துக்கேயரின் உதவிக்குக் கரையோரப் பகுதியிலிருந்து சென்ற சுதேசப் படை கண்டி இராச்சியப் படையுடன் சேர்ந்து கொண்டமையும் விமலதர்ம சூரியனின் வெற்றிக் குக் காரணங்களாயின.

### பலனைப் போர்

பெரோ லோபேஸ் த சூசா கொல்லப்பட்ட பின்னர் போர்த்துக்கேயரால் தொன் ஜெரோனி மோ த அசவேது என்பவன் கப்பித்தான் ஜெனரலாக நியமிக்கப்பட்டான். தந்துறையில் போர்த்துக் கேயர் தோல்வியடைந்ததும் எதிரில்லே ரால என்பவனின் தலைமையின்கீழ் அவர்களுக்கு எதிராக கரையோரப் பிரதேசத்தில் கிளர்ச்சி ஏற்பட்டது. இந்தக்கிளர்ச்சிக்கு விமலதர்ம சூரியனின் உதவி கிடைத்தது. போர்த்துகேயர் கிளர்ச்சித் தலைவனைக் கொன்று, கிராமங்களுக் குத் தீ மூட்டிக் கடுமையான அடக்குமுறை மூலம் கிளர்ச்சியாளர்களைத் தோற்கடித்தனர். மேலும் அசவேது கண்டி இராச்சியத்துடன் போர் செய்யத் தயாரானான். 1602 ஆம் ஆண்டு கோவாவிலிருந்து மேலதிகப் படையை வர வழைத்த அவன், ஆயிரக் கணக்கானோருடன் கண்டி இராச்சியத்தை ஆக்கிரமித்தான். எனினும் போர்த்துக்கேயரால் பலன கணவாய் வரை மாத்திரமே செல்லக்கூடியதாக இருந்தது. விமலதர்மசூரியனின் தந்திரத்தால் போர்த்துக் கேயப் படையைச் சூழ்ந்து கொண்ட கண்டி இராச்சியப்படை போர்த்துக்கேயப் படையைக் கடுமையாகத் தாக்கியது. போர்த்துக்கேயருடன் சென்ற கரையோர சுதேசப் படையினரும் விமல தர்ம சூரியனுடைய படையுடன் இணைந்தனர். இப்போரில் போர்த்துக்கேயரில் பலர் கொல்லப் பட்டதுடன், அவர்களின் ஆயுதங்களும் கண்டி இராச்சியப்படையால் கைப்பற்றப்பட்டன. இந்தத் தோல்வியின் காரணமாக அசவேது மல்வானை வழியாகக் கொழும்பை அடைந்தான். அசவேதுவின் ஆக்கிரமிப்புத் தோல்வியில் முடிவடைந்த பின்னர் பாரிய படையுடன் கண்டி இராச்சியத்தை ஆக்கிரமிப்பதற்குப் பதிலாகப் போர்த்துக்கேயர் இடையிடையே கண்டி இராச் சியத்தின் கிராமங்களைத் தாக்கி நட்டம் ஏற்படுத்தி வந்தனர். இதனால் விமலதர்மசூரியனுக்குப் பின்னர் கண்டி இராச்சிய மன்னனாக வந்த செனரத் 1617 ஆம் ஆண்டு போர்த்துக்கேயருடன் சமாதான உடன்படிக்கை செய்துகொண்டான். எனினும் அது சரியாகச் செயற்படவில்லை.

### ரந்தெனிவெலப் போர்

இலங்கையில் போர்த்துக்கேயரின் கப்பித்தான் ஜெனரலாகக் கடமையாற்றிய கொன்ஸ்தாந்தினு த சா என்பவன் ஊவாப் பிரதேசத்தின் ஊடாகக் கண்டியை ஆக்கிரமித்ததால் ரந்தெனிவெலப் போர் ஆரம்பமானது. 1630 ஆம் ஆண்டு ஜுலை மாதம் 600 போர்த்துக்கேய வீரர்களுடனும் 4500 சுதேசப்படை வீரர்களுடனும் கொன்ஸ்தாந்தினு த சாவின் தலைமையில் இந்தப் படையெடுப்பு நடைபெற்றது. போர்த்துக்கேயர் பதுளை நகரைக் கைப்பற்றி அதனை நாசமாக்கினர். கண்டி மன்னன் செனரத் தனது படையுடன் பதுளையை அடைந்து போர்த்துக்கேயருக்கு எதிராகத் தாக்குதலை மேற்கொண்டான். செனரத்தின் மகனான ஆஸ்தான இளவரசன் (பின்னர் 2ஆம் இராஜசிங்கன்) கண்டிப் படைக்குத் தலைமை வகித்தான். கண்டி இராச்சியப் படை போர்த்துக்கேயப் படையைச்சுற்றி வளைத்தபோது போர்த்துக்கேயரின் உதவிக்குச் சென்ற கரையோர முதலிமார் கண்டி மன்னனுடன் சேர்ந்து கொண்டனர். இதனால் பலம் வாய்ந்த கண்டி இராச்சியப் படையால் தாக்கப்பட்டு நிர்க்கதி அடைந்த போர்த்துக்கேயர் வெள்ளவாயாவிற்கு அருகில் ரந்தெனிவெலவுக்குப் பின்வாங்கினர். அங்கு கண்டி இராச்சியப்படையினரின் தாக் குதல்களுக்கு உள்ளாகிய போர்த்துக்கேயரில் 350 பேர் மட்டில் உயிரிழந்தனர். சிலர் கண்டி மக்களால் கைது செய்யப்பட்டனர். கப்பித்தான் ஜெனரல் கொன்ஸ்தாந்தினுவும் இங்கு கொல்லப்பட்டான்.

இந்தப்படையெடுப்பு திடீரெனப் போர்த்துக்கேயரால் மேற்கொள்ளப்பட்டதல்ல; இது இரண்டு வருடங்களாகத் திட்டமிட்டு மேற்கொள்ளப்பட்ட படையெடுப்பாகும். எனினும் கண்டிப் படையின் தந்திரமான செயற்பாடுகளால் இவை அனைத்தும் தோல்வியில் முடிவுற்றன.

### கன்னொறுவப் போர்

1638 ஆம் ஆண்டு மார்ச் மாதம், அப்போதைய போர்த்துக்கேய கப்பித்தான் ஜெனரலான தியோகோ த மெல்லோ என்பவனால் மீண்டும் கண்டிமீது படையெடுக்கப்பட்டது. ஆயிரம் போர்த்துக்கேயரைக் கொண்ட படையையும் மேலும் ஆயிரக்கணக்கானோரைக் கொண்ட சுதேசப் படையையும் கொண்டு முன்னோக்கிச் சென்ற போர்த்துக்கேயர் சிரமமின்றி கண்டி நகரில் நுழைந்தனர். மன்னன் செனரத்திற்குப் பின் ஆட்சிக்கு வந்த 2ஆம் இராஜசிங்கன் தந்திரமாக இவ்வேளையில் நகரிலிருந்து வெளியேறினான். தக்க தருணத்தில் மன்னனின் தலைமையிலான கண்டி இராச்சியப்படை போர்த்துக்கேயரைச் சுற்றி வளைத்தது. கன்னொருவையில் இரு தரப்பினருக்குமிடையே கடுஞ்சமர் நடைபெற்றது. கண்டியரின் வழமையான தாக்குதலால் இம்முறையும் போர்த்துக்கேயப்படை படு தோல்வி அடைந்தது. படையெடுப்புக்குத் தலைமை தாங்கிய தியோகோ த மெல்லோவும் இப்போரில் உயிரிழந்தான். இங்கு எஞ்சியிருந்த போர்த்துக்கேயர் பற்றி பலவிதமான கருத்துக்கள் முன் வைக்கப்பட்டுள்ளன. அவை அனைத்திலும் கூறப்பட்டுள்ளபடி எஞ்சியிருந்தோரின் தொகை நூறுக்கும் குறைவாகும். போர்த்துக்கேயர் கண்டி இராச்சியத்தைக் கைப்பற்ற மேற்கொண்ட இறுதிப் படையெடுப்பு இதுவாகும்.

போர்த்துக்கேயரால் கண்டி இராச்சியத்தின்மீது மேற்கொள்ளப்பட்ட அனைத்துப்படையெடுப்புகளும் தோல்வியடைந்தமைக்கும் கண்டி இராச்சியம் தொடர்ந்தும் பாதுகாப்புடன் இருந்தமைக்கும் பல காரணங்கள் உள்ளன. அவற்றில் பின்வருவன முக்கிய இடம்பெறுகின்றன.

- கண்டி மக்கள் எப்போதும் அரசனுக்கு ஆதரவு வழங்கியமை
- போர்த்துக்கேயருக்காகப் போராடச் சென்ற கரையோர சுதேசப்போர் வீரர்கள் கண்டி இராச்சியத்தை அண்மித்ததும் கண்டி அரசனுடன் இணைந்துகொண்டமை
- கண்டி மக்களின் போர்த்தந்திரமும் அரசர்களின் உபாயங்களும்
- கண்டி இராச்சியத்தின் இயற்கையமைப்பு

## 10.3. இலங்கையும் ஒல்லாந்தரும்

ஒல்லாந்தரின் தாய் நாடு ஒல்லாந்து ஆகும். போர்த்துக்கேயர் ஆசியாவுக்கு வந்து ஒரு நூற்றாண்டாகும்போது தமது கடல் வழியைத் தயார்செய்து கொண்ட ஒல்லாந்தர் ஆசியாவுக்கு வரத்தொடங்கினர். ஆரம்ப காலத்தில் ஒல்லாந்தில் இருந்த பல்வேறு வர்த்தக சங்கங்கள் ஆசியாவுக்கு வந்ததால் ஒல்லாந்த வர்த்தக சங்கங்களுக்கிடையே போட்டி நிலவியது. இதனால் கிழக்கில் பலம் வாய்ந்த அதிகாரத்தைக் கட்டியெழுப்ப ஒல்லாந்தரால் முடியவில்லை. எனவே 1602ம் ஆண்டு ஒல்லாந்த வர்த்தக சங்கங்கள் சிலவற்றை இணைத்து ஒல்லாந்த கிழக்கிந்திய வர்த்தக சங்கம் (VOC) நிறுவப்பட்டது. அது முதற் கொண்டு ஒல்லாந்தர் சார்பாக அவர்களது ஆசிய அரசியல், வர்த்தக செயற்பாடுகளை VOC முன்னெடுத்துச் சென்றது.வர்த்தக சங்கத்தின் முக்கிய குறிக்கோள் இலாபம் பெறுதலாக இருந்ததால் ஒல்லாந்தர் பிரதானமாகப் பொருளாதார ரீதியில் இலாபம் பெறுவதற்கே ஆசியாவுக்கு வந்தனர் என்பது தெளிவாகின்றது.

ஆசியாவுக்கு வந்த ஒல்லாந்தர் ஜாவாத் தீவில் பத்தேவியாவைத் தலைமையகமாகக் கொண்டு தொடர்ந்து தமது அதிகாரத்தைப் பரவலடையச் செய்யத் தொடங்கினர். ஒல்லாந்தர் ஆசியாவுக்கு வந்து சிறிது காலத்தில் சிறந்த வகையான கறுவா, மிளகு போன்ற வர்த்தகப் பொருள்களைக் கொண்ட இலங்கைமீது அவர்களது கவனம் சென்றது. போர்த்துக்கேயரால் மேற்கொள்ளப்பட்ட படையெடுப்பினால் இன்னல்களுக்கு உள்ளாகி இருந்த கண்டி இராச்சிய அரசர்கள் ஒல்லாந்தருடன் தொடர்பை ஏற்படுத்திக் கொள்ள விரும்பியதால் இங்கு வந்து இந்நாடு பற்றி மென்மேலும் அறிந்து கொள்ள ஒல்லாந்தரால் முடிந்தது.

1602ஆம் ஆண்டு ஒல்லாந்தத் தூதுவனான ஜோரிஸ்வான் ஸ்பில்பேர்ஜன் இலங்கைக்கு வந்து முதலாம் விமலதர்மசூரிய மன்னனைச் சந்தித்தான். அதன் பின்னர் சிபல் த வாட் என்ற மற்றுமொரு தூதுவன் வந்தான். எனினும் இந்தத் தூதுப் பயணங்களால் எவ்வித பலனும் கிடைக்கவில்லை. ஒல்லாந்தருக்கும் கண்டி

இராச்சிய ஆட்சியாளருக்குமிடையே பலன் தரும் தொடர்பு ஆரம்பமானது மன்னன் இரண்டாம் இராஜசிங்கனின் ஆட்சிக் காலத்திலாகும். போர்த்துக்கேயர் அடிக்கடி கண்டி இராச்சியத்துடன் போர்செய்ததால் அவர்களை இந்நாட்டிலிருந்து வெளியேற்றிவிடுவதே இரண்டாம் இராஜ சிங்க மன்னனின் குறிக்கோளாக இருந்தது. இதன் பொருட்டு தேவையான கடற்படை மன்னனிடம் இல்லாமையால் அவன் ஒல்லாந்தரின் துணையை நாடினான்.

இரண்டாம் இராஜசிங்க மன்னனுக்கும் ஒல்லாந்தருக்கும் இடையே நடைபெற்ற கடிதப் போக்குவரத்து, தூதுப் பயணம் என் பவற்றின் விளைவாகப் போர்த்துக்கேயரை இலங்கையிலிருந்து வெளியேற்றுவதற்கு உதவி செய்ய ஒல்லாந்தர் விரும்பினர். ஒல்லாந்தக் கடற்படை அதிகாரியான வெஸ்டர் வோல்டிற்கும் இலங்கைத் தூதுவர்களுக்கும் இடையிலான உடன் பாட்டின்படி 1638 ஆம் ஆண்டு இரு பிரிவினரும் ஒன்று சேர்ந்து மட்டக்களப்பில் போர்த்துக்கேயக் கோட்டையைத் தாக்கினர். எனினும் கடுஞ் சமர் ஏற்படுவதற்கு முன்னர் கோட்டையில் இருந்த போர்த்துக்கேயர் சரணடைந்தனர். இதனால் மகிழ்வுற்ற மன்னன் இரண்டாம் இராஜசிங்கன் ஒல்லாந்தருடன் உடன்படிக்கை ஒன்றில் கைச் சாத்திட்டான்.

### 1638 ஆம் ஆண்டு கண்டி - ஒல்லாந்த உடன்படிக்கையின் அடிப்படை விடயங்கள்

1. போர்த்துக்கேயரை இந்நாட்டிலிருந்து வெளியேற் றுவதற்குக் கண்டி அரசனுக்கு உதவ ஒல்லாந்தர் இணங்குதல்.

2. ஒல்லாந்தருக்கு ஏற்படும் செலவைப் பணம், பொருள்கள் (கறுவா,மிளகு,தேன், மெழுகு) என்ப னவற்றின் மூலம் செலுத்த அரசன் உடன்படல்.

3. யானை தவிர்ந்த கண்டி இராச்சியத்தின் ஏனைய வர்த்தகப் பொருள்களைப் பெற்றுக் கொள்ளல் தொடர்பான ஏகபோக உரிமை ஒல்லாந்தருக்குக் கிடைத்தல்.

4. போர்த்துக்கேயரிடமிருந்து கைப்பற்றிய கோட் டைகளில் அரசன் விரும்பினால் ஒல்லாந்தப் படை தங்கி இருக்கலாம்.

1638 ஆம் ஆண்டு மட்டக்களப்புக் கோட்டையைக் கைப்பற்றியது முதற்கொண்டு போர்த்துக்கேயரை இந்நாட்டிலிருந்து வெளியேற்ற மேலும் இருபது ஆண்டுகள் சென்றன. இக்காலத்தில் போர்த்துக் கேயரிடம் இருந்த திருகோணமலை, நீர்கொழும்பு, காலி, களுத்துறை, கொழும்பு, மன்னார், யாழ்ப்பாணம் ஆகிய கோட்டைகள் கண்டி இராச்சியப் படையினராலும் ஒல்லாந்தராலும் கைப்பற்றப்பட்டன. இவ்வாறு 1658 ஆம் ஆண்டு போர்த்துக்கேயரை முற்றிலும் இலங்கையிலிருந்து வெளியேற்றக்கூடியதாக இருந்தது. மன்னனுக்கும் ஒல்லாந்தருக்குமிடையே கைச்சாத்திடப்பட்ட உடன்படிக்கையின்படி போர்த்துக்கேயரிடமிருந்து கைப்பற்றப்பட்ட கோட்டைகளில் ஒல்லாந்தப் படையை நிறுத்துவது அரசனின் விருப்பப்படி நடைபெறவேண்டியிருந்தது. எனினும் அந்த வச னத்தை மறந்த ஒல்லாந்தர் பல காரணங்களை முன்வைத்துத் தமக்குச் சாதகமான பிரதேசங் களில் கோட்டைகளை மன்னிடம் ஒப்படைக்கத் தவறினர். இதனால் ஒல்லாந்தருக்கும் இரண்டாம் இராஜசிங்க மன்னனுக்கும் இடையில் நல்லெண் ணம் நிலவவில்லை.

II ஆம் இராஜசிங்க மன்னன் இரண்டு நோக்கங் களை நிறைவேற்றும் பொருட்டே ஒல்லாந்தரை இந்நாட்டிற்கு அழைத்தான்.

1. ஒல்லாந்தரின் உதவியுடன் போர்த்துக்கேயரை இலங்கையிலிருந்து வெளியேற்றுதல்

2. போர்த்துக்கேயரின் கீழிருந்த பிரதேசங்களைக் கண்டி இராச்சியத்துடன் இணைத்து சுதந்திர இலங்கையைத் தோற்றுவித்தல்.

இவற்றில் முதல் நோக்கத்தை மன்னனால் நிறைவேற்றிக்கொள்ள முடிந்தபோதிலும் போர்த்துக்கேயரிடமிருந்து கைப்பற்றப்பட்ட பல பிரதேசங்களில் ஒல்லாந்தரின் ஆதிக்கம் பரவியதால் இரண்டாவது நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ள முடியவில்லை. இதனால் அரசன் ஒல்லாந்தரைத் தாக்கி அவர்கள் பெறக்கூடிய பிரதேசங்களைக் குறைக்க வழிவகைகளை மேற்கொண்டான். அரச னின் இந்தச் செயலால் போர்த்துக்கேயரிடமிருந்த நிலப்பகுதியைவிடக் குறைந்த நிலப்பகுதியே 1658ஆம் ஆண்டளவில் ஒல்லாந்தருக்குக் கிடைத் தது.

முதலாம் விமலதர்ம சூரியனுக்குப் பின் கண்டி இராச்சியத்துக்கு முக்கிய இடத்தினைப் பெற்றுக் கொடுத்தவனே இரண்டாம் இராஜ சிங்கன் ஆவான். ஒல்லாந்தருடனான கடிதத்

தொடர்பின்போது தான் இலங்கையின் பேரரசன் என வெளிப்படுத்தினான். ஒல்லாந்தரும் தமது கடிதங்களில் மன்னனை '' திரீசிங்களாதீஸ்வர'' என்ற பெயரில் குறிப்பிட்டிருந்தனர். மன்னன் ஒல்லாந்தருக்குக் கடிதம் எழுதும்போது ''எனக்கு பணிபுரியும் நேசமான ஒல்லாந்தர்'' எனக் குறிப்பிட்டதோடு ஒல்லாந்தர் மன்னனுக்குக் கடிதம் எழுதும்போது ''தங்களின் பணிவான சேவகன்'' என்றும் குறிப்பிட்டனர். 1665 - 1668 வரையிலான காலப்பகுதியில் ஒல்லாந்தர் பல தாக்குதல்களை மேற்கொண்டு கண்டி இராச்சியத்தின் சில பகுதிகளைக் கைப்பற்றினர். எனினும் 1670 - 1675 இற்கும் இடைப்பட்ட காலப்பகுதியில் இரண்டாம் இராஜசிங்க மன்னன் மேற்கொண்ட பல தாக்குதல்களால் ஒல்லாந்தருக்குச் சொந்தமான பல பகுதிகளை அவர்கள் இழந்தனர். இதனால் கண்டி இராச்சியத்துடன் போர்செய்வது தமது அழிவுக்கு வழி வகுக்கும் என்பதைப் புரிந்து கொண்ட ஒல்லாந்தர் 1670ஆம் ஆண்டின் பின்னர் கண்டி இராச்சியத்துடன் மோதுவதைத் தவிர்த்துக் கொண்டனர்.

கண்டி இராச்சியம் தொடர்பாக ஒல்லாந்தரின் குறிக்கோளில் காணப்படும் சிறப்பியல்புகள்

I. ஒல்லாந்தக் கிழக்கிந்திய வர்த்தக சங்கத்திற்கு நட்டம் ஏற்படும் மோதல்களிலிருந்து விலகி, கண்டி இராச்சியத்துடன் சமாதானமாகச் செயற்பட ஒல்லாந்தர் முயன்றமை.

II. கண்டி இராச்சிய மன்னனின் நல்லெண்ணத்தைப் பெற்றுக் கொள்ளும் பொருட்டு மன்னனுக்கு பரிசில்கள் வழங்கியமை

III. மன்னனுடன் கடிதத்தொடர்பை ஏற்படுத்தியமை, இவற்றின் மூலம் அரசனின் நல்லெண்ணத்தைப்பெற்று, கண்டி இராச்சியத்தில் விளையும் கறுவாவைப் பெற்றுக் கொள்ளல் ஒல்லாந்தரது நோக்கமாக இருந்தது.

IV. உபசம்பதா சடங்கின் பொருட்டு அரசனுக்குக் கப்பல்களைக் கொடுத்து உதவியமை. இரண்டாம் விமலதர்மசூரியன், விஜய இராஜசிங்கன், கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்கன் ஆகிய மன்னர்களுக்கு ஒல்லாந்தர் இவ்வாறு கப்பல்களைக் கொடுத்து உதவினர்.

**உச்ச நிலையிலான வர்த்தக இலாப மீட்டுவதில் ஒல்லாந்தரின் குறிக்கோள்**

I. கண்டி இராச்சிய மன்னன் வேறு வெளிநாட்டவருடன் வர்த்தகத் தொடர்பினை ஏற்படுத்திக்கொள்வதை ஒல்லாந்தர் கூடியளவு தடை செய்தனர்.

II. மன்னனுடன் கருத்து வேறுபாடு ஏற்படும் சந்தர்ப்பங்களில் கண்டி இராச்சியத்திற்கும் கரையோரப் பிரதேசங்களுக்கும் இடையிலான கடவைகளை மூடி விடுதல்

III. கரையோரப்பிரதேசத்தில் சில இடங்களில் நெற்பயிர்ச் செய்கையை முன்னேற்ற ஒல்லாந்தர் நடவடிக்கை எடுத்தல். இதன் மூலம் வெளிநாடுகளிலிருந்து நெல் இறக்குமதி செய்ய செலவாகும் செலவினைக் குறைத்தல்.

IV. கறுவா பயிரிடவும் அதனைப் பாதுகாக்கவும் நடவடிக்கை எடுத்தல், கறுவா பயிர்ச் செய்கையால் ஒல்லாந்தர் அதிக இலாபத்தைப் பெற்றுக் கொள்ளக்கூடியதாக இருந்ததால் அவர்கள் இதனை செயற்படுத்தினர்.

V. ஒல்லாந்தருக்கு இலாபம் கிடைக்கும் கரும்பு, கோப்பி, பருத்தி என்பவற்றைப் பயிர்செய்ய நடவடிக்கை எடுத்தல்.

## கண்டி இராச்சியத்திற்கும் ஒல்லாந்தருக்கும் இடையிலான மோதல்கள்

ஒல்லாந்தரது ஆட்சியால் துன்புற்ற கரையோர மக்கள் தமக்கு உதவும்படி கண்டி மன்னனான கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்கனை வேண்டினர். 1760 ஆம் ஆண்டுகளின் இறுதியில் நீர்கொழும்பு, மாத்தறை ஆகிய பிரதேசங்களில் ஒல்லாந்தருக்கு எதிராகக் கலகங்கள் ஏற்பட்டன. கண்டி மன்னன் கலகொட அதிகாரம் என்பனின் கீழ் கரையோரப்பிரதேசத்திற்குப் படையொன்றை அனுப்பினான். அந்தப் படையினர் திடீர் தாக்குதல் சிலவற்றை நடாத்தி, கட்டுவன கோட்டை, மாத்தறைக்கோட்டை உட்பட சில இடங்களைக் கைப்பற்றினர். பின்னர் ஒல்லாந்தர் இவ்விடங்களை மீண்டும் கைப்பற்றிக் கொண்டனர்.




*தேசப்படம் 10.1. இலங்கையில் ஒல்லாந்த கோட்டைகள் அமைந்த இடங்கள்*

1764 ஆம் ஆண்டு ஒல்லாந்த ஆளுனரான பெரன் வென் எக் என்பவனின் தலைமையில் ஆறு படைப் பிரிவுகளின் மூலம் கண்டி இராச்சியம் ஆக்கிரமிக்கப்பட்டது. எனினும் இவைகளில் ஒன்றும் கண்டியை அடையவில்லை. வழமையான தாக்குதல் மூலம் கண்டி மக்கள் இப்படைகளைத் தோல்வியுறச் செய்தனர்.

1765 ஆம் ஆண்டு ஒல்லாந்தர் மீண்டும் கண்டி இராச்சியத்தைத் தாக்கத் தொடங்கினர். கண்டி மக்களின் தாக்குதல்களுக்கு முகங் கொடுத்து ஒல்லாந்தர் இம்முறை கண்டியினுள் சென்றனர். மன்னன் கீர்த்தி ஸ்ரீ இராஜ சிங்கன் சமாதானம் செய்து கொள்ள விருப்பம் தெரிவித்ததால் ஒல்லாந்தர் தமக்குச் சாதக மான பல நிபந்தனைகளை முன்வைத்தனர். எனினும் ஒல்லாந்தரால் முன்வைக்கப்பட்ட நிபந்தனைகள் நியாயமானவை அல்லாததால் அந்த நிபந்தனைகளை ஏற்றுக் கொள்ள மன்னன் விரும்பவில்லை. இதனால் ஒல்லாந்தர் நகரைச் சூறையாடி ஒரு மாதத்திற்கு மேல் அங்கு தங்கியிருந்தனர். எனினும் உணவுப் பற்றாக்குறை, நோய், மழை என்பன காரணமாக அவர்கள் கண்டியைக் கைவிட்டு மீண்டும் கொழும்புக்கு வந்தனர்.

ஒல்லாந்தரின் படையெடுப்பு, அச்சுறுத்தல் என்பனவற்றால் பல ஆண்டுகள் துன்புற்றதால் 1766 ஆம் ஆண்டு கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்கன் ஒல்லாந்தருடன் சமாதான உடன்படிக்கை ஒன்றில் கைச்சாத்திட்டான். 1766 ஆம் ஆண்டு உடன்படிக்கையினால் கண்டி இராச்சியம் கரையோரப்பகுதியை இழந்தது. கண்டி இராச்சிய மரபு ரீதியான வர்த்தகத்திற்கு இதனால் தாக்கம் ஏற்பட்டது. இலங்கையில் ஒல்லாந்தரின் கீழிருந்த பகுதிகளின் உரிமை இந்த உடன்படிக்கையின் மூலம் ஏற்றுக் கொள்ளப் பட்டது. உடன்படிக்கையில் உள்ளடக் கப்பட்ட பல நிபந்தனைகள் ஒல்லாந்தருக்கு சாதகமாக இருந்தன. இதனால் உடன்படிக்கையின் நிபந்தனைகளைத் தளர்த்துவதற்குக் கண்டி மக்கள் ஒல்லாந்தருடன் பேச்சு வார்த்தைகள் நடாத்திய போதும் ஒல்லாந்தர் அதற்கு இணங்கவில்லை. இறுதியில் அதனை நடைமுறையில் செயலிழக்கச் செய்வதற்கு மக்கள் நடவடிக்கைகளை மேற் கொண்டனர்.

**முக்கிய விடயங்கள்**

1. பொருளாதார ரீதியில் இலாபம் பெறல் மதத்தைப் பரப்புதல் போன்ற குறிக்கோள்களுடன் ஐரோப்பியர் ஆசியாவுக்கு வந்த போதிலும், ஐரோப்பாவில் நிகழ்ந்த மாற்றங்களுடன் அவர்களது குறிக்கோள்கள் மாற்றமடைந்தன.
2. போர்த்துக்கேயர் இலங்கைக்கு வரும் போது இங்கு அரசியல் ஒற்றுமை காணப்படா மையானது அவர்கள் தம் ஆட்சியை இங்கு ஏற்படுத்த உதவியது.
3. கோட்டை இராச்சிய மன்னனான தர்மபாலன் போர்த்துக்கேயருக்கு சாதகமாக செயற்பட்ட தால் அங்கு முதன் முதல் போர்த்துக் கேயரது ஆட்சி நிலைபெற்றது.
4. *16* ஆம் நூறறாண்டில் சீதாவாக்கை ஆட்சியாளர் போர்ததுக்கேயருக்கு எதிராகப் போரிட்டனர்.
5. கண்டி இராச்சியத்தில் போர்த்துக்கேயரது ஆட் சியை நிலை நாட்ட முயன்றதால் கண்டி இராச்சியத்திற்கும், போர்த்துக்கேயருக்கும் இடையே போர்கள் நடைபெற்றன.
6. கண்டி இராச்சிய ஆட்சியாளர்கள் போர்த்துக் கேயரை இலங்கையிலிருந்து வெளியேற்ற ஒல்லாந்தரின் உதவியைப் பெற்றுக் கொண்டனர்.
7. கண்டி அரசர்களுக்கும் ஒல்லாந்தருக்கும் இடையில் பல மோதல்கள் ஏற்பட்டன.

**செயற்பாடு**

1. கோட்டை, யாழ்ப்பாணம் ஆகிய இராச் சியங்களில் நிலவிய உள்நாட்டுப் பூசல் களே அந்த இராச்சியங்கள் போர்த்து கேயரின் ஆட்சியின்கீழ் வருவதற்கான காரணிகளில் ஒன்றாகும். ஒரு நாட்டின் ஒற்றுமையின்மை அந்நாட்டின் அழிவுக் குக் காரணமாக அமையும் என்பதனை இதன் பின்னணியில் தெளிவுபடுத்துக.
2. போர்த்துக்கேயர் இலங்கைக்கு வந்தபோது இலங்கையில் நிலவிய அரசியல் நிலை மையை விளக்குக.

Bandaranayake S., 1992. 'The Settlement Patterns of the Proto historic and Early historic interface in Sri Lanka'. South Asian Archaeology 1989 Papers from the Tenth International Conference of South Asian Archaeologists in Western Europe, Musee National Des Arts Asiatiques Guimet, Paris, France, 3-7 July 1989. Monograph in World Archaeology No 14.

Bandaranayake S., 2012 (reprint). 'Feudalism revisited: problems in the characterization of historical societies in Asia - the Sri Lankan configuration'. Continuities and Transformations. Studies in Sri Lankan Archaeology and History. Colombo: Social Scientists Association.

Deraniyagala S., 1988. Prehistory of Sri Lanka. an ecological perspective. Cambridge: Harvard University
Ellepola C., 1990. 'Conjectured Hydraulics of Sigiriya'. Ancient Ceylon No.11, 169-228pp.

Gunawardhana R.A.L.H., 1982. 'Prelude to the State: An Early phase in the Evolution in Ancient Sri Lanka'. The Sri Lanka Journal of the Humanities Vol. VIII. 1&2, 1-30pp.

Gunawardhana R.A.L.H., 1983. 'Cistern Sluice and Piston Sluice' (Some observation on Types of Sluices and Method of Water distribution in Pre-Colonial Sri Lanka). The Sri Lanka Journal of the Humanities IX (1&2), 87-104pp.

Lakdusnghe S., 1994. 'Oil Lamp'. Sacred Images of Sri Lanka. Sydney: The Art Gallery of New South Wales

Paranavitana S., 1970. Inscriptions of Ceylon. Brahmi Inscriptions, Part I. Colombo: Department of Archaeological Survey

Paranavitana S., 1983. Inscriptions of Ceylon. Later Brahmi Inscriptions. Colombo: Department of Archaeological Survey.

Premathilake R., 2003. Late quaternary Palaeoecological event Stratigraphy in the Horton Plains, Central Sri Lanka with contribution to the recent pollen flora. Stockholm: Department of Physical Geology

Somadeva R., 2010. Archaeology of the Uda Walave Basin. Colombo: Postgraduate Institute of Archaeology